இளைய பாரத நூலகம்

# டோட்டோ-சான்

## ஜன்னலில் ஒரு சிறுமி



ஜப்பானிய மொழியில்

டெட்சுகோ குரோயாநாகி

தமிழில்

அ.வள்ளிநாயகம்

சொ.பிரபாகரன்

படங்கள்

சிஹிரோ இவாஸாகி



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

# நூலைப்பற்றி

இந்த நூலில் உள்ள இளமைக்கால அனுபவங்களின் தொகுப்பு இரண்டாம் உலக யுத்தகளத்தில் டோக்கியோவில் இருந்த ஒரு முன்மாதிரியான பள்ளியைப் பற்றிக் கூறுகிறது. அப்பள்ளியில் கற்பதில் மகிழ்ச்சி, சுதந்திரம், அனபு அடங்கியிருந்தன. வழக்கத்திற்கு மாறான இப்பள்ளியில் பழைய ரயில் பெட்டிகளே வகுப்பறைகளாக இருந்தன. அப்பள்ளி, வித்தியாசமான ஒருவரால், அப்பள்ளியை நிறுவியவரும் தலைமை ஆசிரியருமான திரு. கோபயாஷி என்பவரால் நடத்தப்பட்டது. அவர், கருத்துக்கள் வெளியிடுவதிலும், செயல்படுத்துவதிலும் குழந்தைகளுக்கு முழுச் சுதந்திரம் இருக்க வேண்டுமெனத் திடமாக நம்பியவர்.

இந்நூலில் வரும் சிறுமி டோட்டோ-சான், உண்மை வாழ்வில் டெட்சுகோ குரோயாநாகி, ஜப்பானின் தொலைக் காட்சியில் தோன்றும் புகழ்பெற்ற ஒருவராய் உள்ளார். இவர் தனது வெற்றிக்குக் காரணம் அற்புதமான அப்பள்ளியும் அதன் தலைமை ஆசிரியருந்தான் எனக் கூறுகிறார்.

பல்வேறுபட்ட வயதுடைய மக்களின் மனதைக் கவர்ந்த இந்நூல் ஜப்பானில் மிகச் சிறந்த விற்பனையைப் பெற்றுள்ளது. இந்நூல் வெளிவந்த முதல் ஆண்டிலேயே அதன் விற்பனை 45 மில்லியன் மார்க்குகளை எட்டியுள்ளது.

# நூலாசிரியர்

1975 முதல் ஜப்பான் தொலைக்காட்சியில் 'டெட்சுகோ அரங்கம்' எனும் பேசும் பகுதியை வழங்கி வருகிறார். சமீபத்தில் தொலைக்காட்சியின் உயர்ந்த பரிசை பெற்றவர். இப்பகுதியும், இவர் வரும் பிறகாட்சிகளும் தொலைகாட்சியில் காண்போரின் எண்ணிக்கையை அதிகம் கொண்டது. இவர் தன் வாழ்வைச் சேவைப்பணிக்கும் அர்ப்பணித்துள்ளார். அமெரிக்காவின் காதுகேளாதோர் தேசிய நாடகக்குழுவை இருமுறை ஜப்பானுக்கு வரவழைத்து அவர்களுடன் சைகை மொழியில் நடித்தவர். இவரது நூல் உரிமைத்தொகையில் நிறுவப்பெற்ற டோட்டோ-சான் அறக்கட்டளை நிதியம், காது கேளாத நடிகர்களுக்குத் தொழிற்பயிற்சி அளிக்கிறது. அவர்களுடன் இவர் அடிக்கடி தொலைக்காட்சியில் தோன்றுவார். 'செங்கரடிப் பூனையும் நானும்' என்ற நூலின் ஆசிரியர். பேராற்றல் வாய்ந்த செங்கரடிப் பூனைகளை, நீண்டகால ஆர்வத்தோடு பாதுகாப்பவராகவும், ஜப்பானின் உலக வனவிலங்கு நிதியத்தின் இயக்குநராகவும் உள்ளார்.

டோக்கியோவில் பிறந்த டெட்சுகோ குரோயாநாகி, ஜப்பானின் தொலைக்காட்சியில் தோன்றும் சிறந்த நபராகத் தொடர்ந்து ஐந்து ஆண்டுகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளவர். டோக்கியோ இசைக் கல்லூரியில் இசை நாடகப் பாடகியாகப் பயின்று நடிகையானவர். சிறந்த தொலைக்காட்சிப் பணிக்கான பரிசும் பெற்றவர். படிப்பதற்காக நியூயார்க் சென்று வந்தவர்.

# பொருளடக்கம்

# என்னுரை

டோமோயி என்ற பள்ளியைப் பற்றியும், அதை உருவாக்கி நடத்திவந்த சோசாகு கோபயாஷியைப் பற்றியும் எழுதுவது என்பது நான் நீண்ட நாட்களாக விருப்பத்துடன் செய்ய விரும்பிய ஒரு செயலாகும்.

இதில் எந்த அனுபவமும் நானாகக் கற்பனையில் எண்ணிக் கண்டுபிடித்ததல்ல. அவை யாவும் உண்மையிலேயே நடந்தவை. அவற்றில் சிலவற்றை நான் நன்றியுடன் நினைவுகூர முடிந்தது. இவற்றை எழுத விரும்பியதற்குப் பின்னால், நிறைவேற்ற முடியாத எனது உறுதிமொழியை ஈடுகட்டும் எதிர்பார்ப்பும் இருந்தது.

இதில் ஒரு அத்தியாயத்தில், நான் வளர்ந்தபின் அப்பள்ளியில் ஆசிரியை ஆவதாக திரு. கோபயாஷிக்குக் குழந்தைத்தனமாக உறுதிமொழி அளித்ததைக் குறிப்பிட்டுள்ளேன். இருந்தபோதிலும் அந்த உறுதிமொழியை என்னால் நிறைவேற்ற முடியவில்லை. அதற்குப் பதிலாக, அவருக்குள்ள ஈடுபாட்டையும், அவர் குழந்தைகளுக்கு எவ்வாறு கற்பித்தார் என்பதையும் எவ்வளவு பேருக்கு உணர்த்த முடியுமோ அவ்வளவிற்கு முயற்சி செய்துள்ளேன்.

திரு. கோபயாஷி 1963-ல் இறந்தார். அவர் இப்பொழுது உயிரோடிருந்தால், அவர் எனக்குச் சொல்வதற்கு இதைவிட அதிகம் செய்திகள் இருந்திருக்கும். நான் இதை எழுதும்போதுகூட, இந்த அனுபவங்கள் மகிழ்ச்சி தரும் குழந்தைக்கால அனுபவங்களாக மட்டுமல்லாது, எதிர்பார்க்கும் விளைவை எட்ட எவ்வளவு சரியாக அவரால் திட்டமிடப்பட்டுள்ளது என்பதையும் நான் உணர்ந்ததுண்டு. "ஆகையால் இதைத்தான் அவர் தன் மனதில் நினைத்திருக்க வேண்டும்" என நான் எனக்குள்ளாகவே நினைத்துக் கொள்வதுண்டு. அல்லது நான் நினைப்பது கற்பனையாகக்கூட இருக்கலாம். இவ்வெண்ணங்களோடு நான் காணும் ஒவ்வொன்றும் என்னை வியக்கச் செய்யும். நன்றியுணர்வு என் மனதை அசைக்கும்.

என் சொந்த விஷயத்தில் கூட, அவர் அடிக்கடி என்னிடம் கூறுகின்ற, "நீ உண்மையிலேயே நல்ல பெண்தான். உனக்குத் தெரியுமா?" என்ற சொற்கள் என் மனதிற்கு எவ்வளவு வலுவூட்டின என்பதை என்னால் கணக்கிட இயலாது. நான் டோமோயிற்குச் செல்லாது இருந் திருந்தாலோ திரு. கோபயாஷியைச் சந்திக்காது இருந்திருந்தாலோகூட "மோசமான பெண்" என முத்திரை குத்தப்பட்டு குழப்பமும், மன அழுத்தமும் நிறைந்தவளாய் ஆகியிருப்பேன்.

டோமோயி, குண்டு வீச்சு விமானங்கள் டோக்கியோவை 1945-ல்

தாக்கிய பொழுது தீயில் எரிந்து அழிந்தது. திரு. கோபயாஷி அதைத் தனது சொந்தப் பணத்தில் கட்டியிருந்தார். எனவே, அதை மீண்டும் உருவாக்க கால அவகாசம் தேவைப்பட்டது. போருக்குப் பின்னால் அவர் அதே இடத்தில் மழலையர் பள்ளி வைத்திருந்தார். அதே நேரத்தில் குனிடாச்சி இசைக் கல்லூரியில் குழந்தைகள் கல்வித் துறையை உருவாக்கவும் உதவி வந்தார். அவர் அங்கு இசை உடலிசைவுப் பயிற்சியையும் கற்றுத் தந்தார். அத்துடன் குனிடாச்சி மழலையர் பள்ளியிலும் கற்பிக்க உதவி வந்தார். அவரது எண்ணத்தில் உருவான பள்ளியை மீண்டும் ஒருமுறை உருவாக்கும் முன்பே அவர் தனது 69-வது வயதில் காலமானார்.

டோமோயி ஹாகுன் டோக்கியோவிற்குத் தென்மேற்குத் திசையில் ஜியுகோகா ரயில் நிலையத்திலிருந்து மூன்று நிமிட நேரத்தில் நடந்து செல்லும் தூரத்தில், டோயொகா செல்லும் வழியில் இருந்தது. தற்போது அந்த இடம் 'பீக்காக் சூப்பர் மார்க்கெட்' நிறுவனத்தாரிடம் உள்ளது. அவர்கள் அதை வாகனங்கள் நிறுத்தும் இடமாகப் பயன்படுத்துகின்றனர். அந்த மைதானத்தின் ஒவ்வொரு பகுதியையும் நான் நன்கு அறிந்திருந்தாலும் என் தாயகத்தைப் பார்க்க வேண்டுமென்ற எண்ணம் எனக்குத் திடீரெனத் தோன்றியதால் நான் அங்கு சென்றிருந்தேன். வாகனங்கள் நிறுத்தப் பட்டிருந்த அந்தப் பகுதிக்குள், ரயில்பெட்டி வகுப்பறைகளும், விளை யாட்டு மைதானமும் இருந்த இடத்தில், எனது வாகனத்தை மெதுவாக ஓட்டிச் சென்றேன். அந்த இடத்தைக் கவனித்துக் கொண்டிருந்தவன், "இங்கு நிறைந்து விட்டது. இடமில்லை. உள்ளே வரவேண்டாம். உள்ளே வரவேண்டாம்", எனக் கத்திக் கொண்டே வந்தான்.

"நான் என் வாகனத்தை நிறுத்த வரவில்லை. என் மலரும் நினைவுகளைப் புதுப்பித்துக்கொள்ள வந்தேன்", எனச் சொல்லியது போல் உணர்ந்தேன். அவனால் அதைப் புரிந்துகொள்ள இயலவில்லை யென்பதால் நான் அவனைக் கடந்து சென்றேன். ஆனால் என்னால் என் துயரத்தைக் கட்டுப்படுத்த இயலவில்லை. கண்களில் கண்ணீர் வடிந்தது. என் வாகனத்தின் வேகமும் அதிகரித்தது.

உயர்ந்த குறிக்கோள்களுடன், குழந்தைகளை மிகவும் நேசிக்கக்கூடிய நல்ல கல்வியாளர்கள் பலர், முன்மாதிரியான பள்ளிகளை உருவாக்க நினைப்பவர்கள் இன்னும் உலகம் முழுவதும் உள்ளனர். ஆனால் அவர் களின் கனவை நனவாக்குவது எவ்வளவு சிரமம் என்பது எனக்குத் தெரியும். திரு. கோபயாஷி, 1937-ல் டோமோயியை உருவாக்குவதற்கு முன், பல ஆண்டுகள் அதற்கான பயிற்சியையும், தயாரிப்பையும் செய்தார். டோமோயி 1945-ல் எரிந்து விட்டது. எனவே, அப்பள்ளி மிகக் குறைந்த காலமே இருந்தது.

திரு. கோபயாஷியின் கல்வித் திட்டம் முழு அளவில் செயல்பட்டுக் கொண்டிருந்தபோது, அவர் உற்சாகத்தின் உச்சநிலையில் இருந்தபோது, நான் அங்கு பயின்ற காலமும் அமைந்தது என நம்புகிறேன். ஆனால் யுத்தம் வராது இருந்திருந்தால் அவரது கவனிப்பில் எத்தனை குழந்தைகள் வளர்ந்திருப்பார்கள் என நினைக்கும்போது என்னால் என் துயரத்தை அடக்க முடியவில்லை. திரு. கோபயாஷியின் கல்வி முறையை நான்

இந்தப் புத்தகத்தில் விளக்க முயன்றிருக்கிறேன். குழந்தைகள் அனைவருமே உள்ளார்ந்த நல்ல இயல்புடன்தான் பிறக்கிறார்கள். அவர்கள் வளரும் சூழலும், பெரியவர்களின் தாக்கமும், குழந்தைகளின் உள்ளார்ந்த நல்லியல்புகளைச் சீரழித்து விடுகின்றன என திரு. கோபயாஷி திடமாக நம்பினார். அவருடைய நோக்கமெல்லாம் இந்த உள்ளார்ந்த நல்லியல்பைப் பாதுகாத்து வளர்க்க வேண்டுமென்பதும், குழந்தைகள் தங்கள் தனித் தன்மைகளுடன் வளர அனுமதிக்க வேண்டுமென்பதுதான்.

திரு. கோபயாஷி இயற்கையான தன்மையை மிகவும் நேசித்தார். குழந்தைகளின் பழக்கவழக்கங்கள் இயற்கையாகத் தானாகவே வளர்ச்சி பெற வேண்டுமெனவும் விரும்பினார். அவர் இயற்கையையும் முழுமையாக நேசித்தார். அவரது இளைய மகள் மியோ-சான், சிறுமியாக இருக்கும் பொழுது தனது தந்தை தன்னை உலாவ அழைத்துச் செல்லும் வழக்கம் உண்டென்றும், "இயற்கையின் ஒழுங்குத் தன்மையைக் காண நாம் போகலாம் எனக் கூறுவார்" என்றும் அவள் தெரிவித்துள்ளாள்.

அவர், அவளை மிகப் பெரிய மரத்தின் அடியில் நிற்கவைத்து, அம்மரத்தின் கிளைகளும், இலைகளும் அமைந்துள்ள தன்மையையும், இளம் காற்றில் அவை கட்டுப்பாடின்றி அலைவதையும் காணச் செய்வார். இலைகள் காற்றின் தன்மைக்கேற்ப அலைவதையும், இலைகளுக்கும், கிளைகளுக்கும் உள்ள தொடர்பையும், கிளைகளுக்கும் அடிமரத்திற்கும் உள்ள தொடர்பையும் அவர் விளக்கினார். காற்று அடிக்காத நேரத்தில் இலைகள் காற்றிற்காக வானம் பார்த்து ஏங்குவதாகவும், அமைதியாகப் பொறுத்திருப்பதாகவும் கூறுவார். அவர்கள் வானையும், காற்றையும் மட்டும் பார்க்க மாட்டார்கள். நதிகளையும் பார்ப்பதுண்டு. அவர்கள் அருகில் உள்ள டாமா நதிக்குச் செல்வதுண்டு. அங்கு நீர் ஓடும் அழகைப் பார்ப்பார்கள். இதுபோன்ற இயற்கையை ரசிக்கும் செயல்களில் அவர்கள் சலிப்படைவதே இல்லையென அவள் கூறியுள்ளாள்.

ஜப்பானில், அதுவும் யுத்த நேரத்தில், இவ்வளவு சுதந்திரமான ஒரு பள்ளியை அதிகாரிகள் எப்படி அனுமதித்திருப்பார்கள் என வாசகர்கள் வியக்கலாம். திரு. கோபயாஷி விளம்பரத்தை விரும்புவதில்லை. யுத்தம் நடைபெறும் முன், அப்பள்ளி நடைமுறைகளிலிருந்து விலகி தனித்தன்மையுடன் செயல்படுவது குறித்து புகைப்படங்கள் கூட எடுக்க அனுமதித்ததில்லை. ஐம்பதிற்கும் குறைவான மாணவர்களைக் கொண்ட இச்சிறுபள்ளி அரசின் கவனத்திலிருந்து தப்பி தொடர்ந்து நடைபெற்றமைக்கு இதுவும் ஒரு காரணமாக இருக்கலாம். மற்றொரு காரணம், திரு. கோபயாஷி குழந்தைகளுக்கான ஓர் உயர்ந்த கல்வியாளர் என கல்வி அமைச்சகத்தால் மதிக்கப்பட்டவர்.

ஒவ்வொரு நவம்பர் மூன்றாம் நாளன்றும் அற்புதமான விளையாட்டு விழா நாளில், டோமோயின் முன்னாள் மாணவர்கள், அவர்கள் அங்கு படிப்பை முடித்தார்களா-இல்லையா என்ற வித்தியாசமின்றி குகோன் கோயிலில் உள்ள அறையில் தவறாமல் மீண்டும் மீண்டும் மகிழ்ச்சியுடன் கூடுவதுண்டு. நாங்களெல்லாம் நாற்பது வயதைத் தாண்டியவர்களாக இருந்தாலும்— பலர் ஐம்பதை நெருங்கிக் கொண்டிருப்பவர்கள்—

எங்களுக்கு வளர்ந்த குழந்தைகள் உள்ளபோதும், நாங்கள் இன்னும் குழந்தைகள் போல அந்த நாளில் இருந்த பெயர்களைச் சொல்லியே அழைத்துக் கொள்வோம். திரு. கோபயாஷி எங்களுக்கு விட்டுச் சென்ற மரபுரிமைச் செல்வங்களில் ஒன்றாக இந்த மகிழ்ச்சியான மறு சந்திப்புக்களையும் நாங்கள் கருதுவதுண்டு.

நான் முதல் வகுப்பிலேயே பள்ளியிலிருந்து விலக்கப்பட்டவள் என்பது உண்மை. எனக்கு அந்தப் பள்ளியைப் பற்றி அதிகம் நினைவில்லை. எனது அன்னைதான், அந்த சாய்வு மேஜை பற்றியும், வீதி இசைஞர்களைப் பற்றியும் கூறினாள். நான் பள்ளியிலிருந்து நீக்கப் பட்டவள் என்பதை என்னால் நம்பவே முடியவில்லை. நான் உண்மையிலேயே அவ்வளவு மோசமானவளா? இருந்தபோதிலும் ஐந்தாண்டுகளுக்கு முன்னால் ஒருநாள் நான் காலை தொலைக்காட்சிப் பணிக்குச் சென்றிருந்தபோது அந்த நாளில் என்னை அறிந்திருந்த ஒருவருக்கு என்னை அறிமுகப்படுத்தினார்கள். அவர் எனது வகுப்பிற்கு அடுத்த அறையில் இருந்த வகுப்பின் வகுப்பாசிரியை. அவர் சொல்லியதைக் கேட்டு நான் அப்படியே வாயடைத்துப் போனேன்.

"நீ எனது வகுப்பிற்கு அடுத்த அறையில் இருந்த வகுப்பில் இருந்தாய்; பள்ளி நேரத்தில் நான் ஆசிரியர்கள் அறைக்கு உனது வகுப்பைத் தாண்டிச் செல்லும் போதெல்லாம், ஏதேனும் தவறு செய்த மைக்காக நீ வராந்தாவில் நின்று கொண்டிருப்பதைப் பார்த்திருக்கிறேன். நான் வேகமாகச் செல்லும் போதெல்லாம் நீ என்னை நிறுத்தி, 'நான் என்ன தவறு செய்தேன், எதற்காக நான் நிறுத்தி வைக்கப்பட்டுள்ளேன் என நீ என்னைக் கேட்பதுண்டு', என்ற அந்த முன்னாள் ஆசிரியை மேலும் தொடர்ந்தாள். 'உங்களுக்கு வீதி இசைஞர்களைப் பிடிக்காதா?' என நீ என்னை ஒருமுறை கேட்டாய். உன்னை எப்படிச் சமாளிப்பது என எனக்குத் தெரியவில்லை. எனவே, கடைசியில் நான் ஆசிரியர் அறைக்குச் செல்ல வேண்டுமெனில் முதலில் வகுப்பிலிருந்து எட்டிப் பார்ப்பேன். நீ வராந்தாவில் நின்று கொண்டிருந்தால் நான் ஆசிரியர்கள் அறைக்குச் செல்வதையே தவிர்த்துவிடுவேன். உனது வகுப்பாசிரியை, ஆசிரியர்கள் அறையில் அடிக்கடி உன்னைப் பற்றிப் பேசுவதுண்டு. 'அவள் ஏன் அப்படி இருக்கிறாள்?' என உனது வகுப்பாசிரியை உன்னைப் பற்றி அடிக்கடி வியப்புடன் கூறுவதுண்டு. அதனால்தான் பின்னர் நீ தொலைக்காட்சியில் தோன்றும்போது உனது பெயரை எளிதில் அடையாளம் காண முடிந்தது. நீ முதல் வகுப்பில் படித்ததை என்னால் இன்றும் சிறப்பாக நினைவு கூற முடியும்" என்றார் அந்த ஆசிரியை.

நான் வராந்தாவில் நிறுத்தி வைக்கப்பட்டேனா? என்னால் நினைவுபடுத்திப் பார்க்க முடியவில்லை. ஆனால் மிகவும் ஆச்சரியப் பட்டேன். தலை நரைத்திருந்தாலும், இளமையாகத் தெரிந்த அந்த ஆசிரியையின் அன்பான முகம் நான் உண்மையிலேயே பள்ளியிலிருந்து வெளியேற்றப்பட்டதை என்னை உணரச் செய்தது. அக்காலை வேளையில், தொலைக்காட்சி பணி நேரத்தில் வேறு யார் அவ்வளவு சிரமப்பட்டு

என்னைப் பார்க்க வந்திருக்க முடியும்?

எனது இருபதாவது பிறந்தநாள் வரை எனக்கு இச்செய்தியைக் கூறாது வைத்திருந்த என் அன்னைக்குத்தான் இவ்விடத்தில் நான் நன்றி கூறவேண்டும்.

"நீ ஏன் உன் தொடக்கப்பள்ளியை மாற்றினாய் எனத் தெரியுமா?" அன்னை ஒருநாள் என்னிடம் கேட்டார்கள். நான் "தெரியாது" எனக் கூறியதும், "ஏனென்றால் நீ முதல் பள்ளியிலிருந்து வெளியேற்றப்பட்டாய்" என உணர்ச்சியற்ற நிலையில் கூறிச் சென்றார்கள்.

அவர்கள் அந்த நேரத்தில், "உனக்கு என்ன வந்தது? நீ ஏற்கெனவே ஒரு பள்ளியிலிருந்து வெளியேற்றப்பட்டவள். அடுத்த பள்ளியிலும் உன்னை வெளியேற்றினால் நீ எங்கு போக முடியும்?" என்றுதான் கூறியிருக்க வேண்டும். அன்னை என்னிடம் அப்படிக் கூறியிருந்தால், நான் டோமோயி ஹாகுன் பள்ளியில் நுழைந்த அந்த முதல் நாளில் என் உணர்வுகள் எப்படி இருந்திருக்கும்? வேர்களும், கிளைகளும் உள்ள அந்தப் பள்ளியின் நுழைவாயில் கம்பங்களும், ரயில் பெட்டி வகுப்பறை களும் எனக்கு நிச்சயம் மகிழ்ச்சியளித்திருக்க முடியாது. இது போன்ற ஒரு அன்னையைப் பெற நான் எவ்வளவு அதிர்ஷ்டமுடையவளாய் இருக்க வேண்டும்?

யுத்தம் நடந்து கொண்டிருந்ததால் டோமோயில் சில புகைப்படங்களே எடுக்கப்பட்டன. அதில் பள்ளி நிறைவு விழாவின் போது எடுக்கப்பட்டது மிக முக்கியமானது. பொதுவாக பள்ளிப் படிப்பை நிறைவு செய்யும் மாணவர்கள் கூட்ட அறையின் முன் இருந்த படிக்கட்டுகளில் அமர்ந்து புகைப்படம் எடுத்துக் கொள்வதுண்டு. பள்ளிப் படிப்பை முடிந்து வெளியேறும் மாணவர்கள், "முன்னே வாருங்கள் புகைப்படத்தில் விழவேண்டும்" எனத் தங்கள் வகுப்பு நண்பர்களை அழைக்கும்போது மற்ற குழந்தைகளும் புகைப்படத்தில் வரவேண்டும் என்பதற்காக முண்டியடித்துக் கொண்டு முன்னே வருவார்கள். அதனால் பள்ளியிலிருந்து வெளியேறும் மாணவர்கள் யார் யார் எனக் கண்டு பிடிப்பது மிகச் சிரமம். நாங்கள் இதுகுறித்து எங்கள் மறுசந்திப்புக் கூட்டங்களில் விவாதிப்பதுண்டு. திரு. கோபயாஷி புகைப்படங்கள் எடுப்பது குறித்து ஒருபோதும் ஒன்றும் கூறியதில்லை. ஒருவேளை அவர் மரபுப்படியான பள்ளி நிறைவு புகைப்படத்தைவிட உயிரோட்டமுள்ள இயற்கையான புகைப்படமாக அமையட்டும் என்பதற்காகக் கூட அவ்வாறு செய்திருக்கலாம். தற்போது அப்புகைப்படங்களைப் பார்த்தால் அஃவை உண்மையிலேயே டோமோயியைப் பிரதிபலிப்பதாய் அமைந்துள்ளது புரியும்.

நான் டோமோயியைப் பற்றி எழுத இன்னும் ஏராளமாகச் செய்திகள் உள்ளன. ஆனால் டோட்டோ-சானைப் போன்ற ஒரு சிறுமி பெரியவர்களின் மிகச் சரியான வழிகாட்டுதலுடன் மற்றவர்களுடன் கூடிப்பழகும் வகையில் நல்ல பெண்ணாக எப்படி வளர்ந்தாள் என்பதை மற்றவர்களை உணரச் செய்தால் அதுவே போதுமானது என நினைக்கிறேன்.

குழந்தைகளைப் பலவந்தப்படுத்துதல் குறைவாகவும், பள்ளி இடைவிலகல் அதிகமில்லாமலும் டோமோயியைப் போல் உள்ள பள்ளிகள் இப்பொழுதுகூட இருக்கலாம். ஆனால் டோமோயில் பள்ளி நேரம் முடிந்தபின் கூட குழந்தைகள் வீட்டிற்குப் போக விரும்பியதில்லை. அதே போல் காலையிலும் மாணவர்கள் பள்ளிக்கு வர அதிக நேரம் காத்திருப்பதில்லை. டோமோயி பள்ளி அப்படிப்பட்டதாகும்.

வியக்கத்தக்க இது போன்ற பள்ளியை அமைத்த நெடுநோக்கமும், உற்சாக ஊற்றும் கொண்ட திரு. கோபயாஷி 1893-ல் ஜுன் 18-ல் டோக்கியோவிற்கு வடமேற்கில் உள்ள ஒரு கிராமத்தில் பிறந்தார்.

இயற்கையும், இசையும் அவரது விருப்பங்கள். அவர் குழந்தையாக இருக்கும்போது அவரது வீட்டின் அருகே இருந்த நதியின் கரையில் நின்று கொண்டு ஓடும் நீரின் சலசலப்பை தான் நடத்தும் ஆர்கெஸ்ட்ரா இசையாக எண்ணி மகிழ்வார்.

ஏழை விவசாயக் குடும்பத்தில் கடைசியாக, ஆறாவது மகனாக அவர் பிறந்தார். ஆரம்பப் பள்ளிப் படிப்பை முடித்ததும் தொடக்கப்பள்ளி ஆசிரியராகத் தன் பணியைத் தொடர்ந்தார். அவர் சிறு பையனாக இருந்தபோதே ஆசிரியப் பணி செய்வதற்கான சான்றிதழைப் பெற்றிருந்தார். இது அவரிடமிருந்த சிறப்புத் திறமையையே காட்டுகிறது. அவர் தொடக்கப் பள்ளியில் ஆசிரியராக சேர்ந்தவுடனேயே, அவர் பள்ளிப் படிப்பை இசையுடன் இணைத்தார். அதுதான் அவருக்கு ஜப்பானின் சிறப்புமிக்க இசைக் கல்வித்துறையில் மிக முக்கிய இடத்தைப் பெற்றுத் தந்தது. தற்போது அத்துறைதான் டோக்கியோவின் இசை நுண்கலைப் பல்கலைக் கழகமாக வளர்ந்துள்ளது. அவர் பட்டம் பெற்றதும், குழந்தைகளின் ஆரம்பக் கல்விதான் மிக முக்கியமானது என நம்பிய வியத்தகு மனிதர் ஹருஜி நகமுராவால் உருவாக்கப்பட்ட சைகை ஆரம்பப் பள்ளியில் இசை ஆசிரியராக ஆனார்.

குழந்தைகளின் சுய மரியாதையையும், தனித்தன்மையையும் வளர்க்கப் போதிய அளவிற்கு சுதந்திரமான பாடத்திட்டமும், குறைந்த அளவு மாணவர்களைக் கொண்ட வகுப்பும் இருக்குமாறு பார்த்துக் கொண்டார். கற்பது காலைவேளையில் நடைபெற்றது. மாலையில் உலாவச் செல்லுதல், தாவரங்கள் சேகரித்தல், படம் வரைதல், பாடுதல், தலைமையாசிரியரின் உரையைக் கேட்டல் ஆகியவற்றில் செலவிடப்பட்டது. திரு. கோபயாஷி அவரது சிறப்பு முறையின் மீது அளவிடமுடியாத நம்பிக்கை வைத்திருந்தார். பின்னாளில் அது போன்ற பாடத்திட்டத்தை உடைய டோமோயி பள்ளியை உருவாக்கினார்.

அங்கு இசை கற்பிக்கும் போதே குழந்தைகள் நடிக்கக் கூடிய, மாணவர்களுக்கான ஓரங்க இசை நாடகத்தை எழுதினார். அவரது இசை ஓரங்க நாடகம், மிகப் பெரிய தொழில் நிறுவனமாக மிட்சுபிஷியை அமைத்த தொழிலதிபர் பாரோன்-இவாசாகியிடம் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியது. பாரோன்-இவாசாகி கலைகளின் புரவலராய் இருந்தார். ஜப்பானிய இசையமைப்பாளர்களின் முன்னோடியான கோஸ்காக் யமதாவிற்கு உதவியவர். பள்ளிகளுக்கு நிதியுதவியும் செய்வார்.

பாரோன்தான் திரு. கோபயாஷியை ஐரோப்பாவிற்கு அனுப்பி கல்வி முறைகளைக் கற்றறியச் செய்தார்.

திரு. கோபயாஷி 1922 முதல் 1924 வரை ஐரோப்பாவில் பள்ளிகளைப் பார்வையிடவும், எமிலி ஜாக்ஸ்சுடனும், பாரிசில் டல்குரோசுடனும் இசை உடலிசைவுப் பயிற்சியைக் கற்கச் செலவிட்டார். ஐரோப்பா விலிருந்து திரும்பி வந்ததும் மற்றொருவருடன் சேர்ந்து செல்ஜோ கிண்டர் கார்டன் பள்ளியைத் தொடங்கினார். திரு. கோபயாஷி எப்பொழுதும் தன் சக ஆசிரியர்களிடம், "ஏற்கெனவே முடிவு செய்த வார்ப்புகளில் குழந்தைகளைப் பொருத்தாதீர்கள், இயற்கையாக அவர்களை வளர விட்டுவிடுங்கள். அவர்களின் ஆவல்களை அடக்காதீர்கள். கற்பனைகளை நொறுக்காதீர்கள். அவர்களின் கனவுகள் உங்களுடையவைகளை விடப் பெரியவைகளாக இருக்கலாம்" எனக் கூறுவதுண்டு. அவர் அமைத்ததைப் போன்ற தொடக்கப்பள்ளி ஜப்பானில் எப்பொழுதுமே இருந்ததில்லை.

1930-ல் திரு. கோபயாஷி டல்குரோசுடன் மேலும் ஓராண்டு கற்பதற்காக ஐரோப்பா சென்றார். அங்கு நன்கு சுற்றிப் பார்த்து, மனதில் கருத்துக்களை உருவாக்கிக் கொண்டார். ஜப்பான் திரும்பியவுடன் சொந்தமாக தொடக்கப்பள்ளியை ஆரம்பிக்க வேண்டுமென்ற கருத்தையும் உருவாக்கிக் கொண்டார்.

1937-ல் அவர் டோமோயி ஹாகுன் உருவாக்கியதோடு ஜப்பான் இசை உடலிசைவுக் கழகத்தையும் ஏற்படுத்தியுள்ளார். ஜப்பானில் உள்ள கல்வியாளர்கள் பலரும் அவர் ஜப்பானில் இசை உடலிசைவுக் கல்வியை அறிமுகப்படுத்தியவர் என்ற முறையில்தான் அறிந்திருந்தனர். போருக்குப் பின் குனிடாச்சி இசைக் கல்லூரியில் அவர் ஆற்றிய பணியும் அனை வருக்கும் தெரியும். ஆனால் தற்போது இருப்பவர்களில் ஒரு சிலரே அவரது கல்வி முறைகளைப் பயன்படுத்திப் பார்த்தனர். அவர் டோமோயியைப் போல் மீண்டும் ஒரு பள்ளியை அமைப்பதற்கு முன்னரே மறைந்தது மிகவும் துரதிர்ஷ்டவசமானதாகும். டோமோயி முற்றிலும் எரிந்துவிட்டாலும்கூட அவரால் மீண்டும் ஒரு பள்ளியை அமைக்க முடியும் என்ற நம்பிக்கை இருந்தது. சுற்றிலும் நெருப்பு எரிந்து கொண்டிருந்த நிலையிலும் மனம் தளராது "நாம் அடுத்து எந்த மாதிரியான பள்ளியைக் கட்டலாம்" என அவர் உயரிய உணர்வுடன் கேட்டார்.

நான் இந்த நூலை எழுத ஆரம்பித்தபோது, "டெட்சுகோவின் அரங்கம்", என்ற எனது தினசரிப் பேட்டியின் தயாரிப்பாளராகப் பணி யாற்றியவர், திரு. கோபயாஷியைப் பற்றி பத்தாண்டுகளுக்கும் மேலாக ஆய்வு செய்திருந்தார். நான் அந்தத் தயாரிப்பாளருடன் ஆண்டுக்கணக்கில் பணியாற்றியுள்ளேன். அவர் பெருங்கல்வியாளர்களுடன் தொடர்பு வைத்திருந்தது கிடையாது. ஆனால் ஒருநாள் ஒரு பெண் இசை உடலிசைவுப் பயிற்சிக்காக பியானோ வாசித்ததைக் கவனித்ததிலிருந்து அவரது ஆர்வம் கூடியது. அவள் பியானோ வாசிக்கத் தொடங்கியதுமே, "குழந்தைகள் இப்படி நடக்காது உனக்குத் தெரியுமா?" எனக்கூறி திரு. கோபயாஷி அவளைத் திருத்தினார். அப்பொழுதே குழந்தைகள் எப்படி நடக்கின்றன, எப்படி மூச்சு விடுகின்றன என்பதைக் கூட அறிந்த ஒரு

மனிதர் இங்கு இருக்கிறார் என்பதை அத்தயாரிப்பாளர் தெரிந்து கொண்டார். எனது தயாரிப்பாளர் கசுகிகோ-சானோ இந்த அற்புதமான தலைமையாசிரியரைப் பற்றி அவர் எழுதிவரும் நூலில் உலகத்திற்கு நிறைய எடுத்துச் சொல்வார் என்பது எனது நம்பிக்கை.

இருபதாண்டுகளுக்கு முன் ஓர் இளம் வணிகர், 'கொடாண்சா' இதழின் ஆசிரியர், நான் டோமோயி பள்ளியைப் பற்றி ஒரு பெண்களுக் கான இதழில் எழுதியுள்ளதைப் படித்திருக்கிறார். உடனே அவரிடமுள்ள கையெழுத்துப் பிரதிகளை கைநிறைய எடுத்துக் கொண்டு வந்து என்னைப் பார்த்து, அவற்றை ஒரு நூலாக விரிவாக்கி எழுதித் தருமாறு கேட்டார். அவர் எழுதியிருந்தத் தாள்களை வேறு பணிக்குப் பயன்படுத்துவதை குற்றவுணர்வோடு என் மனம் நினைத்தது. அவர் தனது எண்ணம் ஈடேறுவதற்கு முன்பே இயக்குநராகிவிட்டார். ஆனால் அவர்தான் கட்சுஷிசா காட்டோ—எனக்கு இந்த யோசனையை அளித்தவர். இதைச் செய்யமுடியும் என்ற நம்பிக்கையை அளித்தவரும் அவர்தான். முழுவதும் எழுதப்படாத அந்நிலையில் அதை முழுநூலாக உருவாக்குவதே அச்சம் தரும் பணியாக இருந்தது. கடைசியில், 'கொடாண்சா'வின் இளம் பெண்களுக்கான இதழில் ஒரு பகுதியைத் தொடர்ந்து எழுதுமாறு நான் தூண்டப்பட்டேன். நான் அதை பிப்ரவரி 1979 முதல் டிசம்பர் 1980 வரை எழுதினேன்.

டோக்கியோவின் நெறிமாகுவில் உள்ள சிமோ.சாகுஜியில் சிகிரோ இவாசாகி ஓவிய நூல் அருங்காட்சியகத்திற்குப் படங்களைத் தேர்ந்தெடுப் பதற்காக ஒவ்வொரு மாதமும் நான் செல்வதுண்டு. சிகிரோ இவாசாகி குழந்தைகள் படங்களை வரைவதில் நிபுணர். அவரைப் போல் உயிர்த் துடிப்புள்ள குழந்தைப் படங்களை வரைபவர் உலகில் வேறு யாரேனும் உள்ளார்களா என்பது ஐயத்திற்குரியது. குழந்தைகளின் தன்மையை பல்லாயிரக்கணக்கான வித்தியாசமான நிலைகளில் வரையும் திறமை படைத்த அப்பெண் தனது ஓவியத்தின் மூலம் ஆறுமாதக் குழந்தைக்கும், ஒன்பது மாதக்குழந்தைக்கும் உள்ள வித்தியாசத்தைக்கூட துல்லியமாகக் காட்டக் கூடியவர். அவரது ஓவியங்களை எனது நூலுக்குப் பயன் படுத்துவதில் எனக்கு எவ்வளவு மகிழ்ச்சி இருந்தது என்பதை நான் உங்களுக்குக் கூறப்போவதில்லை. நான் விவரித்துள்ளவை அவரது ஓவியங்களில் எப்படிப் பொருந்தியுள்ளது என்பது ஆச்சரியப்படத்தக்க ஒன்றாகும். அப்பெண் 1974-ல் இறந்துவிட்டார். ஆனால் அவர் உயிரோடு இருக்கும்போதே நான் எனது நூலை எழுத ஆரம்பித்து விட்டேனா என மக்கள் கேட்கத் தொடங்கிவிட்டனர். இதிலிருந்தே அவர் குழந்தைகளின் உணர்வை பல வித்தியாசமான கோணங்களில் வரைவதில் எவ்வளவு திறமை படைத்தவர் என்பதை அறியலாம்.

சிகிரோ இவாசாகி கிட்டத்தட்ட ஏழாயிரம் படங்களை விட்டுச் சென்றிருந்தார். அருங்காட்சியத்தில் உதவிக்காப்பாளராக இருந்த அவரது மகன் மற்றும் மருமகள் மூலமாக அசல் படங்களை என்னால் காண முடிந்தது. அந்தப் படங்களை பதிப்பிற்காக எடுத்துக்கொள்ள என்னை அனுமதித்த அந்த ஓவியரின் கணவருக்கும் நான் நன்றி கூறவேண்டும்.

நான் எழுதுவதற்குக் காலங்கடத்திய போதெல்லாம் என்னை உற்சாகப் படுத்தி விரைவில் ஊக்கமுடன் எழுதத் தூண்டிய, நான் அறங்காவலராக உள்ள அருங்காட்சியகத்தின் காப்பாளர், நாடக எழுத்தாளர் தடாசு இசவாரா அவர்களுக்கும் நான் நன்றி கூற வேண்டும். மியோ-சானும் எனது டோமோயி பள்ளி நண்பர்களும் இயற்கையிலேயே மிகப்பெரும் உதவிகளைச் செய்தவர்கள். இந்த நூலின் ஜப்பானிய மொழி பதிப்பாளருக்கும் நான் எனது நெஞ்சார்ந்த நன்றியைக் கூற வேண்டும். அவர், கெய்கோ இவா மோட்டோ—"நாம் இந்த நூலை மிகச் சிறந்த நூலாக வெளிக் கொணர வேண்டும்" என அடிக்கடி கூறுவார்.

சில ஆண்டுகளுக்கு முன் பிரபலமாய் இருந்த 'ஜன்னலிலிருந்து' என்ற சொல்லிலிருந்து ஜப்பானியப் பதிப்பிற்கான தலைப்பைத் தேர்ந் தெடுத்தேன். நான் முதல் வகுப்பில் படிக்கும்போது வீதி இசைஞர்களைக் காண ஜன்னல் அருகே நின்றிருந்த போதிலும், அந்த முதல் பள்ளியிலிருந்து நான் அன்னியப்பட்டு குளிரில் நின்றது போல் உணர்கிறேன். இந்தத் தலைப்பு வேறு பொருள் தருவது போல் தோன்றினாலும் என்னைப் பொருத்தவரை இறுதியில் டோமோயில் எனக்குத் திறக்கப்பட்ட மகிழ்ச்சி ஜன்னலையே குறிக்கும்.

டோமோயி தற்போது இல்லை. ஆனால் இந்தப் புத்தகத்தைப் படித்த பின் உங்கள் நினைவில் டோமோயி நிற்குமானால் அதுவே எனக்குப் பெருமகிழ்ச்சியாகும்.

இந்த நூல் ஜப்பானில் வெளியாகிய பின், ஆங்கிலத்தில் வெளியா வதற்கு முன் குறிப்பிடத்தக்க பல நிகழ்ச்சிகள் நடந்துவிட்டன. முதலில் இந்த நூல் எதிர்பாராத அளவிற்கு விற்பனை ஆன நூலாக ஆகி இருந்தது. ஜப்பானின் நூல் வெளியீட்டில் ஒரே ஆண்டில் *45,00,000/* - பிரதிகள் விற்பனையாகி சிறிய டோட்டோ - சான் வரலாறு படைத்தது.

அடுத்து இது ஒரு பள்ளிப் பாட நூலாக ஆகியதும் வியப்பளித்தது. தலைமையாசிரியர் திரு. கோபயாஷியைப் போல் ஒருவர் இருந்தார் என்பதை எல்லாப் பள்ளி ஆசிரியர்களும், இளம் தாய்மார்களும் அறிந்திருக்க வேண்டுமென நான் நம்பினேன். ஆனால் என் எண்ணத்தை இந்த நூல் ஈடேற்றும் என்பதை நான் கற்பனைகூட செய்து பார்த்தது கிடையாது. ஒருவேளை இன்று ஜப்பான் முழுவதும் கல்விநிலை எப்படி உள்ளது என்பதை மக்கள் ஆழமாகப் பார்க்கிறார்கள் என்பதை இது உணர்த்துவ தாகக் கூட இருக்கலாம்.

குழந்தைகளுக்கு இது ஒரு கதைப்புத்தகம். வாசகர்களிடமிருந்து வந்துள்ள பல்வேறு கடிதங்களைப் பார்க்கும்போது இதில் கடினமான வார்த்தைகள் இருப்பதும் ஏழு வயதுள்ள மாணவிகள் கூட டிக்ஷனரியின் உதவியோடு இதைப் படித்திருக்கிறார்கள் என்றே உணர முடிகிறது. இது எனக்கு எவ்வகை மகிழ்ச்சியளித்துள்ளது என்பதை என்னால் கூற முடியாது. நூற்றி மூன்று வயதுள்ள ஒரு ஜப்பானிய இலக்கிய வல்லுநர், "நான் இதை அழகாக ரசிக்கிறேன்" என எழுதியுள்ளார். ஆனால் மிகவும் குறிப்பிடத்தக்கது என்னவென்றால் படக்கதை உள்ள காமிக் நூல்களைப் படிக்கும் சிறுவர்கள் கூட இந்நூலைப் படித்துவிட்டு இதிலுள்ள கடினமான

வார்த்தைகளைச் செருக்குடன் உச்சரிப்பதுதான். அச்செழுத்துக்கள் மீது ஆர்வம் காட்டாத இளைஞர்களும் இந்நூலை விரும்பிப் படித்துள்ளனர்.

இந்த நூல் வெளியான பின், திரைப்படத் தயாரிப்பாளர்கள், தொலைக்காட்சி நிறுவனத்தார், திரையரங்க உரிமையாளர்கள், திரைப்படம் தயாரிப்பதை ஊக்குவிக்கும் விநியோகிக்கும் நிறுவனங்கள் எனது கதையைப் படமாக்க வேண்டுமென்ற வேண்டுகோள்கள் பெரு வெள்ளமாகப் பெருக்கெடுத்து வந்தன. ஆனால் ஏராளமான மக்கள் இந்த நூலைப் படித்துவிட்டு அவர்கள் மனதில் ஒரு கருத்துப் படிமத்தை ஏற்படுத்திக் கொண்டார்கள் என்பதால், பட இயக்குநர்கள் எவ்வளவு திறமையாகச் செயல்பட்டாலும் மக்களின் மனதில் உள்ள கற்பனைப் படிமத்தைஅது மேலும் செழுமைப்படுத்துமா என்ற ஐயத்தில்நான் அனைத்து வேண்டுகோள்களையும் நிராகரித்து விட்டேன்.

ஆனால் ஆர்கெஸ்ட்ரா இசைக்குழுவின் மூலம் கதாகாலட்சேபம் செய்ய ஒத்துக் கொண்டேன். ஏனெனில் இசைக்கு கற்பனைகளைக் கூட கட்டுப்படுத்தும் ஆற்றல் உண்டு. மகிழ்வூட்டும் இசை நிகழ்ச்சிகளை நடத்துவதில் பெயர் பெற்ற, அகிஹிரோ கொமொரியிடம் இதற்கு இசையமைக்கும் பொறுப்பை எடுத்துக் கொள்ளுமாறு நான் கேட்டுக் கொண்டேன். 'பல்லிய இசைக் கதை டோட்டோ-சான்; ஜன்னலில் ஒரு சிறுமி' நான் எழுதிய குறிப்புகளிலிருந்து தயாரிக்கப்பட்டது. மிகப்பெரிய வெற்றியை அளித்தது. நிகழ்ச்சி நடந்த அரங்குகளில் கண்ணீரும் சிரிப்பும் மாறிமாறி நிரம்பி வழிந்தது. இந்நிகழ்ச்சிகள் ஒரு வரலாறு படைத்தன.

இந்த நூல் தற்போது அங்கீகாரம் பெற்ற பாடநூலாக ஆகியுள்ளது. கல்வி அமைச்சகத்தின் ஒப்புதலுடன் அடுத்த ஆண்டு முதல் நடை முறைக்கு வரும் மூன்றாம் வகுப்பு மொழிப்பாட நூலில் "விவசாய ஆசிரியர்" என்ற அத்தியாயமும், நான்காம் வகுப்பு ஒழுக்கவியல் நற்பழக்கவியல் பாடத்தில் "அருவறுப்பான பழைய பள்ளி" என்ற அத்தியாயமும் சேர்க்கப்பட்டுள்ளன. பல ஆசிரியர்கள் இந்த நூலை அவர்களாகவே பல வழிகளில் பயன்படுத்தியுள்ளனர். எடுத்துக் காட்டாக கலை வகுப்புகளில் மாணவர்களை ஏதேனும் ஒரு அத்தியாயத்தைப் படிக்கச் செய்து அவர்களை மிகவும் ஈர்த்த பகுதியை ஓவியமாக வரையும்படி கேட்டுக் கொள்கிறார்கள்.

காது கேளாதவருக்கான தொழில் அரங்கம் அமைக்க வேண்டுமென்ற என் நீண்டநாள் கனவை இந்நூலுக்கான உரிமைத்தொகை நிறைவேற்றி உள்ளதை நன்றியுடன் நினைத்துப் பார்க்கிறேன். மேலும் இந்நூல் கதைகளல்லாத நூல்களுக்கான பரிசையும், வேறு மூன்று பரிசுகளையும் எனக்குப் பெற்றுத் தந்துள்ளது. சமீபத்தில் நான் சமூகசேவை புரிந்தவர் களுக்கான 'பேரரசரின் இளவேனிற்கால விருந்திற்கு', வேதியலுக்கான நோபல் பரிசு பெற்ற கெனிச்சி புகூய் போன்ற குறிப்பிடத்தக்க விருந்தினர்களுடன் அழைக்கப்பட்டிருந்தேன். அங்கு மேதகு அரசருடன் இனிமையாக உரையாடுவதற்கான வாய்ப்பும் இந்நூலின் மூலம் கிடைத்தது. கடந்த ஆண்டு பிரதமரிடமிருந்து உலக உடல் ஊனமுற்றவர்களுக்கான ஆண்டை முன்னிட்டு சிறப்புப் பாராட்டையும் பெற்றேன். நான் விரும்பி

எழுதிய இந்நூல் மகிழ்வான நிகழ்வுகள் பலவற்றை எனக்கு ஏற்படுத்தித் தந்துள்ளது.

கடைசியாக, இந்நூலை ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்த டோரத்திபிரிட்டன் அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைக் கூறவேண்டும். அப்படியொரு அற்புதமான மொழி பெயர்ப்பாளரைக் காண நான் மிகவும் கொடுத்து வைத்தவளாய் இருக்கவேண்டும். அவர்கள் ஒரு கவிஞராகவும், இசைக் கலைஞராகவும் இருப்ப தாலேயே இந்நூலில் உணர்வும் ஒழுங்கமைப்பும் குன்றாமல், படிப்பதற்குக் களிப்பூட்டும் வகையில் மொழியாக்கம் செய்துள்ளார்கள்.

ஆம். மேலும் ஒன்றுள்ளது. அசல் வீதி இசையமைப்பாளர் ஹெரால்டு ரோம் அவர்களுக்கும் அவரது மனைவி, எழுத்தாளர் ஃப்ளோரன்ஸ்க்கும் நான் நன்றிகூறியாக வேண்டும். நான் முதல் அத்தியாயத்தை நிறைவு செய்திருந்த நேரத்திலேயே என் கதையை ஆங்கிலத்தில் பதிப்பிக்க வேண்டுமென என்னை விடாப்பிடியாக வற்புறுத்தியவர்கள் அவர்கள்தான்.

டோக்கியோ, டெட்சுகோ குரோயாநாகி
**1982**



## ரயில்வே ஸ்டேஷன்

அவர்கள் ஜீயுகோகா ஸ்டேஷனில், ஓய்மாச்சி ரயிலில் இருந்து இறங்கினார்கள். அம்மாதான் டோட்டோ-சானின் கையைப் பிடித்துக் கொண்டு டிக்கெட்-கேட் வழியாக வந்தாள். டோட்டோ-சான் இதற்கு முன் ரயிலில் வந்ததே இல்லையாதலால், தான் இறுக்கமாகப் பிடித்திருந்த அந்த விலை மதிப்பற்ற டிக்கெட்டைக் கொடுப்பதற்குத் தயங்கினாள்.

"நானே இதை வைத்துக் கொள்ளலாமா?" டோட்டோ-சான் டிக்கெட் கலெக்டரிடம் கேட்டாள்.

"இல்லை... முடியாது..." என்று சொல்லிக் கொண்டே அவர் டிக்கெட்டை அவளிடமிருந்து பறித்துக் கொண்டார்.

அவள், டிக்கெட்டுகளால் நிரம்பியிருந்த அவர் பெட்டியை காண்பித்து, "இதெல்லாம் உங்கள் டிக்கெட்டா?" என்றாள்.

"இல்லை... இதெல்லாம் ரயில்வே ஸ்டேஷனுக்குச் சொந்தமானது" வெளியே போகும் பிரயாணிகளிடம் கிட்டத்தட்ட டிக்கெட்டுகளை பிடுங்கிக் கொண்டே, அவர் பதிலளித்தார்.

"ஓ..." டோட்டோ-சான் அந்தப் பெட்டியை பேராசையுடன் உற்று நோக்கிக் கொண்டே தொடர்ந்து சொன்னாள்... "நான் பெரியவளாய் ஆனதும், ரயில்வே டிக்கெட் விற்கப் போகிறேன்..."

டிக்கெட் கலெக்டர் முதல் முறையாக அவள் மேல் ஒரு கணம் பார்வையை ஓடவிட்டார். "என் சின்னப் பையனும் ஸ்டேஷனில் ஒரு வேலையை விரும்புகிறான்... அதனால் நீங்க ரெண்டு பேருமே சேர்ந்து வேலை செய்யலாம்."

டோட்டா-சான் ஒரு பக்கமாய் நகர்ந்து, டிக்கெட் கலெக்டரை முழுமையாய் நன்றாகப் பார்த்தாள். அவர் மிகவும் கொழுத்து, குண்டாக

இருந்தார்; கண்ணாடி அணிந்திருந்தார். பார்ப்பதற்குக் கருணை ததும்பத் தெரிந்தார். "ஹூம்..." என்றவாறே அவள் இடுப்பில் கைகளை வைத்துக் கொண்டு, அவர் சொன்ன ஆலோசனை குறித்துச் சிந்தித்துப் பார்த்தாள். "எனக்கு ஒன்றும் உங்க பையனோட பணி புரிவதில் ஆட்சேபணை இல்லை" என்றாள். "நான் இப்ப புது ஸ்கூலுக்குப் போய்க்கிட்டு இருக்கிறதால ரொம்ப 'பிசி'யாய் இருக்கிறேன். இருந்தாலும் நீங்க சொன்ன ஆலோசனை குறித்து யோசிக்கிறேன்..."

அவள், அம்மா தனக்காகக் காத்துக்கொண்டிருக்கும் இடத்திற்கு, "நான் ஒரு டிக்கெட் விற்பனையாளராய் ஆகப் போகிறேன்.." என கத்திக் கொண்டே ஓடினாள்.

அம்மா இதனால் ஒன்றும் ஆச்சரியப்படவில்லை என்றாலும் "நீ ஒரு உளவாளியாய் (spy) ஆவாய் என்றல்லவா நினைத்தேன்" என்றாள்.

அம்மாவின் கையைப் பிடித்துக் கொண்டு டோட்டோ-சான் நடக்க ஆரம்பித்தபோது, இன்றைக்கு முந்திய நாள் வரை தான் ஒரு உளவாளியாக வேண்டும் என்பதில் மிகவும் உறுதியாக இருந்ததை நினைவுபடுத்திக் கொண்டாள். இவள் போய் டிக்கெட்டுகள் நிறைந்த பெட்டிகளுக்குப் பொறுப்பாளியாகும்படி நேர்ந்து விட்டால், அது எவ்வளவு வேடிக்கை!

"அதுதானே!" ஒரு அருமையான யோசனை அவளுக்கு வந்தது. அவள் அம்மாவைப் பார்த்து, தனது உச்சக்குரலில் கேட்டாள், "உண்மையிலேயே உளவாளியாகப் போகும் நான், ஒரு டிக்கெட் விற்பனையாளராகவும் ஆக முடியுமா, அம்மா?"

அம்மா அதற்குப் பதிலொன்றும் சொல்லவில்லை. சிறிய பூக்களுடன் கூடிய அந்த தொப்பியின் கீழுள்ள அம்மாவின் அழகிய முகம் 'சீரியஸாய்' இருந்தது. விஷயம் என்னவென்றால், அம்மா மிகவும் வருத்தமாய் இருந்தாள். டோட்டோ-சானை இந்தப் புதிய பள்ளியிலும் எடுத்துக் கொள்ளாவிட்டால் என்ன செய்வது? அம்மா வருத்தப்படுகிறாள் என்பது தெரியாததனால், அவர்கள் இருவரது கண்களும் சந்தித்ததும், டோடோ-சான் அபரிமிதமான சந்தோஷத்துடன், "நான் எனது மனதை மாற்றிக் கொண்டேன். நான், புதிய ஸ்டோர்களுக்காக விளம்பரத்திற்குச் செல்லும் வீதி இசைஞர்களது குழுவில் ஒருத்தியாக சேர்ந்துவிட விரும்புகிறேன்!" என்றாள்.

அம்மா பேசும்போது நம்பிக்கையின்மை அவள் குரலில் தோய்ந்து கிடந்தது. "வா- இப்பவே நேரம் ஆகிப் போச்சு.. ஹெட்மாஸ்டர் நமக்காக காத்திருக்கும்படி நாம் செய்துவிடக் கூடாது. நீ எங்கே போகணுமோ, அந்தப் பக்கம் பார்த்து நேராக நடக்கணும்" என்றாள் அம்மா.

அவர்களுக்கு முன்னால், தூரத்தில், அந்த சின்னப்பள்ளியின் கேட் கொஞ்சம் கொஞ்சமாகப் பார்வைக்கு தெரிந்து கொண்டே வந்தது.

## ஜன்னலில் ஒரு சிறுமி

டோட்டோ-சான் தற்போது கொஞ்ச நாடகளாகத்தான் பள்ளியில் சேர்க்கப்பட்டிருந்தாலும், அதற்குள் பள்ளியில் இருந்து வெளியேற்றப்பட்டு

விட்டாள் என்பதுதான் அம்மாவை வருத்தப்பட வைத்தது. முதல் கிரேடிலேயே இப்படி வெளியேற்றப்படுவது எங்குமே இல்லாதது!

ஒரு வாரத்திற்கு முன்தான் அது நடந்திருந்தது. டோட்டோ-சானின் ஹோம்ரூம் டீச்சர் அழைத்ததற்கு இணங்க, அம்மா போய் டீச்சரைப் பார்த்தாள். "உங்கள் மகள் மொத்த வகுப்பையே கெடுக்கிறாள். நான் அவளை வேறு பள்ளிக்கு அழைத்துச் செல்லும்படி உங்களை கேட்கும் கட்டாயத்தில் இருக்கிறேன்..." அந்த அழகான டீச்சர் பெருமூச்சு விட்டாள், "நான் அவளுக்காக, இன்னும் எதுவும் செய்ய முடியாத நிலையில் உள்ளேன்."

அம்மாவை இது மொத்தத்தில் திடுக்கிடும்படிச் செய்துவிட்டது. டோட்டோ-சான் மொத்த வகுப்பையே இடையூறு செய்யும் அளவுக்கு, அப்படி இந்தப் பூமியில் என்னதான் இருக்கிறது என அம்மா வியந்தாள்.

படபடப்புடன் கண்களை இமைத்துக் கொண்டும், பேஸ்பாய் ஸ்டைலில் குட்டையாக வெட்டப்பட்ட முடியைத் தொட்டுக் கொண்டும், அந்த டீச்சர் விளக்க ஆரம்பித்தாள். "பல நூறு தடவைகள் அவள் மேஜையைத் திறந்தும், மூடவும் செய்கிறாள் என்பதில் இருந்து ஆரம்பிப்பது நல்லது. மேஜையிலிருந்து எதையாவது எடுக்கவோ, இல்லை மேஜைக்குள் எதையாவது வைக்கவோ நேரிட்டாலொழிய யாரும் மேஜையைத் திறக்கவோ மூடவோ கூடாது என நான் சொல்லியிருந்தேன். அதனாலேயே உங்கள் மகள் எப்போதும் சிலவற்றை வெளியே எடுக்கிறாள், சிலவற்றை உள்ளே வைக்கிறாள். அவளது நோட்டுப் புத்தகம், பென்சில் பெட்டி, பாடப்புத்தகம் மற்றும் மேஜைக்குள் வேறு என்னவெல்லாம் இருக்கிறதோ அவை அனைத்தையும் ஒன்று வெளியே எடுக்கிறாள்; இல்லை உள்ளே வைக்கிறாள். உதாரணத்திற்கு எடுத்துக் கொள்வோமே; நாங்கள் எழுத்துக்களை எழுதப்போவதாக. உங்கள் மகள் முதலில் மேஜையைத் திறந்து, நோட்டுப் புத்தகத்தை எடுப்பாள். பின்னர் அப்படியே மேஜையின் மேற்பாகத்தை 'படா'ரென மூடுவாள். பின்னர் மறுபடியும் மேஜையைத் திறந்து, தலையை உள்ளேவிட்டு, பென்சிலை வெளியே எடுத்து, வேகமாக மேஜையை மூடி, 'A' யை எழுதுவாள். ஒருவேளை அவள் அதை மோசமாகவோ இல்லை தவறுதலாகவோ எழுதியிருந்தால், அவள் மேஜையை மறுபடியும் திறந்து, ரப்பரை வெளியே எடுத்து, மேஜையை மூடி, எழுத்தை அழித்து பின்னர் மறுபடியும் மேஜையைத் திறந்து, ரப்பரை உள்ளே வைத்து மூடுவாள். இவ்வளவு வேலையையும் அதிவேகத்தில் செய்வாள். அவள் மறுபடியும் அந்த 'A' எழுதிய பின்னர், ஒவ்வொரு பொருளாய் மேஜைக்குள் ஒன்றன் பின் ஒன்றாய் வைப்பாள். பென்சிலை வைப்பாள், மேஜையை மூடுவாள். பின்னர் மறுபடியும் திறந்து நோட்டுப் புத்தகத்தை வைப்பாள். பிறகு அடுத்த எழுத்திற்கு போகும்போது, அவள் மறுபடியும் மேற்சொன்ன எல்லாவற்றையும் செய்வாள். முதலில் நோட்டுப் புத்தகம், பின்னர் ரப்பர்-ஒவ்வொரு முறையும் மேஜையைத் திறந்தும், மூடவும் செய்வாள். இவையெல்லாம் என் தலையைச் சுற்ற வைக்கும். ஆனால் அதற்காக அவளை நான் திட்டமுடியாது. ஏனென்றால் ஒவ்வொரு முறை திறக்கும்போதும், மூடும்போதும் அதற்குக் காரணம் இருக்கும்."

தனது மனதில் இருந்து அந்த நினைவுக் காட்சிகள் விலகினால் போதும் என்கிற மாதிரி, அந்த டீச்சரின் பெரிய கண் இமைகள் 'படபட'வென இமைத்தன.

திடீரென்று அம்மாவிற்கு ஏன் டோட்டோ-சான் தனது மேஜையை அடிக்கடி திறந்து மூடுகிறாள் என்பதற்கான காரணம் கொஞ்சம் கொஞ்சமாய் புரிய ஆரம்பித்தது. டோட்டோ-சான் முதல்நாள் பள்ளியில் இருந்து வந்ததும் எவ்வளவு குதூகலமாய் இருந்தாள் என அம்மா நினைத்துப் பார்த்தாள். அவள் சொன்னாள் "ஸ்கூல் ரொம்ப நல்லாயிருக்கு! வீட்டிலுள்ள என் மேஜையை நீ இழுப்பியே, அதில் டிராயர்தான் இருக்கு... ஆனால் ஸ்கூலில் உள்ள மேஜையின் மேற்பகுதியை நீ தூக்கி விடலாம்... அந்த மேஜை ஒரு பெட்டி மாதிரி இருக்கும். அதுக்குள்ள என்ன மாதிரி பொருள்னாலும் நீ வச்சுக்கலாம்... அது உண்மையிலேயே பிரமாதம்." அம்மா அவள் எப்படி சந்தோஷமாய் அந்த புதிய மேஜையின் மேல் மூடியை திறந்தும், மூடியும் இருப்பாள் என்பதை மனதுக்குள் காட்சியாக்கிப் பார்த்தாள். அம்மா இதெல்லாம் அப்படியொன்றும் பெரிய குறும்புத்தனம் இல்லை என்றுதான் நினைத்தாள். ஒருவேளை டோட்டோ-சான் அப்படி செய்வதிலுள்ள புதுமை தீர்ந்தவுடன், இந்த மாதிரி செய்வதையே கூட விட்டுவிடலாம். இருந்தாலும் அவள் டீச்சரிடம் சொன்னது என்னவோ, "நான் இது சம்மந்தமாக அவளிடம் பேசுகிறேன்" என்றுதான்.

டீச்சர் தொடர்ந்து சொல்லிக் கொண்டிருக்கும் போது, அவளின் குரலின் ஸ்தாயி கூடிக் கொண்டே போனது. "இது மட்டும்தான் எனில், நான் இவ்வளவு பெரிசு படுத்தியிருக்க மாட்டேன்.."

டீச்சர் முன்னே சாய்ந்து சொல்லிக் கொணடிருந்ததால், அம்மா பயங்கலந்த குழப்பத்துடன் பின்னே நகர்ந்தாள், "அவள் தனது மேஜையின் மூலம் சத்தம் கிளப்பாத சமயங்களில், எப்போதும் எழுந்து நின்று கொண்டே இருப்பாள். அதுவும் வகுப்பு நடக்கும்போது முழுவதும்!"

"எழுந்து நிற்கிறாளா? எங்கே?" அம்மா ஆச்சரியத்துடன் வினவினாள்.

"ஜன்னலிலே" டீச்சர் குறுக்கிட்டு பதிலளித்தாள்.

"ஏன் ஜன்னலிலே நிற்கிறாள்?" அம்மா குழப்பத்துடன் கேட்டாள்.

"அப்பத்தானே வீதி இசைஞர்களை அழைக்க முடியும்" டீச்சர் கிட்டத்தட்ட கிறீச்சிட்டு விட்டாள்.

டீச்சர் சொன்ன கதையின் சாரம் இதுதான். கிட்டத்தட்ட ஒரு மணி நேரம் மேஜையின் மேற்பகுதியை மோதி அடித்த பிறகு, டோட்டோ-சான் தன் மேஜையை விட்டு அகன்று ஜன்னலருகே போய் நின்று வெளியே வேடிக்கை பார்ப்பாள். ஏதோ சத்தம் போடாத வரைக்கும் அவள் அங்கேயே கொஞ்சம் நின்று விட்டுப் போகட்டும் என டீச்சர் நினைக்கத் தொடங்கும்போது, டோட்டோ-சான் பளபளக்கும் ஆடம்பர ஆடையணிந்து செல்லும் வீதி இசைஞர்களது குழுவை திடீரென அழைப்பாள். டோட்டோ-சானின் சந்தோஷத்திற்கும், டீச்சரின் தாங்க முடியாத தொந்தரவிற்கும் ஏதுவாக, அந்த வகுப்பறை தரைமட்டத்தில் தெருவைப் பார்த்து இருந்தது. தெருவுக்கும் வகுப்பறைக்கும் இடையே

குட்டைப் புதர்வேலிதான். ஆதலால் வகுப்பறையில் இருக்கும் யாரானாலும் வெளியே போகும் பாதசாரிகளிடம் எளிதாகப் பேசலாம். டோட்டோ-சான் வீதி இசைஞர்களை அழைத்ததும், அவர்களும் ஜன்னல் அருகே வந்து விடுவார்கள். டீச்சர் சொன்னாள், அப்போதுதான் டோட்டோ-சான் அந்த விஷயத்தை மொத்த வகுப்பறைக்குமே, "அதோ அவர்கள் இங்கே" என்று அறிவிப்பாளாம். உடனே குழந்தைகள் அனைவரும் ஜன்னலருகே குழுமி, இசைஞர்களைக் காண்பார்கள்.

"ஏதாவது இசையுங்கள்" டோட்டோ-சான் சொன்னதும், சாதாரணமாய் பள்ளி வழியே அமைதியாய் கடந்து செல்லும் அந்தக் குழு, கிளாரினெட், காங்க், டிரமஸ், சாமிசன் மூலம் மிகவும் உற்சாகமான இசைக் கச்சேரியை மாணவர்களுக்காக நடத்தி முடித்து விடுமாம். ஆனால் அந்தப் பரிதாபத்திற்குரிய டீச்சரோ ஒன்றுமே செய்ய முடியாமல், அந்தக் காட்டுத்தனமான குழப்பமிக்க சத்தம் அடங்கும் வரை பொறுமையாய்க் காத்திருப்பாள்...

கடைசியாக இசைக்கச்சேரி முடிந்ததும், இசைஞர்கள் போய்விடுவார்கள். டோட்டோ-சானைத் தவிர எல்லா மாணவர்களும் இருக்கைக்குத் திரும்பி விடுவார்கள். டீச்சர் "இன்னும் ஏன் நீ ஜன்னலிலேயே இருக்கிறாய்?" என்று கேட்டால், டோட்டோ-சான் ரொம்பவும் ஈடுபாட்டுடன், "இன்னொரு இசைக்குழு இந்த வழியாய் வரலாம். அப்படி யாராவது மறுபடியும் வந்து, அவர்களை நாம் கவனிக்காமல் விட்டால், அது எவ்வளவு பெரிய அவமானம்!" என்று பதிலளிப்பாள்.

'இப்போது உங்களுக்குப் புரியும், இதெல்லாம் வகுப்பிற்கு எவ்வளவு பெரிய இடையூறு என்று. இல்லையா?" டீச்சர் உணர்ச்சி பொங்க சொன்னாள். அம்மா அவளுக்காக உண்மையிலேயே பரிதாபப்பட ஆரம்பிக்கும் போது, அவள் மறுபடியும் தனது 'கிரீச்' குரலில், "அதற்கு பிறகு, மேலும்..." என ஆரம்பித்தாள்.

"அது தவிர வேறு என்ன செய்தாள்?" அம்மா கொஞ்சம் கொஞ்சமாய் நம்பிக்கையை இழந்து கொண்டே கேட்டாள்...

"வேறு என்ன செய்யவில்லை?" டீச்சர் உரக்கக் கத்தினாள். "நான் அவள் என்ன செய்கிறாள் என்பதை எண்ண முடிந்திருந்தால்கூட, அவளை இங்கிருந்து அழைத்துப் போகுமாறு சொல்ல உங்களை அழைத்திருக்க மாட்டேன்."

டீச்சர் தன்னையே சிறிது சமாதானப் படுத்திக்கொண்டு, அம்மாவை நேரடியாகப் பார்த்தாள். "நேற்று டோட்டோ-சான் வழக்கம் போல் ஜன்னலிலே நின்று கொண்டிருந்தாள். அவள் வீதி இசைஞர்களுக்காகத் தான் காத்துக் கொண்டிருக்கிறாள் என நினைத்துக்கொண்டு, நான் தொடர்ந்து பாடத்தை நடத்திக் கொண்டிருந்தேன். திடீரென அவள் யாரையோ அழைத்து 'என்ன செய்து கொண்டிருக்கிறாய்?' என்றாள். நான் இருந்த இடத்தில் இருந்து, யாருடன் அவள் பேசிக் கொண்டிருக்கிறாள் என என்னால் பார்க்க முடியவில்லை. நான் அங்கு என்ன நடக்கிறது என ஆச்சர்யப்பட்டேன். அவளோ மறுபடியும் கேட்டாள் 'என்ன செய்து கொண்டிருக்கிறாய்?' அவள் கண்டிப்பாய் தெருவில் இருந்தவரிடம்

பேசவில்லை. ஆனால் எங்கேயோ உயரத்தில் இருந்த யாரிடமோ பேசினாள். விநோதமாக இருந்ததால் என்னால் ஒன்றுமே செய்ய முடியவில்லை. நானும் பதில் ஏதாவது வருகிறதா என்று பார்த்ததில் ஒன்றுமே வரவில்லை. இருந்தாலும் உங்கள் மகள் 'என்ன செய்து கொண்டிருக்கிறாய்?' எனக் கேட்டுக் கொண்டே இருந்ததால், என்னால் பாடம் நடத்த முடியவில்லை. நானும் ஜன்னல் பக்கம் சென்று உங்கள் மகள் யாருடன் பேசுகிறாள் என பார்க்க முயன்றேன். நான் எனது தலையை ஜன்னல் வழியாய் வெளியே நீட்டி மேலே பார்த்தால், அங்கே ஒரு ஜோடி தூக்கணாங்குருவி வகுப்பறையின் சாய்ப்புக் கூரையில் தனது கூட்டை அமைத்துக் கொண்டிருப்பதைப் பார்த்தேன். அவள் குருவியிடம் போய் பேசிக் கொண்டிருக்கிறாள்! எனக்கும் குழந்தைகளைப் புரியும். அதனால் குருவிகளிடம் பேசுவது முட்டாள் தனமானது என்று ஒரேயடியாய் சொல்லிவிட மாட்டேன். ஆனால் வகுப்பின் நடுவிலே குருவிகளிடம் போய் 'என்ன செய்து கொண்டிருக்கிறாய்?' என்று கேட்பது கொஞ்சம்கூடத் தேவையில்லை என்று நான் கருதுகிறேன்."

அம்மா நடந்ததற்காக வருத்தம் தெரிவிக்கும் பொருட்டு வாயைத் திறப்பதற்குள், டீச்சர் தொடர்ந்தாள்... "அதற்குப் பிறகு ஓவிய வகுப்பில் நடந்த கதை. நான் குழந்தைகளை ஜப்பானின் தேசியக் கொடியை வரையுங்கள் எனக் கேட்டுக் கொண்டேன். மற்ற எல்லோரும் சரியாக வரைந்தார்கள். ஆனால் உங்கள் மகளோ கப்பற்படையின் கொடியை வரைய ஆரம்பித்தாள். அதுதான் உங்களுக்குத் தெரியுமே, ஒளிக் கற்றையுடன் கூடிய அந்தக்கொடி. அதில் கூடத் தப்பில்லை என்றுதான் நான் நினைத்தேன். ஆனால் அவள் அதைச் சுற்றி திடீரென 'பார்டர்' வரைய ஆரம்பித்துவிட்டாள். ஆமாம் 'பார்டர்' உங்களுக்குத் தெரியுமல்லவா, வீதி இசைஞர் குழுக்களின் கொடிகளுக்கு இருக்குமே அந்த மாதிரி 'பார்டர்'. அவள் அதை எங்கேயாவது பார்த்திருக்கலாம். அவள் என்ன செய்கிறாள் என்பதை நான் புரிந்து கொள்வதற்கு முன்பே, அவள் மஞ்சள் பார்டரை பேப்பரின் ஓரங்களிலும், மேஜையிலும் வரைந் திருந்தாள். அவள் வரைந்த கொடி பேப்பரின் பெரும்பகுதியை எடுத்துக் கொண்டதால், 'பார்டர்' வரைய போதுமான இடமில்லை. அவள் தனது மஞ்சள் கிரயானால் பல நூறு தடவைகள் கொடியைச் சுற்றித் தீட்டியிருந்தாள். அது பேப்பருக்கு வெளியிலும் படிந்திருந்தது. அவள் பேப்பரைத் தூக்கியதும் அவளது மேஜையில் பயங்கரமான மஞ்சள் கறை. எவ்வளவு அழுத்தித் தேய்த்தாலும் அந்தக் கறை போகவே இல்லை. நல்லவேளையாய் அந்த கோடுகள் மூன்று பக்கத்தோடு போய்விட்டது..."

ஆச்சரியத்தோடு அம்மா உடனே கேட்டாள், "மூன்று பக்கத்தோடு போய் விட்டது என்று சொன்னதின் மூலம் நீங்கள் எதைக் குறிப்பிட விரும்புகிறீர்கள்?"

டீச்சர் மிகவும் களைப்படைந்து காணப்பட்டாலும் மிகவும் கருணையுடன் அம்மாவிற்கு விவரித்தாள். "அவள் கொடிக்கம்பத்தை இடதுபக்கம் வரைந்ததால், பார்டர் மூன்று பக்கத்தோடு போய்விட்டது."

அம்மா, தான் சிறிது விடுவிக்கப்பட்டது போன்ற உணர்வுடன்

"ஓஹோ, மூன்று பக்கத்தோடு மட்டும் போய்விட்டதா!" என்றாள்.

ஆனால் டீச்சரோ தனது ஒவ்வொரு வார்த்தைகளையும் மெதுவாயும், அழுத்தம் கொடுத்தும் சொன்னாள். "ஆனால் கொடிக் கம்பத்தின் பெரும்பகுதியும் பேப்பரை விட்டு வெளியே வந்துவிட்டது. அதெல்லாம் இன்னும் மேஜையின் மேல் அப்படியே இருக்கிறது."

பிறகு டீச்சர் எழுந்து மிகவும் சாந்தமாய், ஆனால் பிரியப்போகும் தொனியில், "நான் மட்டும் தான் அவளால் நம்பிக்கை இழந்த ஒரே ஒருத்தி என்றெல்லாம் இல்லை. இதற்குப் பக்கத்து அறையிலுள்ள வகுப்பு டீச்சரும் அவளால் தொந்தரவு அடைந்தவர்கள்தான்" என்றாள்.

அம்மா வெளிப்படையாகவே இதற்கு ஏதாவது செய்தாக வேண்டும். இவையெல்லாம அடுத்த குழந்தைகளுக்கு நல்லதில்லை. தனது சிறு குழந்தையைப் புரிந்து கொண்டு, மற்றவர்களிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை அவளுக்கு கற்றுத்தரக்கூடிய வேறு பள்ளியைக் கண்டுபிடித்தாக வேண்டிய நிலையில் அம்மா இருந்தாள்.

இப்போது அவர்கள் சென்று கொண்டிருக்கும் பள்ளி அம்மா அப்படி தேடிக் கண்டுபிடித்த ஒன்றுதான். அம்மா டோட்டோ-சானிடம் அவள் வெளியேற்றப்பட்டதாய்ச் சொல்லவில்லை. டோட்டோ-சானுக்கு



தான் என்ன தவறு செய்கிறோம் என்பது புரியவில்லை என்பது தெரிந்த தாலும், அவளுக்கு எந்தவிதமான தாழ்வு மனப்பான்மையும் ஏற்படுவதை விரும்பாததாலும் டோட்டோ-சான் வளரும் வரை அம்மா இவை எதையும் அவளிடம் சொல்ல வேண்டாம் என முடிவெடுத்தாள். அம்மா சொன்னதெல்லாம் இதுதான். "புது ஸ்கூலுக்குப் போவது உனக்கு பிடிச்சிருக்கா? நான் இது ரொம்ப நல்ல ஸ்கூலுன்னு கேள்விப்பட்டேன்."

"எனக்குப் பிடிச்சிருக்கு" என்ற டோட்டோ-சான், சிறிது நேரம் யோசித்து விட்டு சொன்னாள். "ஆனால்......"

'என்ன ஆனால்? ஒரு வேளை தான் வெளியேற்றப்பட்டதை அவள் புரிந்து கொண்டாளா? என அம்மா நினைத்தாள்.

ஆனால் ஒரு கணம் கழித்து, டோட்டோ-சான் மிகவும் சந்தோசமாக வினவினாள். "வீதி இசைஞர்கள் இந்தப் புதிய பள்ளிக்கும் வருவார்கள் இல்லையா அம்மா?"

## புதிய பள்ளி

புதிய பள்ளியின் கேட்டைப் பார்த்ததுமே, டோட்டோ-சான் நின்றுவிட்டாள். அவள் போய்க் கொண்டிருந்த பழைய பள்ளியின் கேட், பெரிய எழுத்துகளில் பள்ளியின் பெயர் எழுதப்பட்ட அழகிய தூண்களில் இருந்தது. ஆனால் இந்தப் புதிய பள்ளியின் கேட், இளந்தளிர்களும், இலை களும் உடைய சிறிய கம்பத்தில் இருந்தது.

"இந்த கேட் வளர்ந்து கொண்டேயிருக்கும்" டோட்டோ-சான் சொன்னாள். "ஒருவேளை இது டெலிபோன் கம்பங்களை விடவும், உயரமாக வளர்ந்து கொண்டே போகும்..." அந்த இரண்டு 'கேட் கம்பங் களும்' உண்மையில் வேர்களுடன் கூடிய மரங்கள்தான். அவள் அதனருகில் போனதும், தனது தலையை ஒரு பக்கமாய்ச் சாய்த்து பள்ளியின் பெயரைப் படிக்க ஆரம்பித்தாள்... ஏனென்றால் காற்றில் பள்ளியின் பெயர்ப் பலகை சிறிது வளைந்து படபடத்தது.

"டோ... மோ... யி... ஹா... கு ...ன்"

டோட்டோ-சான் அம்மாவிடம் 'டோமோயி' என்றால் என்ன எனக் கேட்கப்போன நேரத்தில், அவள் ஏதோ ஒன்றின் தெளிவற்ற காட்சியினால் பீடிக்கப்பட்டாள். அவள் தான் நிச்சயம் கனவுதான் காணவேண்டும் என நினைக்கும்படி அந்தக் காட்சி செய்துவிட்டது. அவள் அப்படியே உட்கார்ந்துவிட்டாள். புதர்கள் வழியே இன்னும் நன்றாக பார்ப்பதற்காக உற்று நோக்கினாள். அவளால் தன் கண்களையே நம்ப முடியவில்லை.

"அம்மா, இது உண்மையிலேயே ரயில்தானே? அதோ, ஸ்கூல் மைதானத்தில்...!"

அந்தப் பள்ளி, தனது வகுப்பறைக்காக, ஆறு கைவிடப்பட்ட ரெயில்வே கார்களை உபயோகித்தது. ஒருவேளை கனவில் கண்ட ஒன்றாய்தான், அது டோட்டோ-சானுக்குத் தெரிந்தது. ஹய்யா, ரயிலில் ஒரு ஸ்கூல்!

ரயில்வே கார்களின் ஜன்னல்கள் காலை சூரிய வெளிச்சத்தில் மிளிர்ந்தன. அதையும்விட ரோஜா நிற கன்னத்தையுடைய, புதர்கள் வழியே உற்று நோக்கும் அந்த சின்னஞ் சிறுமியின் கண்கள் இன்னும் அதிகமாக மிளிர்ந்தன.

## "நான் இந்தப் பள்ளியை ரொம்ப விரும்புகிறேன்!"

ஒரு கணம் கழித்து, அம்மாவையும் தன்னுடன் வருமாறு அழைத்துக் கொண்டே, டோட்டோ-சான் அப்படியே சந்தோஷக் கூச்சலிட்டுக் கொண்டு 'ரயில் பள்ளி'யை நோக்கி ஓட ஆரம்பித்தாள். "வாம்மா... சீக்கிரம்... நாம் அப்படியே நிற்கும் அந்த ரயிலுக்குள் போவோம்..."

அப்படியே வியந்து போன அம்மா, அவள் பின்னால் ஓட ஆரம் பித்தாள். அம்மா ஒரு காலத்தில் கூடைப்பந்து அணியில் இருந்திருந்ததால், டோட்டோ-சானையும் விட வேகமாக ஓடி, அவள் கதவை அடையும் முன்னர், அவள் சட்டையைப் பிடித்துவிட்டாள்.

"அதற்குள் உள்ளே போக முடியாது" அவளின் பின்பாகத்தைப் பிடித்து நிறுத்திக்கொண்டே, அம்மா சொன்னாள். "இந்த ரயில்வே கார்கள்தான் வகுப்பறைகள். இந்த ஸ்கூலில் நீ இன்னும் சேர்க்கப்படவே இல்லை. நீ உண்மையிலேயே இந்த ரயிலுக்குள் போக நினைத்தால், ஹெட்மாஸ்டரிடம் ரொம்ப நல்லாவும், அமைதியாவும் நடந்துக்கணும். நாம் இப்ப அவரிடம்தான் போறோம். எல்லாம் ஒழுங்காக நடந்தால், உனக்கு இந்த பள்ளியில் கண்டிப்பாய் இடம் கிடைக்கும். என்ன, சொல்வதெல்லாம் புரிஞ்சுதா?"

ரயிலுக்குள் நேரடியாகப் போக முடியாததால் பயங்கரமாய் ஏமாற்ற மடைந்தாலும், டோட்டோ-சான் அம்மா சொல்லும்படி நடந்து கொள்வதே சிறந்தது என முடிவெடுத்தாள்.

"சரிம்மா" என்றாள் டோட்டோ-சான். பிறகு, "நான் இந்த ஸ்கூலை மிகவும் விரும்புகிறேன் அம்மா" என்று சேர்த்துச் சொன்னாள்.

உனக்குப் பள்ளி பிடிக்கிறதா என்பது பிரச்சினையே இல்லை, தலைமை ஆசிரியருக்கு உன்னை பிடிக்கிறதா என்பதுதான் பிரச்சினை என்று அம்மா டோட்டோ-சானிடம் சொல்ல நினைத்தாள். ஆனால் அப்படிச் செய்யாமல், பிடித்திருந்த டோட்டோ-சானின் சட்டையை விட்டுவிட்டு, அவள் கையைப் பிடித்துக் கொண்டு தலைமையாசிரியர் அலுவலகத்தை நோக்கி நடந்தாள்.

அன்றைய நாளின் முதல் வகுப்புகள் தொடங்கி விட்டதால், ரயில்வே கார்கள் அமைதியாக இருந்தன. சுவர்களுக்குப் பதில், மரங் களால் சூழப்பட்ட விஸ்தாரமான மைதானத்தைப் பெற்றிருந்தது பள்ளி. மைதானம் சிவப்பு, மஞ்சள் மலர்களிலான மலர் படுக்கையாக விரிந்து கிடந்தது.

தலைமை ஆசிரியரின் அலுவலகம் ரயில்வே கார்களில் அமைந்திருக்க வில்லை. கேட்டிற்கு எதிரே, வலது பக்கத்தில் அரைவட்ட விமான

வடிவத்திலுள்ள முதல் மாடி கட்டிடத்தில், ஏழு கல் படிக்கட்டுகள் ஏறினால் தலைமை ஆசிரியரின் அலுவலகம் இருந்தது.

டோட்டோ-சான் அம்மாவின் கையை விட்டுவிட்டு, படிக்கட்டு வழியே ஓடியதால், அம்மாவும் அவள் பின்னாடியே ஓடிவரும்படி ஆகிவிட்டது. மேலே சென்றதும், திடீரென டோட்டோ-சான் முழுவதுமாய் கீழேப் பார்த்து திரும்பினாள்.

ஒருவேளை டோட்டோ-சான் பள்ளி பற்றிய தன் கருத்தை மாற்றிக் கொண்டாளோ என்ற பயத்துடன், அம்மா "என்ன விஷயம்?" என்றாள்.

மேற்படியிலே, அம்மாவிற்கும் மேலே நின்றுகொண்டு, டோட்டோ-சான் மிகவும் 'சீரியசாய்' அம்மாவின் காதில் கிசுகிசுத்தாள். "நாம் பார்க்கப் போகும் ஆள், நிச்சயமாக ஸ்டேஷன் மாஸ்டராய்தான் இருக்க வேண்டும்"

அம்மாவிற்கு நிரம்ப பொறுமை இருந்தது போல, நகைச்சுவை உணர்வும் இருந்தது. அவள் தனது முகத்தை டோட்டோ-சானின் முகத்திற்கு அருகே வைத்து, "ஏன்?" என மெலிதான குரலில் கேட்டாள்.

டோட்டோ-சான் பதிலுக்கு முணுமுணுத்தாள். "நீ சொன்னே, இவர் ஹெட்மாஸ்டர்ன்னு. ஆனா இவ்வளவு ரயிலை சொந்தமா வச்சிருக்கிறதுனாலே, அவர் கண்டிப்பா ஸ்டேஷன் மாஸ்டர்தான்".

பழைய ரெயில்வே கார்களை வைத்துக் கொண்டு ஒரு பள்ளியை நடத்துவது வழக்கத்தில் இல்லாத ஒன்றாகையால், அம்மாவும ஒப்புக் கொண்டாக வேண்டியிருந்தது. இதை அவளுக்குச் சரியாக விளக்க நேரம் வேறு இல்லை. இருநதாலும் அம்மா எளிமையாக வினவினாள். "இதை ஏன் உன்னையே கேட்டுக் கொள்ளக் கூடாது? சரி, உன் அப்பா என்ன செய்யறார்? அவர் வயலின் வாசிக்கிறார். அவருக்கு நிறைய வயலின் சொந்தமா இருக்கு. அதனால நம்ம வீடு ஒரு வயலின் கடைன்னு ஆயிடா தில்லையா?"

"ஆகாது. ஆகவே ஆகாது" அம்மாவின் கையைப் பிடித்துக் கொண்டு, டோட்டோ-சான் ஒப்புக் கொண்டாள்.

## தலைமையாசிரியர்

அம்மாவும், டோட்டோ-சானும் உள்ளே சென்றபோது, அலுவலகத்தில் இருந்த மனிதர் தனது நாற்காலியில் இருந்து எழுந்து நின்றார்.

அவர் தலை மயிர் மேற்பகுதியில் சன்னமாய் இருந்தது. அவரது சில பற்கள் காணாமல் போயிருந்தன. ஆனால் அவரது முகமோ ஆரோக்கியமான நிறத்துடன் இருந்தது. அவர் அதிக உயரம் இல்லை என்றாலும், திண்ணமான தோள்களையும், கைகளையும் பெற்றிருந்தார். அவர், அதிகம் பயன்படுத்திய அறிகுறியுடன் கூடிய தனது 'திரி பீஸ் சூட்' (three piece suit)டையே மிகவும் நேர்த்தியாக அணிந்திருந்தார்.

வேகமாகத் தலை வணங்கி, மிகவும் உற்சாகத்துடன் அவரை வினவினாள் டோட்டோ-சான், " நீங்கள் யார்? ஸ்கூல் மாஸ்டரா இல்லை

ஸ்டேஷன் மாஸ்டரா?"

அம்மா சங்கடப்பட்டுப் போனாள். அம்மா அதை விளக்குவதற்கு நேரம் எடுத்துக் கொள்வதற்கு முன்னே, அவர் சிரித்துக் கொண்டே பதிலளித்தார். "நான் இந்த ஸ்கூலின் ஹெட்மாஸ்டர்."

டோட்டோ-சான் மிகவும் சந்தோசம் அடைந்தாள். "ஹோ... அப்படின்னா எனக்கு ரொம்ப சந்தோசம்..." அவள் தொடர்ந்து சொன்னாள், "ஏன்னா, உங்ககிட்ட நான் ஒரு சலுகை கேட்கப் போகிறேன். நான் உங்க ஸ்கூலுக்கு வர விரும்புகிறேன்..."

தலைமையாசிரியர் ஒரு நாற்காலியைக் கொடுத்து, அம்மா பக்கம் திரும்பினார். "வேண்டுமென்றால் நீங்க இனி வீட்டுக்குப் போகலாம். நான் இவளிடம் பேச விரும்புகிறேன்."

டோட்டோ-சானுக்கு ஒரு கணம் இலகுவின்மையான உணர்வு ஏற்பட்டாலும், எப்படியோ இந்த மனிதரோடு எல்லாமே சரியாகத்தான் போகும் என்ற உணர்வும் ஏற்படத்தான் செய்தது.

"சரி, அவளை உங்களோடு விட்டுச் செல்கிறேன்" அம்மா தைரியமாக சொல்லிவிட்டு, வெளியே போகும்போது தனக்குப் பின்னாலிருந்த கதவை மூடிச் சென்றாள்.

தலைமையாசிரியர் ஒரு நாற்காலியை இழுத்து டோட்டோ-சானுக்காகப் போட்டார். பிறகு இருவரும் மிக அருகில் சேர்ந்து உட்கார்ந்ததும், அவர் சொன்னார், "இனி எனக்கு உன்னைப் பற்றிய எல்லாவற்றையும் சொல். நீ பேச விரும்புகிற எதைப் பற்றி வேண்டுமானாலும், என்னிடம் சொல் ..."

"நான் விரும்புகிற எதைப் பற்றி வேண்டுமானாலும் சொல்லலாமா?" டோட்டோ-சான் அவர் ஏதாவது கேள்வி கேட்பார், தான் பதில் சொல்ல வேண்டியிருக்கும் என்றுதான் எதிர்பார்த்திருந்தாள். அவர் எப்போது அவள் விரும்பும் எதைப் பற்றி வேண்டுமானாலும் அவள் பேசலாம் என்று சொன்னாரோ, உடனே மிகவும் சந்தோஷமடைந்து, நேரடியாகவே ஆரம்பித்தாள். அவள் எல்லாவற்றையும் கலந்தடித்துப் பேசினாலும், தான் பேசுவதற்குத் தகுதியுள்ள எல்லாவற்றையும் பற்றிப் பேசினாள். அவள் தலைமை ஆசிரியரிடம் சொன்னாள், அவர்கள் வந்த ரயில் எவ்வளவு வேகமாகப் போனது என்று; டிக்கெட் கலெக்டரிடம் எப்படிக் கேட்டும், அவர் டிக்கெட்டை அவளே வைத்துக் கொள்ள அனுமதிக் காததைப் பற்றி; அவள் முன்னே படித்த பள்ளியின் ஹோம்ரூம் டீச்சர் எவ்வளவு அழகாய் இருந்தாள் என்பது பற்றி; தூக்கணாங்குருவியின் கூட்டைப் பற்றி; அவர்கள் பழுப்பு நிற நாய் ராக்கி எப்படி எல்லா வித தந்திரங்களையும் செய்யும் என்பது பற்றி; தான் மழலையர் பள்ளியில் கத்திரிக்கோலை வாய்க்குள் விட்டு எப்படிக் கத்தரித்து கத்தரித்துப் பார்த்தாள் என்பது பற்றி; அப்படிச் செய்யக் கூடாது, அப்படி செய்தால் நாக்கு வெட்டுப்பட்டுவிடும் என டீச்சர் சொன்ன பிறகும், எப்படியோ மறுபடியும் அதைச் செய்து விடுவது பற்றி; தன் மூக்கு ஒழுகுகிறதோ என அம்மா திட்டனும் என்பதற்காகவே, அடிக்கடி மூக்கை உறிஞ்சுவது பற்றி; அப்பா எவ்வளவு நல்ல நீச்சல்காரர் என்பது பற்றி; அவரால்

எப்படியெல்லாம் 'டைவ்' அடிக்க முடியும் என்பது பற்றி அவள் சொல்லிக் கொண்டே, சொல்லிக் கொண்டே போய்க் கொண்டிருந்தாள். தலைமை ஆசிரியரும் சிரிப்பார், தலையை அசைத்துக் கவனிப்பார், 'பிறகு என்ன?' என்று கேட்பார். டோட்டோ-சானுக்கும் தான் தொடர்ந்து பேசுவது, மிகுந்த சந்தோஷமாய் இருந்தது. ஆனால் கடைசியாகச் சொல்லுவதற்கு உள்ள அனைத்தையும் சொல்லித் தீர்த்து விட்டாள். அவள் வாயை மூடிக்கொண்டு, இன்னும் சொல்லுவதற்கு என்ன உள்ளது என்று கடுமையாக யோசித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

"என்னிடம் சொல்லுவதற்கு இன்னும் ஏதாவது வைத்திருக்கிறாயா?" தலைமையாசிரியர் வினவினார்.

இப்போது நிறுத்துவது எவ்வளவு பெரிய அவமானம் என டோட்டோ-சான் நினைத்தாள். இது எவ்வளவு அருமையான வாய்ப்பு! தனது மூளையைப் பிசைந்து, இன்னும் தான் சொல்லுவதற்கு ஏதாவது பாக்கியுள்ளதா எனச் சிந்தித்தாள். அவளுக்கு ஒரு எண்ணம் வந்தது.

அவள் இன்றைக்கு அணிந்திருக்கும் சட்டையைப் பற்றிச் சொல்லலாமே. அம்மாதான் அவளது பெரும்பான்மையான சட்டையைத் தைப்பாள். ஆனால் அவள் அணிந்திருப்பது கடையில் வாங்கியது. மாலை நேரங்களில் அவள் வீட்டிற்கு வரும்போது, அவள் சட்டை எப்போதுமே கிழிந்திருக்கும். சில கிழிசல்கள் ரொம்ப மோசமாய் இருக்கும். அம்மாவுக்கு இதெல்லாம் எப்படிக் கிழிந்தது என்பது மட்டும் தெரியவே தெரியாது. அவளது வெள்ளை பருத்தி ஜட்டிகூட சில நேரங்களில் கந்தலாகிவிடும். அவள் தலைமை ஆசிரியரிடம், யார் தோட்டத்து முள் வேலிக்குள்ளாவது தலையில் ஊர்ந்து கடக்க முயலும்போதும், முட்கம்பி வேலிகளின் அடியிலுள்ள நிலத்தில் வளை தோண்டும் போதும்தான் தன் சட்டை இப்படிக் கிழிகிறது என்ற ரகசியத்தை விளக்கினாள். இன்றைக்குக் காலையில், இங்கே வருவதற்காக ஆடை அணியும்போதுதான், அம்மா தைத்த அனைத்து நல்ல சட்டைகளும் கிழிந்துவிட்டது என்பது தெரிந்தது. ஆகவேதான் அம்மா கடையில் வாங்கிய இந்தச் சட்டையை அவள் அணிய வேண்டியதாயிற்று. ஜெர்ஸியால் தயாரிக்கப்பட்ட அந்தச் சட்டையில், கருஞ்சிவப்பு, சாம்பல் நிறங்களிலான கோடுகளால் சிறு சதுரங்கள் இருந்தன. அது மோசமில்லை. இருந்தாலும் சட்டைக் காலரில் பின்னப்பட்டுள்ள அந்த சிவப்புப் பூக்கள் நன்றாக இல்லை என அம்மா நினைத்தாள். "அம்மாவுக்கு இந்த சட்டைக் காலரே பிடிக்காது" என்று சொல்லிக்கொண்டே, தலைமையாசிரியர் பார்ப்பதற்காக அந்த சட்டைக் காலரை டோட்டோ-சான் தூக்கிக் காண்பித்தாள்.

அதற்கு பிறகு, எவ்வளவுதான் கஷ்டப்பட்டு முயன்றாலும், மேலும் சொல்வதற்கு அவளால் ஒன்றையும் நினைவுபடுத்த முடியவில்லை. அது அவளை மிகவும் சோகமாக்கியது. அதற்குப் பிறகு தலைமையாசிரியர் நாற்காலியில் இருந்து எழுந்து, தனது பெரிய கதகதப்பான கைகளை அவள் தலையில் வைத்து, பின்னர் சொன்னார், "நல்லது, இப்பொழுதிலிருந்து நீ இந்தப் பள்ளியின் மாணவி."

இந்த வார்த்தைகள்தான் அவரது குறிப்பிடத்தக்க வார்த்தைகள். அந்த கணமே, தனது முதல் சந்திப்பிலேயே தன்னை இப்படிக் கவர்ந்தவர் யாருமில்லை என்பதை உணர்ந்தாள் டோட்டோ-சான். இன்றைக்கு வரைக்கும், யாருமே அவள் சொல்வதை இவரைப் போல இவ்வளவு நேரத்திற்கு கூர்ந்து கவனித்ததில்லை. அவள் சொல்லிக் கொண்டிருந்த நேரம் முழுவதும், தலைமை ஆசிரியரும், அவள் எவ்வளவு ஆர்வத்துடன் சொன்னாளோ, அதே ஆர்வத்துடன்தான் கேட்டுக் கொண்டிருந்தார். இடையில் ஒரு நேரம்கூட கொட்டாவி விடவில்லை. பேச்சு சுவையற்றதாக உணரவில்லை.

டோட்டோ-சான் நேரத்தை எப்படிப் பார்ப்பது என்பதை இன்னும் கற்றிருக்கவில்லை. ஆனால் ரொம்ப நேரம் எடுத்துக் கொண்டாள் என்பது மட்டும் அவளுக்குப் புரிந்தது. எவ்வளவு நேரம் அவருடன் எடுத்துக் கொண்டாள் என்பது மட்டும் அவளுக்குத் தெரிந்திருந்தால், உண்மையிலேயே அதிசயித்து, இன்னும் தலைமை ஆசிரியருக்கு நன்றியுள்ளவளாக இருந்திருப்பாள். அம்மாவும் டோட்டோ-சானும் எட்டு மணிக்கு வந்தார்கள். அவள் தனது பேச்சை முடித்து, தலைமையாசிரியர் அவளை அந்தப் பள்ளியின் மாணவிதான் என்று சொல்லியதும், அவர் தனது 'பாக்கெட் வாட்ச்'சை எடுத்துப் பார்த்து சொன்னார், "ஆ... மதிய உணவு நேரம் வந்துவிட்டது". அப்படியானால் தலைமையாசிரியர் நான்கு முழு மணி நேரங்கள் அவள் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந் திருக்கிறார்.

அதற்கு முன்னும் சரி, அன்றிலிருந்தும் சரி பெரியவர்கள் யாரும் டோட்டோ-சானை அவ்வளவு நீண்ட நேரம் கவனித்ததே இல்லை. மேலும் அம்மாவாகட்டும் அல்லது தனது ஹோம்ரூம் டீச்சர் ஆகட்டும், ஒரு ஏழு வயது சிறுமி, நான்கு மணி நேரம் விடாமல் தொடர்ந்து பேசுவதற்குப் போதுமான விஷயங்கள் வைத்திருக்கிறாள் எனத் தெரிந்தால ஆச்சரியப்பட்டுப் போய்விடுவார்கள்.

டோட்டோ-சான் தான் வெளியேற்றப்பட்டதைப் பற்றியும் தன்னை வைத்துக் கொண்டு என்னதான் செய்வது எனத் தெரியாமல் விழிக்கும் நபர்களைப் பற்றியும், அப்போது உணர்ந்திருக்கவில்லை. இயற்கையிலேயே சந்தோஷகரமான மனோநிலையும், எதிலாவது ஊன்றி மற்றதையெல்லாம் மறந்துபோகும் மனோநிலையும் அவள் பெற்றிருந்ததால், அது அவளை வெகுளியாகக் காட்டியது. ஆனால் மனதின் ஆழத்தில், தன்னை மற்ற குழந்தைகளிடமிருந்து வேறுபட்டவளாகவும், சிறிது விநோதமானவளாகவும் அவள் உணர்ந்தாள். எப்படியோ தலைமையாசிரியர் அவள் பாதுகாப்பாகவும், தன்னம்பிக்கையாகவும், சந்தோஷமாகவும் இருப்பதாய் உணர வைத்துவிட்டார். அவளும் அவருடனேயே எப்போதும் இருந்துவிட வேண்டும் என விரும்பினாள்.

இதுதான் டோட்டோ-சான், தலைமையாசிரியர் சோசாகு கோபயாஷி பற்றி முதல் நாளில் உணர்ந்தது. ஆனால் அதிர்ஷ்டவசமாய், அவள் உணர்ந்ததைப் போலவே அவளைப் பற்றி தலைமை ஆசிரியரும் நினைத்திருந்தார்.

# மதிய உணவு நேரம்

குழந்தைகள் மதிய உணவு உண்ணும் இடத்தைப் பார்ப்பதற்காக, தலைமையாசிரியர் டோட்டா-சானையும் அழைத்துச் சென்றார். "நாங்கள் மதிய உணவை ரயிலில் சாப்பிட மாட்டோம். அசெம்பிளி ஹாலில்தான் சாப்பிடுவோம்..." அவர் விளக்கினார். அசெம்பிளி ஹால் கல் படிக்கட்டு களின் உயரத்தில் இருந்தது. டோட்டோ-சான் வேகமாய் ஏறி மேலே வந்துவிட்டாள். அவர்கள் மேலே வந்ததும், குழந்தைகள் மேஜையையும், நாற்காலியையும் வட்ட வடிவமாக அமைப்பதற்காக அவற்றை அங்கும் இங்கும் சப்தம் ஏற்பட இழுத்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் இருவரும் ஒரு மூலையில் இருந்து இதைக் கவனித்துக் கொண்டிருந்தபோது, டோட்டோ-சான் தலைமை ஆசிரியரின் மேல் சட்டையை இழுத்து கேட்டாள், "எங்கே மற்ற பிள்ளைகள் எல்லாம்?"

"இவ்வளவு பிள்ளைகள்தான்" என்று அவர் பதிலளித்தார்.

"இவ்வளவுதானா?" டோட்டோ-சானால் நம்பவே முடியவில்லை. அவள் முன்னர் படித்த பள்ளியில், ஒரு கிரேடுக்கே இவ்வளவு பிள்ளைகள் இருப்பார்கள்.

"நீங்க சொல்றபடின்னா, ஒரு மொத்த ஸ்கூலுக்கே கிட்டத்தட்ட வெறும் ஐம்பது பிள்ளைகள்தானா?"

"ஆமாம். அவ்வளவுதான்" தலைமையாசிரியர் பதிலளித்தார்.

இந்தப் பள்ளியில் அனைத்துமே மற்ற பள்ளிகளில் இருந்து வித்தியாசமாக இருக்கிறது, என டோட்டோ-சான் நினைத்தாள்.

எல்லோரும் இருக்கையில் அமர்ந்தவுடன், தலைமையாசிரியர் மாணவ, மாணவிகளைப் பார்த்து, "கடலிலிருந்து கொஞ்சம் மலைகளி லிருந்து கொஞ்சம் என்று எல்லோரும் கொண்டு வந்திருக்கிறீர்களா?" என்று கேட்டார். "ஆமாம்" என்று மதிய உணவுப் பெட்டியைத் திறந்து கொண்டே, கும்பலாய் ஒன்றுபோல அவர்கள் கூவினார்கள்.

"உங்களுக்கு மதியம் என்ன கிடைத்துள்ளது என்று நாம் பார்ப்போம்" என்று சொல்லிக் கொண்டே, தலைமையாசிரியர் வட்டமான மேசையைச் சுற்றி ஒவ்வொருவர் மதிய உணவுப் பெட்டியாய் பார்த்துக் கொண்டே மெல்ல நிதானமாய் நடந்தார். குழந்தைகள் எல்லோரும் சந்தோஷத்தில் கூச்சலிட்டனர்.

'இதெல்லாம் எவ்வளவு வேடிக்கை! கடலிலிருந்து கொஞ்சம் மலைகளிலிருந்து கொஞ்சம் என்பதன் மூலம் தலைமையாசிரியர் என்ன பொருள் கொள்கிறார் என்பது தனக்கு விளங்காமல் வியப்பாய் இருக்கிறதே' என டோட்டோ-சான் நினைத்துக் கொண்டாள். இந்தப் பள்ளி வித்தியாச மானது; மிகவும் வேடிக்கையானது. மதிய உணவு, பள்ளிகளில் இவ்வளவு வேடிக்கையாக இருக்கும் என்று அவள் நினைத்தே பார்த்ததில்லை. நாளைக்கு டோட்டோ-சானும் இந்த மாதிரி மேஜையில் உட்கார்ந்து கொண்டு, 'கடலிலிருந்து கொஞ்சம், மலைகளிலிருந்து கொஞ்சம்' என்று தலைமையாசிரியருக்குக் காண்பிப்பாள் என்ற எண்ணமே அவளைச் சந்தோஷம் அடைய வைத்தது. அவள் சந்தோஷத்தில் குதிக்க விரும்பினாள்.

மதிய உணவுப் பெட்டிகளைச் சோதித்துக் கொண்டிருந்த தலைமை யாசிரியரின் தோள்பட்டைகள், மெல்லிய மதிய நேர வெளிச்சத்தில் குளித்துக் கொண்டிருந்ன.

## டோட்டோ-சான் பள்ளிக்குக் கிளம்புகிறாள்

தலைமையாசிரியர் "இப்போதிலிருந்து, நீ இந்தப் பள்ளியின் மாணவி" என்று சொன்னப் பிறகு, டோட்டோ-சானுக்கு அடுத்த நாள் விடியும்வரை கூடக் காத்திருக்க முடியவில்லை. அவள் இவ்வளவு ஆசையுடன் எந்த ஒரு நாளுக்காகவும் ஏங்கிக் கொண்டிருந்ததில்லை. அம்மாவுக்கு டோட்டோ-சானைக் காலையில் படுக்கையிலிருந்து எழுப்புவது, பெரிய தொந்தரவாகவே இருக்கும். ஆனால் இன்றோ டோட்டோ-சான் எல்லோருக்கும் முன்பே எழுந்து, நன்றாகச் சட்டை போட்டுக் கொண்டு, பள்ளிப்பையை முதுகில் மாட்டிக் கொண்டு காத்திருந்தாள்.

வீட்டில் காலந்தவறாமையை மிகவும் ஒழுங்காய் கடைபிடிக்கும் உறுப்பினரான ராக்கி, ஜெர்மன் ஷெப்பர்ட் நாய், டோட்டோ-சானின் வழக்கத்துக்கு மாறான நடவடிக்கையைச் சந்தேகத்துடன் பார்த்துக் கொண்டிருந்தது. பிறகு ஒரு நீண்ட சோம்பல் முறிப்பிற்குப் பிறகு, ஏதோ நடக்கப் போகிறது என்ற எதிர்பார்ப்புடன், அவளருகே போய் இருந்து கொண்டது.

அம்மா ஏராளமாக செய்ய வேண்டியிருந்தது. அவள் மதிய உணவுப் பெட்டிக்குத் தேவையான 'கடலிலிருந்து கொஞ்சமும், மலைகளிலிருந்து கொஞ்சமும்' தயாரித்தாள். கூடவே டோட்டோ-சானுக்குக் காலை உணவு கொடுத்தாள். மேலும் டோட்டோ-சானின் 'ரயில்வே பாஸை' ஒரு கடின பிளாஸ்டிக் பைக்குள் வைத்து, அதை ஒரு கயிற்றினால் கட்டி டோட்டோ-சானின் கழுத்தில் கட்டித் தொங்கவிட்டாள். ஆதலால் அவள் அதை தொலைத்து விட மாட்டாள். கலைந்த கேசங்களுடன் வந்த அப்பா, "நல்ல பொண்ணா இருக்கணும்" என்றார்.

"சரிப்பா" டோட்டோ-சான் தனது ஷூவை போட்டுக் கொண்டு, முன் கதவைத் திறந்து, பின்னர் மறுபடியும் திரும்பி, மிகவும் மரியாதையுடன் வணங்கி, "எல்லோருக்கும் போய் வருகிறேன்" என்றாள்.

அம்மாவின் கண்களில், டோட்டோ-சான் போவதைப் பார்த்ததும், கிணற்றுத் தண்ணீர் போல் கண்ணீர் திரண்டிருந்தது. இவ்வளவு தாழ்மை யுடனும், சந்தோஷத்துடனும் ஆக்கப்படக் கூடிய உற்சாகமான இந்தச் சின்னஞ்சிறுமி பள்ளியிலிருந்து வெளியேற்றப்பட்டாள் என்பதை நம்பு வதற்கு முடியவே இல்லை. அம்மா இந்த தடவை அனைத்தும் நன்றாக நடக்க வேண்டும் என மிக உருகி பிரார்த்தனை செய்து கொண்டாள்.

ஒரு கணம் கழித்து டோட்டோ-சான் தனது கழுத்திற்குப் பதிலாக ராக்கியின் கழுத்தைச் சுற்றித் தனது ரயில் பாஸை கழற்றித் தொங்க விட்டிருப்பதைக் கண்டு, அம்மா அதிர்ச்சியடைந்தாள். 'என் அருமைப் பெண்ணே...' என ஏதோ சொல்ல நினைத்த அம்மா, என்னதான்

நடக்கிறது என பொறுத்திருந்து பார்ப்போமே என்ற எண்ணத்துடன், ஒன்றும் சொல்லாமல் விட்டு விட்டாள்.

டோட்டோ-சான் பாஸுடன் கூடிய அந்த கயிற்றை ராக்கியின் கழுத்தில் சுற்றி போட்டதும், அப்படியே அவள் கீழே உட்கார்ந்து, அதனிடம் சொன்னாள். "நீயே பாரேன்! இந்த பாஸ் உனக்குச் சரியாக பொருந்தவே இல்லை"

அந்த கயிறு மிகவும் நீளமாக இருந்தது. அதனால் பாஸ் தரையில் இழுபட்டது.

"உனக்குப் புரிகிறதா? இது எனது பாஸ், உன்னுடையது அல்ல. உன்னால் ரயிலைப் பிடிக்க முடியாது. நான் ஹெட்மாஸ்டரிடமும், ஸ்டேஷனில் உள்ள ஆளிடமும் கேட்டு, உன்னையும் பள்ளிக்கு வர விடுவார்களா என பார்க்கிறேன்"

முதலில் காதுகளைத் தூக்கிக் கொண்டு, ராக்கி கவனத்துடன்தான் கேட்டது. ஆனால் பிறகு அந்த பாஸை சில தடவைகள் நக்கிவிட்டு, கொட்டாவி விட்டது. டோட்டோ-சன் தொடர்ந்து சொல்லிக் கொண்டிருந்தாள். "அந்த கிளாஸ் ரூம் ரயில் நகராது. அதனால் அதற்குள் போவதற்கு உனக்கும் டிக்கெட் வேண்டியிருக்கும்ன்னு நான் நினைக்கலை. எப்படியிருந்தாலும் இன்றைக்கு நீ வீட்டிலேயே இருந்து, எனக்காக காத்துக் கொண்டுதான் இருக்கணும்."

ராக்கி எப்போதும் டோட்டோ-சானுடனேயே அவளது பழைய பள்ளியின் கேட் வரைக்கும் வந்து, அவளை விட்டுவிட்டு பின்னர் திரும்பி வீட்டிற்கு வந்துவிடுவது வழக்கம். அதனால் யதார்த்தமாய் இன்றைக்கும் அதையே செய்ய எதிர்பார்த்து நின்றது.

டோட்டோ-சான் ராக்கியின் கழுத்தைச் சுற்றி கயிற்றுடன் கட்டியிருந்த பாஸை எடுத்து, மிகவும் ஜாக்கிரதையாய் தன் கழுத்தைச் சுற்றித் தொங்கவிட்டாள். இன்னொரு முறை அம்மாவையும், அப்பாவையும் அழைத்து, "சென்று வருகிறேன்" என்றாள்.

பிறகு ஒருதடவை கூடத் திரும்பிப் பார்க்காமல், அவள் ஓட ஆரம்பித்தாள். அவள் ஓட்டத்திற்கு ஏற்றபடி, அவள் முதுகிலிருந்த பள்ளிப்பை குதித்தாடியது. ராக்கியும் அவள் பின்னாடியே சந்தோஷமாய் குதித்தும், தாண்டியும் வந்தது. ஸ்டேசனுக்குப் போகவேண்டிய வழியும், கிட்டத்தட்ட அவள் பழைய பள்ளிக்குப் போகவேண்டிய பாதையிலேயே தான் இருந்தது. அதனால் டோட்டோ-சான் தனக்குத் தெரிந்த நாய்கள், பூனைகள், தனது முந்தைய பள்ளி வகுப்பின் குழந்தைகள் என எல்லோரையும் கடந்து சென்றாள்

தனது பாஸை அவர்களிடம் காண்பித்து, அவர்களைக் கவரலாமா என அவள் நினைத்தாள். ஆனால் அவள் காலதாமதத்தை விரும்பவில்லை. ஆகையால் இன்றைக்கு வேண்டாம் என முடிவெடுத்து விரைந்தாள்.

டோட்டோ-சான் வழக்கமாகத் திரும்பும் இடது பக்கத்திற்கு பதில், வலதுபக்கமாக ஸ்டேசன் நோக்கித் திரும்பியதால், ராக்கி பரிதாபமாக நின்று, அவளை ஆர்வத்துடன் பார்த்தது. டோட்டோ-சான் ஏற்கெனவே டிக்கெட்-கேட்டை அடைந்து விட்டாலும், குழப்பத்துடன் நின்று கொண்டிருந்த ராக்கியிடம் திரும்பி வந்தாள்.

"நான் பழைய ஸ்கூலுக்கு இனிமே போகவே மாட்டேன். புது ஸ்கூல் ஒண்ணுக்குப் போகப் போறேன்."

டோட்டோ-சான் தனது முகத்தை, ராக்கியின் முகத்திற்கு எதிராக வைத்தாள். அதனுடைய காதுகளில் எப்போதும் போலவே வீச்சம் வீசியது. ஆனால் டோட்டோ-சானுக்கோ அது சுகந்தமாய் மணத்தது.

"வரேன், வரேன்" என்று சொல்லிவிட்டு, தனது பாஸை டிக்கெட் கேட் மனிதரிடம் காட்டிவிட்டு, ஸ்டேசனின் உயரமான படிகள் வழியே அவள் ஏற ஆரம்பித்தாள். ராக்கி சன்னமான கரகரத்த குரலில் கத்தியது. பிறகு டோட்டோ-சான் கண்ணை விட்டு மறையும் வரை பார்த்துக் கொண்டேயிருந்தது.

## ரயிலுக்குள் வகுப்பறை

தலைமையாசிரியர் அவளது வகுப்பறை என்று சொன்ன ரெயில்வே காரின் கதவை அவள் அடைந்தபோது, வேறு யாரும் அதுவரைக்கும் வந்திருக்கவில்லை. அது ஒரு பழைய பாஷன் கார். அதனால் அதன் கதவை வெளியே இருந்துதான் கையாள வேண்டியிருந்தது. அதன் கைப்பிடியை இரண்டு கைகளாலும் பிடித்து, கதவை வலது பக்கமாகத் தள்ள வேண்டும். கதவு திறந்து அவள் உள்ளே கூர்ந்து பார்த்ததும், டோட்டோ-சானின் இதயம் தாங்க முடியாத சந்தோசத்தில் வேகமாக அடிக்க ஆரம்பித்தது.

"ஊஹோ!... "

இங்கே படிப்பது என்பது முடிவில்லாத பயணத்தைத் தொடர்வது போல. ஜன்னலுக்கு மேலே பைகள் வைப்பதற்கான அடுக்கு இருந்தது; வழக்கமான ரயில்வே காரில் இருப்பதைப் போலவே... ஒரே வித்தியாசம் என்னவென்றால், காரின் முன்பகுதியில் கரும்பலகை இருந்தது, நீளவாட்ட காரின் இருக்கைகளுக்குப் பதிலாய்ப் பள்ளிக்கூட மேஜை நாற்காலிகள் கரும்பலகையைப் பார்த்து இருக்கும்படி போடப்பட்டிருந்தன. மேலும், மேலே தொங்கும் ரப்பர் கைப்பிடிகளும் இல்லை. இருந்தாலும் மற்ற தெல்லாம் அப்படியே விடப்பட்டிருந்தது. டோட்டோ-சான் சென்று, யாரோ ஒருவரது இருக்கையில் அமர்ந்து கொண்டாள். பள்ளி மர நாற்காலி பழைய பள்ளியில் இருந்தது போலவேதான் இருந்தது. ஆனாலும் அதைவிட ரொம்பவும் வசதியாக இருந்ததால், நாள் முழுவதும் அதிலேயே உட்கார்ந்திருக்கலாம் போலிருந்தது. டோட்டோ-சான் மிகவும் சந்தோஷமாக இருந்ததாலும், இந்தப் பள்ளியை மிகவும் விரும்பியதாலும், இனிமேல் தினமும் பள்ளிக்கு வரவேண்டும் என்றும், விடுப்பே எடுக்கக் கூடாது என்றும் உறுதியாய் முடிவெடுத்தாள்.

டோட்டோ-சான் ஜன்னல் வழியே வெளியே பார்த்தாள். அவளுக்கு இந்த ரயில் நகராது என்று தெரியும், இருந்தாலும் பள்ளி மைதானத்திலுள்ள பூக்களும், மரங்களும் காற்றில் லேசாக அசைவதினால், அந்த ரயில் நகர்வது போல் தோன்றியது.

"நான் மிகவும் சந்தோஷமாய் இருக்கிறேன்" எனக் கடைசியாக சத்தம் போட்டுச் சொன்னாள். பிறகு தனது முகத்தைக் காற்றிற்கு எதிராக அழுத்தமாக வைத்துக் கொண்டு, தான் சந்தோஷமாக இருக்கும் சமயங்களில் பாடும் பாட்டைப் பாடினாள்.

'நான் மிகவும் சந்தோஷமாய் இருக்கிறேன்,
மிகவும் சந்தோஷமாய் இருக்கிறேன் நான்!
நான் ஏன் சந்தோஷமாய் இருக்கிறேன் தெரியுமா?
ஏனென்றால். . . . . . . .'

அந்த நேரத்தில் யாரோ உள்ளே வந்து விட்டார்கள். வந்தது ஒரு சிறுமி. அவள் தனது நோட்டுப் புத்தகத்தையும், பென்சில் பெட்டியையும் பள்ளிப் பையிலிருந்து வெளியே எடுத்து, அவற்றை மேஜை மேல் வைத்தாள். பின்னர் தன் முன்பாதத்தை ஊன்றி, எட்டி பள்ளிப்பையை பை வைக்கும் மேல் அடுக்கில் வைத்தாள். பிறகு தனது ஷூப்பையையும் அங்கேயே வைத்தாள். டோட்டோ-சானும் தான் பாடுவதை நிறுத்திவிட்டு, அவள் செய்த மாதிரியே வேகமாகச் செய்தாள். அதற்குப் பிறகு ஒரு பையன் உள்ளே வந்தான். அவன் கதவருகேயே நின்றுகொண்டு, தனது பள்ளிப் பையை பைகள் வைக்க வேண்டிய அடுக்கு நோக்கி, கூடைப்பந்து விளையாடுவதுபோல தூக்கிப் போட்டான். பை அடுக்கில் பட்டு தெறித்து, தரையில் விழுந்தது "மோசமான ஷாட்!" என்றவன் மறுபடியும் பையைப் பழைய இடத்தில் இருந்தே எறிவதற்கு முயன்று கொண்டிருந்தான். இந்த சமயம் பள்ளிப் பை சரியாக போய் அமர்ந்து கொண்டது. "நல்ல ஷாட்!" என்று கூச்சலிட்ட அவன், தொடர்ந்து "இல்லை, மோசமான ஷாட்தான்" என்றான். பிறகு மேஜை மேல் ஏறி அவனது பள்ளிப்பையைத் திறந்து, அவனது நோட்டுப் புத்தகத்தையும் பென்சில் பெட்டியையும் எடுத்தான். முதலிலேயே இதைச் செய்யத் தவறியதால், தனது இரண்டாவது முயற்சி வெற்றி பெற்றாலும், அதையும் தவற விட்டதாகவே கணக்கில் எடுத்துக் கொண்டான்.

மொத்தத்தில் அந்தக் காரில் ஒன்பது மாணவ மாணவிகள் இருந்தார்கள். இவர்கள் எல்லோரும் சேர்ந்துதான், டோமோயி ஹாகுனின் முதல்கிரேடு பிள்ளைகள்.

இவர்கள் எல்லோரும் சேர்ந்துதான் இந்த ரயிலில் பயணம் செய்யப் போகிறார்கள்.

## டோமோயின் பாடங்கள்

ரயில்வே கார் பள்ளிக்குப் போவதே போதுமான அளவுக்கு விநோதமாகத் தெரிந்தது. ஆனால் அங்கு இருக்கைகளின் அமைப்பும்கூட ரொம்ப விநோதமாய் இருந்ததாகத்தான் தோன்றியது. டோட்டோ-சானின் பழைய பள்ளியில், ஒவ்வொரு பிள்ளைக்கும் ஒரு குறிப்பிட்ட மேஜை என ஒதுக்கப்பட்டிருக்கும். ஆனால் இங்கே அவர்கள் விரும்பிய இடத்தில் எங்கே வேண்டுமானாலும், எப்போது வேண்டுமானாலும் உட்கார அனுமதிக்கப்பட்டிருந்தார்கள்.

சுற்றியும் மிகவும் நன்றாகப் பார்த்து, நன்றாக யோசித்த பிறகு காலையில் தனக்கு அடுத்தபடியாக வந்த சிறுமிக்குப் பக்கத்தில் உட்காருவது என அவள் முடிவெடுத்தாள். ஏனென்றால் அவள்தான் நீண்ட காதுகளை உடைய முயலின் படம் போட்ட மேலாடையை அணிந்திருந்தாள்.

இங்கு பாடம் படிப்பது என்பதே, மற்ற எல்லாவற்றையும் விட மிகவும் விநோதமானது.

சாதாரணமாக எல்லா பள்ளிகளிலும் ஏதாவது ஒன்றைப் பற்றி முதல் பீரியடில் பாடம் நடக்கும். உதாரணமாக முதல் பீரியட் ஜப்பானிய மொழி என்றால் ஜப்பானிய மொழிதான் அப்போது பயில வேண்டும். இரண்டாவது பீரியட் கணக்கு என்று வைத்துக் கொண்டால், அப்போது கணக்குதான் போடவேண்டும். ஆனால் இங்கு எல்லாமே வித்தியாசமாக இருந்தது. முதல் பீரியடின் ஆரம்பத்திலேயே, டீச்சர் அன்று படிக்க வேண்டிய வெவ்வேறு பாடங்களிலிருந்து கேள்விகளையும், பயிற்சி வினாக்களையும் பட்டியல்போட்டு தந்து விடுவார்கள். பிறகு "நீங்கள் எதிலிருந்து விரும்புகிறீர்களோ, அதிலிருந்து ஆரம்பியுங்கள்" என்று சொல்லிவிடுவார்கள்.

நீங்கள் ஜப்பானிய மொழியிலிருந்து ஆரம்பிக்கிறீர்களா, இல்லை கணக்கிலிருந்து ஆரம்பிக்கிறீர்களா, இல்லை வேறு எதையும் ஆரம்பிக் கிறீர்களா என்பது பொருட்டே இல்லை. கட்டுரை எழுத விரும்புபவன் எதையாவது எழுதிக் கொண்டிருப்பான். அவனுக்குப் பின்னால் பெளதீகத்தை விரும்புபவன் ஏதாவது ஒன்றைக் குடுவையில் நிரப்பி ஆல்கஹால் பர்னரால் கொதிக்க வைத்துக் கொண்டிருப்பான். அதனாலேயே சின்ன சின்ன வெடிப்புகளினால் சில விபத்துகள் ஏற்பட எல்லா வாய்ப்புகளுடனும் வகுப்பறை இருந்தது.

இங்கே நடத்தும் முறையினால், குழந்தைகள் மேல் கிரேடுக்குப் போகப் போக, அவர்கள் எதில் மிகவும் ஆர்வமாய் இருக்கிறார்கள், அவர் களுடைய யோசிக்கும் முறை, அவர்களது குணாம்ச முறை என்று அனைத்தையும் ஆசிரியர்களால் புரிந்து கொள்ள முடிகிறது. இதுதான் தன்னிடம் படிக்கும் மாணவ, மாணவிகளைப் பற்றி ஆசிரியர்கள் சரியாகப் புரிந்து கொள்வதற்கு மிகவும் துல்லியமான முறை.

மாணவ மாணவிகளைப் பொருத்தவரை, தங்களுக்குப் பிடித்த பாடத்திலிருந்து ஆரம்பிப்பதை மிகவும் விரும்புவார்கள். தங்களுக்குப் பிடிக்காத பாடங்களை நாள் முழுவதும் சமாளிக்க வேண்டும் என்ற பிரச்சினைக்கு அர்த்தம், அதையும் எப்படியாவது அவர்களால் சமாளிக்க முடியும் என்பதுதான். படிப்பு, பெரும்பான்மையும் யாரையும் சார்ந்து இராமல், எப்போதாவது தேவைப்பட்டால்தான் டீச்சரிடம் சென்று ஆலோசனை செய்யும்படி இருந்தது. அவர்கள் விரும்பினால்தான், டீச்சர்கள் அவர்களிடம் அவர்களுக்கு நன்றாகப் புரியும் வரை தெரியாத விஷயங்களை விளக்குவார்கள். அதற்கு பிறகு மாணவ, மாணவிகளே தனியாகப் போடுவதற்கு பயிற்சி வினாக்கள் தருவார்கள். இதுதான் இந்த உலகில் உண்மையான அர்த்தத்தில் படிப்பு. இதற்குப் பொருள் டீச்சர்

தன்னிடம் வந்து பேசி, விளக்கிக் கொண்டிருக்கும்போது எந்த மாணவ மாணவியும் பாடத்தைக் கவனிக்காமல் சும்மா உட்கார்ந்திருக்க முடியாது.

முதல் கிரேடு பிள்ளைகள் சுயமாய் படிக்கும் நிலையை அடைய வில்லை. இருந்த போதிலும் அவர்களும் அவர்கள் விரும்பும் பாடங்களில் இருந்து தொடங்க அனுமதிக்கப்பட்டிருந்தார்கள்.

சிலர் எழுத்துச் சுவடிகளில் உள்ள எழுத்துகளை அப்படியே பார்த்து எழுதிக் கொண்டிருந்தார்கள். சிலர் படங்கள் வரைந்தார்கள். சிலர் புத்தகங்கள் படித்தார்கள். ஒரு சிலர் கலிஸ்தெனிக்ஸ் (உடற்பயிற்சி) கூட செய்தார்கள். டோட்டோ-சானுக்கு அடுத்திருந்த பெண் ஏற்கெனவே எழுத்துச் சுவடி முழுவதும் அறிந்திருந்தாள். அதனால் தனது நோட்டுப் புத்தகத்தில் எழுதிவிட்டாள். இவையெல்லாம் டோட்டோ-சானுக்கு அறிமுகமில்லாதவையாதலால், அவள் சிறிது நடுக்கத்துடனும், என்ன செய்ய வேண்டும் என்பதில் உறுதியில்லாமலும் இருந்தாள்.

அவளுக்குப் பின்னால் உட்கார்ந்திருந்த பையன் தனது நோட்டுப் புத்தகத்துடன் கரும்பலகையை நோக்கிச் சென்று கொண்டிருந்தான். அவன் ஏதோ டீச்சரிடம் சந்தேகம் கேட்கத்தான் போகிறான். டீச்சர் கரும்பலகையின் பக்கத்திலுள்ள ஒரு மேஜை மேல் உட்கார்ந்து கொண்டு, வேறொரு பையனுக்கு எதையோ விளக்கிக் கொண்டிருந்தாள். டோட்டோ-சான் அந்த வகுப்பறையை சுற்றிச் சுற்றி பார்ப்பதை விட்டு, ஒரு கோப்பை மாதிரி கைகளையாக்கி, தனது கன்னத்தை அதில் புதைத்து, நடந்து போகும் அந்தப் பையனின் பின்பகுதியையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவன் தன் கால்களை இழுத்து, இழுத்து நடந்தான். அப்போது அவன் முழு உடம்பே பயங்கரமாய் அசைந்தாடியது. டோட்டோ-சான் முதலில் அந்தப் பையன் வேண்டுமென்றே அப்படி செய்கிறானோ எனச் சந்தேகப்பட்டாள். ஆனால் சீக்கிரமாகவே அவனால் சரியாக நடப்பதற்குத் தனக்கே உதவிக் கொள்ள முடியவில்லை என்பதை உணர்ந்தாள்.

டோட்டோ-சான், அவன் திரும்பி வரும்போதும், அவனையே கவனித்துக் கொண்டிருந்தாள். அவர்கள் கண்கள் சந்தித்தன. அந்தப் பையன் சிரித்தான். டோட்டோ-சானும் வேகமாக திரும்பச் சிரித்தாள். அவன் அவளுக்குப் பின்னுள்ள நாற்காலியில் அமர்ந்தபோது, மற்ற குழந்தைகள் உட்காருவதை விடவும் மிகவும் அதிக நேரம் எடுத்துக் கொண்டான். டோட்டோ-சான் அவன்பால் திரும்பிக் கேட்டாள் "நீ ஏன் இப்படி நடக்கிறாய்?"

அவன் மிகவும் அமைதியாக, புத்திசாலித்தனமான தனது மெல்லிய குரலினால் "எனக்கு இளம்பிள்ளைவாதம்" என பதிலளித்தான்.

அந்த வார்த்தை இதற்கு முன் அவள் கேட்டதே இல்லையாதலால், "இளம்பிள்ளை வாதமா?" என மறுபடியும் வினவினாள்.

"ஆமாம். இளம்பிள்ளை வாதம்தான்" அவன் முணுமுணுத்தான். "இது என் காலை மட்டும் பாதிக்கவில்லை. கையையும் பாதித்துள்ளது" அவன் கையை வெளியே காண்பித்தான். டோட்டோ-சான் அப்போது

தான் அவனது இடது கையை பார்த்தாள். அவனது நீண்ட விரல்கள் வளைந்து, ஒன்று போல் ஒட்டிக் கொண்டிருப்பது போல தோற்றமளித்தது.

"இதற்கு ஏதாவது அவர்கள் செய்ய முடியவில்லையா?" அவள் கேட்டாள். அவன் பதிலளிக்கவில்லை. நான் இதைக் கேட்டிருக்கக் கூடாது என டோட்டோ-சான் சங்கடப்பட்டாள். ஆனால் மிகவும் மிளர்வுடன் அவன் சொன்னான். "எனது பெயர் யசுயாகி யாமமோட்டோ. உன்னுடையது?"

இவ்வளவு உற்சாகமான குரலில் அவன் பேசுவதைக் கேட்டதும், டோட்டோ-சான் மிகவும் சந்தோஷம் அடைந்து, பலமாய் பதிலளித்தாள். "நான் டோட்டோ-சான்."

யசுயாகி யாமமோட்டோவும், டோட்டோ-சானும் இப்படித்தான் நண்பர்களானார்கள்.

சூரியன் ரயிலுக்குள் வெப்பத்தை உமிழ்ந்தது. யாரோ சன்னலைத் திறந்து விட்டார்கள். புதிய வசந்தக் காற்று காரின் ஊடே காற்றை ஊதி விட்டது. அது அஜாக்கிரதையான அலட்சிய உணர்வுடன், குழந்தைகளின் தலைமுடிகளை அலைக்கழித்தது.

இப்படித்தான் டோமோயில் டோட்டோ-சானின் முதல்நாள் ஆரம்பித்தது.

## கடல் உணவும், நாட்டு உணவும்

இப்போது, 'கடலிலிருந்து கொஞ்சம், மலைகளிலிருந்து கொஞ்சம்' என்பதற்கான நேரம் வந்து விட்டது. இந்த மதிய உணவு நேரத்தைத்தான், டோட்டோ-சான் மிகவும் ஆர்வத்துடன் எதிர்பார்த்துக் காத்திருந்தாள்.

தலைமையாசிரியர் சமவிகித உணவு என்பதை விளக்குவதற்காகவே அந்தச் சொற்றொடரை பயன்படுத்தினார். அந்த மாதிரி உணவைத்தான், மதிய உணவுக்காக எடுத்து வரவேண்டும் என அவர் விரும்பினார். வழக்கமாக சொல்லும் "உங்கள் குழந்தைக்கு எல்லாவற்றையும் உண்ணப் பயிற்சி அளியுங்கள்", "தயவுசெய்து அவர்கள் போஷாக்கு நிறைந்த சம விகித உணவு கொண்டு வந்திருக்கிறார்களா என பாருங்கள்" என்ற சொற்களுக்குப் பதிலாக, தலைமையாசிரியர் "உங்கள் குழந்தைகளின் உணவுப் பெட்டியில் 'கடலிலிருந்து கொஞ்சம், மலைகளிலிருந்து கொஞ்சம்' மற்ற உணவுகளுடன் சேர்த்து வைக்கப்பட்டுள்ளதா?" என்று கேட்பார்.

'கடலிலிருந்து கொஞ்சம்' என்றால் கடல் உணவு. அதாவது மீன், 'டிசுகுடா-னி' (சிறிய கிரஸ்டேஷியனும் அவை போன்றவையும் சோய் குழம்பு, இனிப்பு வகைகளுடன் சேர்த்து கொதிக்க வைத்தது) போன்றவை. 'மலைகளிலிருந்து கொஞ்சம்' என்றால் நாட்டு உணவு, அதாவது காய்கறிகள், மாடு, பன்றி, கோழி இறைச்சிகள் போன்றவை.

அம்மாவுக்கு இப்படிச் சொல்வது மிகவும் ஈர்ப்பாய் இருந்தது. ஒரு சில தலைமையாசிரியர்களே இவ்வளவு முக்கியமான விஷயத்தை இவ்வளவு எளிமையாக சொல்வதற்குத் திறமை வாய்ந்தவர்கள் என

அம்மா நினைத்தாள். இதில் விநோதம் என்னவென்றால், இப்படி இரண்டு பிரிவுக்குள் இருந்து தேர்வு செய்து மதிய உணவு தயாரிப்பதும் எளிதாக இருந்தது. மேலும் தலைமையாசிரியர், ஒருவர் இப்படித் தயாரிப்பது கஷ்டம் என்றோ, செலவு அதிகம் பிடிக்கும் என்றோ நினைக்க வேண்டாம் என்று குறிப்பிட்டிருந்தார். நாட்டு உணவு 'கின்பிரா கோபோ' (வாசனையேற்றப்பட்ட பர்டாக்) அல்லது ஆம்லேட் போன்றவையாக இருந்தாலே போதும். கடல் உணவாக, காயவைத்த பேனிட்டோ துண்டுகள் இருந்தாலே போதும். இல்லை, இன்னும் எளிமையாக, கடலுக்கு நோரியும் (ஒருவகை கடற்பாசி) மலைகளுக்கு காடியிட்டு பாதுகாக்கப்பட்ட ப்ளமும் போதுமானது.

முந்தைய நாளிலிருந்தே, டோட்டோ-சான் மிகவும் ஆசையுடன் எதிர்பார்த்துக் கவனித்துக் கொண்டிருக்க, தலைமையாசிரியர் ஒவ்வொருவர் மதிய உணவுப் பெட்டியையும் பார்த்துக் கொண்டே வந்தார்.

"கடலிலிருந்து கொஞ்சமும், மலைகளிலிருந்து கொஞ்சமும் உனக்கு இருக்கிறதா ?" ஒவ்வொருவருடையதையும் பரிசோதித்துக் கொண்டே அவர் வினவுவார். ஒவ்வொருவரும் கடலிலிருந்து என்ன கொண்டு வந்துள்ளார்கள், மலைகளிலிருந்து என்ன கொண்டு வந்துள்ளார்கள் என்பதைக் கண்டுபிடிப்பதே உணர்வுகளைத் தூண்டுவதாய் இருக்கும்.

சில சமயங்களில் ஒரு அம்மா ரொம்பவும் வேலையாய் இருந்திருப்பாள். அதனால் அவள் குழந்தை மலைகளிலிருந்து கொஞ்சம் மட்டுமே, அல்லது கடலிலிருந்து கொஞ்சம் மட்டுமே கொண்டு வந்திருக்கும். அதனால் ஒன்றும் கவலைப்படத் தேவையில்லை. தலைமையாசிரியர் தனது பரிசோதனைச் சுற்றை நடத்திக் கொண்டிருக்கும்போது, அவரது மனைவி, சமைப்பவரின் வெள்ளை மேலாடையை மாட்டிக்கொண்டு, இரண்டு கைகளிலும் ஒவ்வொரு தட்டை ஏந்தி வருவாள். ஏதாவது ஒரு பிள்ளை முன் நின்று தலைமையாசிரியர் "கடல்" என்று சொன்னால், அவள் இரண்டு அவித்த 'சிக்குவா' (மீன்)வை 'கடல்' குழம்புத் தட்டிலிருந்து எடுத்துப் பங்கிடுவாள். தலைமையாசிரியர் "மலைகள்" என்றால், இளங்கொதியூட்டப்பட்ட உருளைக்கிழங்கின் துண்டுகளில் சிலவற்றை 'மலைகள்' குழம்புத் தட்டிலிருந்து எடுத்துப் பங்கிடுவாள்.

யாரும் "எனக்கு மீன் பிடிக்காது" என்று சொல்ல, கனவுகூட கண்டிருக்க மாட்டார்கள். அதைப் போலவே யாரும் அவன் எவ்வளவு நல்ல மதிய உணவு வைத்துள்ளான் அல்லது இவள் எவ்வளவு பரிதாப கரமான உணவு எப்போதும் கொண்டு வருகிறாள் என நினைத்துக்கூடப் பார்க்கமாட்டார்கள். குழந்தைகளின் ஒரே அக்கறை, தங்களின் இரண்டு தேவைகள்—கடலிலிருந்து கொஞ்சம், மலைகளிலிருந்து கொஞ்சம்-நிறைவேற்றப்பட்டதா என்பதே. அது நிறைவேற்றப்பட்டால் அவர்களது சந்தோஷம் முழுமையடைந்து அவர்கள் அனைவரும் நல்ல உணர்வோடு இருப்பார்கள்.

'கடலிலிருந்து கொஞ்சம், மலைகளிலிருந்து கொஞ்சம்' என்றால் என்ன எனப் புரிந்து கொள்ளத் தொடங்கும் போதுதான் டோட்டோ-சானுக்கு தனது அம்மா மிகவும் அவசரமாய் காலையில் தயார் செய்த

மதிய உணவு அங்கீகரிக்கப்படுமா என்ற சந்தேகமே வந்தது. ஆனால் மதிய உணவுப் பெட்டியைத் திறந்ததும், உள்ளே அற்புதமான மதிய உணவு இருப்பதை அவள் உணர்ந்தாள். சந்தோஷத்தில் அவளால் செய்ய முடிந்தது என்னவோ "ஹோ பிரமாதம், பிரமாதம்" என்று கூவ இருந்ததைக் கட்டுப்படுத்த முடிந்தது மட்டும்தான்.

டோட்டோ-சானின் மதிய உணவு பாலில் தோய்த்து வெண்ணையில் கொதியூட்டப்பட்ட வெளிர் மஞ்சள் முட்டைகள், பச்சைப்பட்டாணி, பழுப்பு 'டென்பூ', வெளிர் சிவப்பு மீன், முட்டைப் பொரியல் துண்டுகள் ஆகியவையே. இவையனைத்தும் ஒரு மலர்த்தோட்டம் போல் வண்ணம் பூத்துக் குலுங்கியது.

"எப்படி அழகாய் இருக்கிறது!" தலைமையாசிரியர் சொன்னார்.

டோட்டோ-சான் சிலிர்த்துப் போனாள், "அம்மா நல்லா சமைப்பாங்க" என்றாள்.

"அப்படியா?" என்று கேட்டார் தலைமையாசிரியர். பிறகு டென்பூவை சுட்டிக்காட்டி "சரி, இது என்ன? இது கடலிலிருந்து வந்ததா, இல்லை மலைகளிலிருந்து வந்ததா?" என்று வினவினார்.

டோட்டோ-சானும் அதைப் பார்த்து, எது சரி புரியாமல் குழம்பிக்



கொண்டிருந்தாள். இது பூமியின் நிறத்தைக் கொண்டிருந்தது. அதனால் இது மலைகளிலிருந்து வந்ததாய் இருக்கலாம். ஆனாலும் அவளால் உறுதியாகச் சொல்ல முடியவில்லை.

"எனக்குத் தெரியாது" என்று அவள் சொன்னாள்.

தலைமையாசிரியர் அடுத்து முழு பள்ளியையும் நோக்கிப் பேசினார், "டென்பூ எங்கிருந்து வருகிறது? கடலிலிருந்தா, இல்லை மலைகளிலிருந்தா?"

சிறிது நேர அமைதிக்குப் பிறகு, சிலர் "மலைகளிலிருந்து" என்றும், சிலர் "கடலிலிருந்து" என்றும் கத்தினார்கள். ஆனாலும் யாருக்கும் உறுதியாகத் தெரியவில்லை.

"சரி, சரி... நானே சொல்கிறேன்." தலைமையாசிரியர் சொன்னார். "டென்பூ கடலிலிருந்து வந்தது."

"எப்படி?" ஒரு குண்டான பையன் வினவினான்.

மேஜையின் வட்டத்திற்கு நடுவே நின்று கொண்டு, தலைமையாசிரியர் விளக்கினார். "சமைத்த மீனின் சதையை அதன் முள்ளிலிருந்து சுரண்டி எடுத்து, அதைப் பொரித்து, சிறிய துண்டுகளாய் இடித்து, பின்னர் காயவைத்து, வாசனையேற்றி டென்பூ தயாரிக்கப்படுகிறது."

நன்றாக மனதில் பதிந்ததால், "ஓஹோ!" என்றார்கள் குழந்தைகள். பிறகு ஒருவன், "நாங்கள் எல்லோரும் டோட்டோ-சானின் டென்பூவை பார்க்க முடியுமா?" என்று கேட்டான்.

"நிச்சயமாக" என்றார் தலைமையாசியர். மொத்தப் பள்ளியே டோட்டோ-சானின் டென்பூவைப் பார்ப்பதற்கு அணி வகுத்து நின்றது. சில குழந்தைகளுக்கு டென்பூ என்றால் என்ன என்று முன்னமே கண்டிப்பாய் தெரிந்திருக்கும். இருந்தாலும் அவர்களும், டோட்டோ-சானின் டென்பூ தங்கள் வீட்டில் செய்வதிலிருந்து ஏதாவது வகையில் வேறுபட்டிருக்கிறதா என்பதை அறியும் ஆர்வத்தினால் தூண்டப்பட்டதினால், முதன் முதலாய் அதைக் காண விரும்புபவர்களைப் போலவே எல்லோரும் ஆர்வமாய் இருந்தனர். ஆகையால் பல குழந்தைகள் டோட்டோ-சானின் டென்பூவை முகர்ந்து பார்த்தனர். டோட்டோ-சான், தனது சில துண்டுகளும் இவர்களால் பறந்துபோய் விடலாம் என பயந்து போய் இருந்தாள்.

டோட்டோ-சான் முதல் நாள் மதிய உணவின்போது, சிறிது நடுக்கத்துடன் இருந்தாலும், எல்லாம் வேடிக்கையாகிவிட்டது. எது கடல் உணவு, எது நாட்டு உணவு என வியப்புறுவதே வசீகரமானது. அவள் டென்பூ, மீனிலிருந்து தயாரிக்கப்படுகிறது எனத் தெரிந்து கொண்டாள். அம்மா 'கடலிலிருந்து கொஞ்சம், மலைகளிலிருந்து கொஞ்சம்' என்று ஞாபகமாகச் சமைத்துச் சேர்த்திருக்கிறாள். அதனால் எல்லாவற்றிலும் எல்லாமும் சரியாகத்தான் இருந்திருக்கிறது என டோட்டோ-சான் திருப்தி கரமாய் நினைத்துக் கொண்டாள்.

அவள் உண்ண ஆரம்பிக்கும்போது, டோட்டோ-சானைத் சந்தோஷமாக்கிய அடுத்த விஷயம் என்னவென்றால், அம்மா தயாரித்த மதிய உணவு மிகவும் சுவையாய் இருந்ததுதான்.

## அதை நன்றாக மெல்லுங்கள்

சாதாரணமாய், ஒருவர் 'இடாதா கிமாசு' (நான் நன்றியுடன் எனது பங்கை எடுத்துக் கொள்ளுகிறேன்) என சொல்லிவிட்டு தனது உணவை எடுத்துக் கொள்வார். ஆனால் டோமோயி ஹாகுன்னிலுள்ள மற்றொரு வித்தியாசம், முதலில் எல்லோரும் ஒரு பாட்டு பாடவேண்டும். தலைமையாசிரியர் ஒரு இசைஞர் ஆதலால், அவரே மதிய உணவுக்கு முன்னர் பாடுவதற்காக ஒரு சிறப்புப் பாடலை இயற்றியிருந்தார், 'துடுப்பிடு, துடுப்பிடு, உனது படகை துடுப்பிடு' (row, row, row your boat) என்ற புகழ் பெற்ற பாடலின் மெட்டிற்குத் தகுந்த மாதிரி வார்த்தைகளைத் தேர்ந்தெடுத்து, தலைமையாசிரியர் அந்தப் பாடலை இயற்றியிருந்தார். தலைமையாசிரியர், வார்த்தைகள் இப்படி செல்லும்படி அமைத்திருந்தார்.

'மெல்லு, மெல்லு, அதை நன்றாக மெல்லு
நீ உண்ணும் எல்லாவற்றையும் மெல்லு;
மெல்லு அதை, மெல்லு அதை, மெல்லு அதை, மெல்லு அதை,
உனது சாதம், மீன், இறைச்சி எல்லாவற்றையும் மெல்லு'

இந்தப் பாட்டைப் பாடி முடிக்காமல், எந்தக் குழந்தையும் 'இடாதா கிமாசு' சொல்லாது.

இந்தப் பாடலின் வார்த்தைகள் 'துடுப்பிடு, துடுப்பிடு, உனது படகை துடுப்பிடு' என்ற பாடலின் மெட்டுக்கு மிகவும் இயைந்து இருந்ததால், எவ்வளவு வருடங்கள் கழித்தாலும் நிறைய மாணவ மாணவிகள் உணவிற்கு முன்னர் இந்த பாடல் பாடப்பட வேண்டுமென உறுதியாக நம்பினார்கள்.

ஒருவேளை தலைமையாசிரியர் சில பற்களை இழந்து விட்டதால், அவர் இந்தப் பாடலை இயற்றியிருக்கலாம். இருந்தாலும் சந்தோஷமான உரையாடல்களை அனுபவித்துக் கொண்டே, மெதுவாகச் சாப்பிட வேண்டுமென்றும், உணவிற்கு நிறைய நேரத்தை எடுத்துக் கொள்ள வேண்டுமென்றும், தலைமையாசிரியர் குழந்தைகளிடம் சொல்லிக் கொண்டே இருப்பார். இவற்றையெல்லாம் குழந்தைகளுக்கு நினைவூட்ட வேண்டுமென்பதற்காகவே, அவர் இந்தப் பாடலை இயற்றியிருக்கலாம்.

எல்லோரும் தங்களது உச்சக்குரலில் அந்தப் பாடலை பாடி முடித்த பின்பு, 'இடாதா கிமாசு' சொல்லிவிட்டு, 'கடலிலிருந்து கொஞ்சம், மலைகளிலிருந்து கொஞ்சம்' சாப்பிடுவதற்காக உட்கார்ந்து விட்டார்கள்.

கொஞ்ச நேரத்திற்கு அசெம்பிளி ஹால் அமைதியாக இருந்தது.

## பள்ளி நடைகள்

மதிய உணவிற்குப் பின்பும், தங்களுக்காக டீச்சர் காத்துக் கொண்டிருக்கும் வகுப்பறைக்குத் திரும்புவதற்கு முன்பும், டோட்டோ-சான் மற்றவர்களுடன் பள்ளி மைதானத்தில் விளையாடிக் கொண்டிருந்தாள்.

"நீங்கள் எல்லோரும் காலையில் கடுமையாக உழைத்தீர்கள்" டீச்சர்

சொன்னார்," அதனால் இந்த நண்பகலுக்குப் பின் நீங்கள் என்ன செய்ய விரும்புகிறீர்கள்?"

டோட்டோ-சான் என்ன செய்ய விரும்புகிறாள் என்பதை நினைத்துக் கூடப் பார்ப்பதற்கு முன்பு, அங்கே ஒரே ஓட்டுமொத்தமான சத்தம் "காலாற நடக்கலாம்".

"சரி போகலாம்" என டீச்சர் சொன்னதும், குழந்தைகள் எல்லோரும் முண்டியடித்துக் கொண்டு ஓடி கதவை மோதித் திறந்தனர். டோட்டோ-சான் அப்பாவுடனும், ராக்கியுடனும் காலாற நடப்பது வழக்கம்தான். ஆனால் அவள் 'பள்ளி நடை' என்று கேள்விப்பட்டதே இல்லை; அதனால் ஆச்சரியப்பட்டுப் போனாள். எப்படி இருந்த போதிலும், நடப்பது அவளுக்குப் பிடிக்கும். அதனால் அவளாலும் கொஞ்சம் கூடக் காத்திருக்க முடியவில்லை.

டீச்சர் கரும்பலகையில் பட்டியலிட்டுள்ள அத்தனை வேலைகளையும், காலையிலேயே கஷ்டப்பட்டு முடித்தால், நண்பகலுக்குப் பின் அவர்கள் பொதுவாகவே ஒரு 'நடை' சென்று வர அனுமதிக்கப்படுவார்கள் என்பது டோட்டோ-சானுக்குப் பின்னர்தான் தெரிந்தது. இது முதல் கிரேடில் இருந்தாலும் சரி, ஆறாவது கிரேடில் இருந்தாலும் சரி எல்லோருக்கும் ஒன்றுதான்.

முதல் கிரேடைச் சார்ந்த ஒன்பது பிள்ளைகளும், டீச்சர் எல்லோருக்கும் மத்தியில் இருக்கும்படி, சுற்றிச் சூழ்ந்துகொண்டு வெளியே வந்தார்கள். பிறகு ஒரு ஓடையின் விளிம்போரம் நடந்து செல்ல ஆரம்பித்தார்கள். ஓடையின் இரண்டு கரைகளிலும், பெரிய செர்ரி மரங்கள் வரிசையாய் நின்றன. அவை அண்மையில்தான் பூத்துக் குலுங்கியிருக்க வேண்டும். கண்கள் பார்க்க முடிந்த இடங்களிலெல்லாம், மஞ்சள் கடுகுப் பூக்கள் வயல்வெளி எங்கும் பூத்துக் கிடந்தன. ஓடை மறைந்த நீண்ட தூரத்திற்கு பின்பு, அடுக்குமாடிக் கட்டிடங்கள், சேமிப்புக் கிடங்குகள் என்று அந்தப் பகுதி நெருக்கமாயிருந்தது. ஆனால், அந்த காலத்தில் ஜியுகோகா பெரும்பாலும் வயல்வெளியாய்தான் இருந்தது.

"குகோன்பட்சு கோயில் இருக்கும் தூரம் வரை நாம் போகிறோம்" மேலாடையில் முயல் படம் வரைந்த பெண் சொன்னாள். அவள் பெயர் சாக்கோ-சான்.

"நாம் போன தடவை போனப்ப அங்குள்ள குளத்தில் பாம்பு பார்த்தோம்" சாக்கோ-சான் சொன்னாள். தொடர்ந்து "கோயில் இடத்தில் ஒரு பழைய காலத்து கிணறு இருக்கிறது. அதற்குள் ஒரு தடவை பாயும் நட்சத்திரம் விழுந்து விட்டதாக அவர்கள் சொல்லுகிறார்கள்." என்றாள்.

குழந்தைகள் நடந்து கொண்டிருக்கும்போது, அவர்களுக்குப் பிடித்த எதை வேண்டுமானாலும் பேசிக் கொள்ளலாம். வானம் நீலமாக இருந்தது. காற்று படபடக்கும் பட்டாம்பூச்சிகளால் நிறைந்திருந்தது.

அவர்கள் சுமார் பத்து நிமிடம் நடந்த பின்பு, டீச்சர் நின்றார். சில மஞ்சள் பூக்களைக் காட்டிச் சொன்னார், "இந்தக் கடுகுப் பூக்களைப் பாருங்கள். பூக்கள் ஏன் பூக்கின்றன என்பது உங்களுக்குத் தெரியுமா?"

குழந்தைகள் அனைவரும் தெருவை விட்டு அந்த பூவைச் சுற்றி மண்டியிட்டுத் தொடுவது போல் - குழுமி, அதைப் பரிசோதித்துக் கொண்டிருக்க, டீச்சர் மகரந்தக் குழாய், மகரந்தம் பற்றி விளக்கிக் கூறினாள். மேலும் டீச்சர்— பட்டாம்பூச்சிகள், பூக்கள் மலர்வதற்கு எப்படி உதவுகின்றன என்பதையும் சொன்னார். ஆமாம், உண்மையிலேயே பட்டாம்பூச்சிகள் மிகவும் 'பிசி'யாய் உதவிக் கொணடிருந்தன.

டீச்சர் மறுபடியும் பயணத்தை ஆரம்பித்தார். ஆகவே குழந்தைகள் பூக்களைப் பரிசோதிப்பதை விட்டுவிட்டு எழுந்து நின்றனர். ஒருவன் சொன்னான், "அவை துப்பாக்கி குழலைப் போல் இல்லை அல்லவா?"

டோட்டோ-சான் அப்படி நினைக்கவில்லை. ஆனாலும் மற்ற குழந்தைகளைப் போலவே மகரந்தக் குழாயும், மகரந்தமும் மிகவும் முக்கியமானவை என்பதில் உறுதியாய் இருந்தாள்.

அவர்கள் அதற்குப் பிறகு பத்து நிமிடங்கள் நடந்த பின்பு, மிகவும் அடர்த்தியாய் மரங்கள் நிறைந்த பூங்கா ஒன்று கண்ணுக்குத் தெரிந்தது. அந்த பூங்கா 'குகோன்புட்சு' என்ற கோயிலைச் சுற்றி இருந்தது. அவர்கள் அதற்குள் நுழைந்ததும், குழந்தைகள் வெவ்வேறு திசைகளில் பிரிந்து ஓடினார்கள்.

"பாயும் நட்சத்திரக் கிணற்றைப் பார்க்க விரும்புகிறாயா?" சாக்கோ-சான் வினாவினாள். டோட்டோ-சான் யதார்த்தமாகவே அதற்கு ஒப்புக்கொண்டு, அவள் பின்னால் ஓடினாள்.

அந்தக் கிணறு கல்லினால் கட்டப்பட்டது போலத் தோன்றியது. அது அவர்கள் நெஞ்சு உயரத்திற்கு இருந்தது. அதன் மேல் ஒரு மரமூடி இருந்தது. அவர்கள் மூடியைத் தூக்கி, உள்ளே உற்று நோக்கினார்கள். தொட்டால் ஒட்டிக் கொள்ளும் அடர்த்தியான கருமையாய் உள்ளே இருந்தது. டோட்டோ-சானால் ஏதோ கான்கிரீட் அல்லது கல் துண்டு போல எதையோ பார்க்க முடிந்தது. அவள் கற்பனை செய்து வைத்திருந்தது போல எந்த ஒளிரும் நட்சத்திரமும் உள்ளேயில்லை. நிறைய நேரம் உள்ளே வெறித்து நோக்கிய பின், அவள் கேட்டாள், "நீ ஏதாவது நட்சத்திரத்தைப் பார்த்தாயா?"

"இல்லை. இல்லவே இல்லை." சாக்கோ-சான் தலையை ஆட்டினாள்.

டோட்டோ-சான் ஏன் அது ஒளிரவில்லை என வியந்து நின்றாள். பிறகு சிறிது நேரம் யோசித்த பிறகு, அவள் சொன்னாள், "ஒருவேளை அது தூங்கியிருக்கும்"

தனது பெரிய வட்டமான கண்களை இன்னும் அகலமாக விரித்து, சாக்கோ-சான் வினவினாள், "நட்சத்திரங்கள் தூங்குமா?"

"நான் நினைக்கிறேன், அவை பகல் நேரத்தில் தூங்கி விட்டு பிறகு ராத்திரி எழுந்து ஒளிரும்" அவள் சொன்னதில் அவளே நிச்சயமான உறுதியாய் இல்லாததால், இதை வேகமாகச் சொன்னாள்.

பிறகு குழந்தைகள் எல்லாம் ஒன்று போல் குழுமி; கோயில் மைதானத்தைச் சுற்றி நடந்தார்கள். பிரதான மண்டபத்தின் அரை இருட்டில் இருந்த புத்தர் சிலையைப் பயத்துடன் நோக்கியவாறே, இரண்டு வாயிலிலும் நின்று கொண்டு கோயிலைப் பாதுகாத்துக்

கொண்டிருந்த தேவ அரசர்களின் திறந்த வயிற்றைப் பார்த்து அவர்கள் சிரித்தார்கள். டென்கு-பெரிய மூக்குடைய துஷ்டதேவதையின் காலடி என்று சொல்லப்படும், கல்லில் செய்யப்பட்ட பெரிய காலடித் தடத்தில் தங்களது கால்களைப் பதித்து மகிழ்ந்தனர். பின்னர் குளத்தைச் சுற்றி, துடுப்புப் படகில் போவோரை "ஹலோ!" என்றழைத்தவாறே மெல்ல நடந்து கொண்டிருந்தார்கள். கல்லறையைச் சுற்றிக் கிடந்த மினிரும் கருப்பு கூழாங்கற்களை வைத்து, அவர்கள் இதயம் நிறையும் வரை 'ஹாப்ஸ் காட்ச்"(நொண்டி போன்ற விளையாட்டு) விளையாடினார்கள். எல்லாமே டோட்டோ-சானுக்குப் புதிதாக இருந்தது. இருந்தாலும் ஒவ்வொரு புதிய கண்டுபிடிப்பையும் உற்சாகப் பெருக்கான சத்தத்துடன் வாழ்த்தி வரவேற்றாள்.

சூரியன் வீழ ஆரம்பித்ததும், "திரும்பிப் போவதற்கான நேரம் வந்து விட்டது" என்று டீச்சர் சொன்னார். கடுகுப் பூக்களுக்கும், செர்ரி மரங் களுக்கும் நடுவேயுள்ள பாதை வழியே பள்ளிக்குப் போக குழந்தைகளும் தயாரானார்கள்.

அவர்கள் சுதந்திரமாயும், விளையாட்டாகவும் உணர்ந்த இந்த நடைதான், உண்மையிலேயே விஞ்ஞானம், வரலாறு, உயிரியல் பற்றி நுட்பமாக பாடம் படித்த வேளை என்பதை அந்தக் குழந்தைகள் யாரும் உணர்ந்திருக்கவே இல்லை.

டோட்டோ-சான் எல்லாக் குழந்தைகளுடன் ஏற்கெனவே நண்பியாகி விட்டாள். எல்லோரையும் தன் வாழ்நாள் முழுவதும் தெரிந்ததைப் போல உணர்ந்தாள்.

அவர்கள் திரும்பி வந்து கொண்டிருக்கும் வழியில், "நாளைக்கு நாம் மறுபடியும் நடக்கப் போவோம்" என்று டோட்டோ-சான் கத்தினாள்

"ஆமாம். நாம் போவோம்!" அவர்களும் குதித்துக் கொண்டும், தாண்டிக்கொண்டும் திரும்பக் கத்தினார்கள்.

பட்டாம்பூச்சிகள் இன்னும் தங்கள் வேலையைப் பார்ப்பதற்காக 'பிசி'யாகச் சென்று கொண்டிருந்தன. பறவைகளின் பாடல்கள் காற்றில் நிறைந்திருந்தன. டோட்டோ–சானின் இதயம் சந்தோஷத்தில் வெடித்துக் கொண்டிருந்தது.

## பள்ளிப் பாட்டு

ஒவ்வொரு நாளும் டோமோயி-ஹாகுன், டோட்டோ-சானுக்கு ஆச்சரியங்களை நிரப்பி வைத்திருந்தது. பள்ளிக்குப் போவதற்கு அவள் மிகவும் ஆர்வமாய் இருந்தாள். வீட்டை அடைந்தவுடன் அவளால் பேசுவதை நிறுத்தவே முடியவில்லை. ராக்கியிடம், அம்மாவிடம், அப்பாவிடம், பள்ளியில் அவள் என்ன செய்தாள், என்ன வேடிக்கைகளும், வினோதங்களும் அன்று நடந்தன என்பதைச் சொல்லாமல் அவளால் இருக்கவே முடிந்ததில்லை. "இவ்வளவு போதும் என்னருமை மகளே! பேசுவதை நிறுத்தி, சிற்றுண்டியை ச்சாப்பிடு" என்று கடைசியாக அம்மா சொல்ல வேண்டியிருக்கும்.

இந்த புதிய பள்ளியுடன் மிகவும் பழகி அதோடு இயைந்து விட்டாலும், டோட்டோ-சானுக்கு இன்னும் மலையளவுக்குப் பேசுவதற்கு தினமும் விஷயங்கள் இருந்து கொண்டேயிருந்தன. அம்மாவும் அப்படி இருப்பது குறித்து களிப்படைந்தாள்.

ஒருநாள், ரயிலில் பள்ளிக்குச் சென்று கொண்டிருக்கும் வழியிலே, டோட்டோ-சான், டோமோயிக்குப் பள்ளிப்பாட்டு இருக்கிறாதா என நினைத்துப் பார்க்கத் தொடங்கினாள்.

அதை எவ்வளவு சீக்கிரத்தில் தெரிந்து கொள்ள முடியுமோ அவ்வளவு சீக்கிரத்தில் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆர்வத்தில், அவளால் பள்ளி செல்லும் வரை கூட காத்துக் கொண்டிருக்க முடிய வில்லை. இன்னும் இரண்டு ஸ்டேஷன்கள் கடக்க வேண்டியிருக்கும் போதே, ஜீயுகோகாவுக்கு ரயில் வந்ததும், உடனே வெளியே குதிப்பதற்குத் தயராய், இப்போதே கதவருகே வந்து நின்று கொண்டாள். ஸ்டேஷனுக்குச் சென்று கொண்டிருந்த பெண்மணி, முதலில் கதவருகே நின்ற சின்னஞ்சிறுமியைப் பார்த்து அவள் இறங்கத்தான் தயாராய் இருக்கிறாள் என இயற்கையாய் நினைத்தாள். ஓட்டக்கள கோட்டில் ஓடுவதற்குத் தயாராக இருக்கும் ஓட்ட வீராங்கனைப் போல் எந்தவித அசைவுமின்றி அவள் இருந்ததால், அந்த பெண்மணி "அவளுக்கு என்னவென்று எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது" என முணுமுணுத்துக் கொண்டே சென்றாள்.

ரயில் ஜீயுகோகா ஸ்டேஷனுக்குள் வந்ததும், டோட்டோ-சான் தீப்பொறியாய் பறந்து விட்டாள். அந்த இளம் கண்டக்டர் ரயில் இன்னும் சரியாய் நிற்பதற்கு முன் ஒரு காலை ரயில்வே பிளாட்பார்மில் வைத்துக் கொண்டு "ஜீயுகோகா! ஜீயுகோகா!" எனக் கூவிக் கொண்டிருக்கும்போதே, டோட்டோ-சான் வெளிப்பாதை வழியாக ஏற்கெனவே மறைந்திருந்தாள்.

ரயில்வே கார் வகுப்பறைக்குள் நுழைந்த கணமே, டோட்டோ-சான் ஏற்கெனவே அங்கிருந்த தாயிச்சி யமநோச்சியைப் பார்த்து, "டாய்-சான், இந்த பள்ளிக்குப் பாட்டு ஏதாவது உள்ளதா?" என வினவினாள்.

பௌதிகத்தை மிகவும் விரும்பும் டாய்-சான், சிறிது யோசித்துப் பிறகு, "அப்படி ஏதும் இருப்பதாய்த் தெரியவில்லை" என பதிலளித்தான்.

"அப்படியா" டோட்டோ-சான் யோசனையுடன் இழுத்துச் சொன்னாள். "சரி, ஆனால் பள்ளிப்பாட்டு ஒன்று கண்டிப்பாய் இருக்க வேண்டும். எனது முந்தைய பள்ளியில் ஒரு அருமையான பாடல் இருந்தது"

அவளும் தனது உச்ச ஸ்தாயில் அதைப் பாட ஆரம்பித்தாள்.

"சென்சோகு குளத்தின் தண்ணீர் ஆழமில்லாமல் இருந்தாலும் அழகிய தோற்றங்களையும் கடந்து எங்கள் படிப்பு ஆழமானது"

டோட்டோ-சான் அந்தப் பள்ளிக்குக் குறுகிய காலமே சென்றிருப் பினும், அந்த பாடலின் வார்த்தைகள் மிகவும் கடினமாய் இருந்த போதிலும், அந்தப் பாடலை ஞாபகம் வைத்துக் கொள்வதில் அவளுக்குக் கஷ்டமே இருந்ததில்லை. அதனால்தான் அப்படிப் பாட முடிந்தது.

டாய்-சான் மிகவும் கவரப்பட்டது போல் தோன்றினான். அதற்குள்

மற்ற மாணவ மாணவிகளும் வந்து விட்டதால், அவர்களும் கூட அவள் உபயோகித்த பெரிய வார்த்தைகளில் மயங்கிவிட்டதாய்த் தோன்றியது.

"நமது ஹெட்-மாஸ்டரைப் பார்த்து ஒரு பள்ளிப் பாடலை இயற்றச் சொல்லுவோம்" டோட்டோ-சான் சொன்னாள்.

"ஆமாம், சொல்லுவோம்!" என மற்றவர்களும் ஒப்புக் கொண்டார்கள் அவர்கள் எல்லோரும் தலைமையாசிரியர் அலுவலகத்திற்கு படையெடுத்துச் சென்றார்கள்.

டோட்டோ-சான் தனது பழைய பள்ளியின் பாட்டைப் பாடுவதைக் கேட்ட பின்பும், குழந்தைகளின் வேண்டுகோளைக் கணக்கில் எடுத்துக் கொண்ட பின்பும், "சரி குழந்தைகளே, நாளை காலை உங்களுக்காக ஒரு பள்ளிப் பாட்டை இயற்றி வைத்திருக்கிறேன்." என்றார் தலைமையாசிரியர்.

"நிச்சயமாய் நீங்கள் செய்வீர்கள்!" என கூட்டமாய் கோஷமிட்டக் குழந்தைகள், கோர்வையாய் வகுப்பிற்கு திரும்ப ஆயத்தமானார்கள்.

அடுத்த நாள் காலை, ஒவ்வொரு வகுப்பறையிலும் அனைவரும் மைதானத்தில் கூடவேண்டும் என்ற அறிவிப்பு இருந்தது. டோட்டோ-சான் ஆவலுடன் மற்றவர்களோடு சேர்ந்து கொண்டாள். மைதானத்தின் நடுவில் ஒரு கரும்பலகையை எடுத்துக் கொண்டு வந்து, தலைமையாசிரியர் சொன்னார், "இப்போது உங்கள் பள்ளி டோமோயிக்கான பாடல் இங்கே" அவர் ஐந்து இணைகோடுகளை கரும்பலகையில வரைந்து, சில ஸ்வரங்களுக்கான குறிப்பை அதில் கீழ்கண்டவாறு எழுதினார்.

பிறகு தனது கைகளை இசை நடத்துனரைப் போல உயர்த்தி "இனி மேல் நாம் எல்லோரும் மொத்தமாய் முயற்சி செய்து, இதைப்பாடுவோம்" என்றார்.

தலைமையாசிரியர் நேரத்தைக் கணித்து கையை ஆட்டி, பாட ஆரம்பிக்கும் போது, பள்ளியின் ஐம்பது பேர்களும் அதில் சேர்ந்து கொண்டார்கள்.



"டோ-மோ-யி, டோ-மோ-யி, டோ-மோ-யி!"

கணநேர இடைவெளிக்குப்பின், "இவ்வளவுதான் எல்லாமா?" என டோட்டோ-சான் கேட்டாள்.

"ஆமாம். அவ்வளவுதான்", தலைமையாசிரியர் பெருமையாய் சொன்னார். "ஏதாவது நல்ல வார்த்தைகளைப் பயன்படுத்தினால் அழகாய் இருக்கும்" டோட்டோ-சான் மிகவும் ஏமாந்து போன குரலில் சொன்னாள். "அதாவது 'சென்சோகு குளத்தில் தண்ணீர் ஆழமில்லாமல் இருந்தாலும்' என்பது போல"

"உனக்கு இது பிடிக்கவில்லையா?" பீறிட்டுக் கொண்டு தலைமை

யாசிரியர் வினவினாலும், சிரித்துக் கொண்டிருந்தார்.

அது யாருக்குமே பிடிக்கவில்லை. அது மிகவும் எளிமையாக இருந்தது. மற்ற எதையும் விட அவ்வளவு எளிமையாக இருந்ததால், அதில் பாடல் மாதிரி ஒன்றுமே இல்லாதது மாதிரிதான் தோன்றியது.

தலைமையாசிரியர் கோபமாக இல்லாவிட்டாலும், வருத்தப்படுபவர் போல தோன்றினார். கரும்பலகையில் எழுதியதை அழிப்பதற்காகச் சென்று கொண்டிருந்தார். டோட்டோ-சான், அந்த பாடல் கர்ண கடூரமாய் இருந்ததாயும் அதில் ஏதாவது இன்னும் கொஞ்சம் மனதை கவரவல்லதாய் இருந்திருக்க வேண்டும் எனவும் உணர்ந்தாள்.

உண்மை யாதெனில் பள்ளிக் குழந்தைகள் மேலும், பள்ளி மேலும் உள்ள தலைமையாசிரியரின் அன்பை எதனாலும் வெளிப்படுத்த முடியாது என்பதுதான். ஆனால் குழந்தைகள் அதைப் புரிந்து கொள்ளும் அளவுக்கு வளரவில்லை. சீக்கிரமே தங்களுக்கு ஒரு பள்ளிப்பாட்டு வேண்டுமென்பதை குழந்தைகள் மறந்து விட்டார்கள். தலைமையாசிரியரும் அடிப்படையில் அப்படி ஒன்று தேவை என்று கருதாமல் இருந்திருக்கலாம். அதனால் அந்த சுருதி கரும்பலகையில் அழிக்கப்பட்டவுடனே, அந்த விஷயம் முடிந்துவிட்டது. டோமோயி ஹாகுன் பள்ளிப்பாடலை எப்போதுமே பெற்றிருக்கவில்லை.

## மறுபடியும் எல்லாவற்றையும் உள்ளேயே போடு

டோட்டோ-சான் தனது வாழ்க்கையிலேயே அவ்வளவு கடினமாக வேலை பார்த்ததில்லை. தனது அருமையான பர்சை கழிவறையில் அவள் தவறவிட்டது என்ன துரதிஷ்டமான நாளோ! அதில் பணம் இல்லை என்றாலும் அதை அவள் மிகவும் நேசித்தாள். அதனால்தான் கழிவறைக்குப் போகும்போதுகூட அதைதன்னுடன் எடுத்துச் செல்வாள். சிவப்பு, மஞ்சள், பச்சை நிறக் கட்டங்கள் பட்டுத்துணியில் போடப்பட்டு, அந்த பர்ஸ் உண்மையிலேயே அழகாக இருந்தது. அந்த பர்ஸ் சதுரமாயும், தட்டையாகவும் இருந்தது. அதில் ஒரு வெள்ளி ஸ்காட்ச் டெரிய்யர் நாய் போன்ற ஒன்று ஒரு முக்கோண தொங்கலில் ஒட்டப்பட்டு, மூடுவதற்கு உபயோகப்படும் ஊசியாய் இருந்தது.

டோட்டோ-சானுக்கு ஒரு விநோதமான பழக்கம் இருந்தது. அவள் சின்னவளாய் இருந்த போதே, கழிவறைக்குச் செல்லும் போது, கழித்து முடித்ததும், அந்த ஓட்டையை உற்று நோக்குவதை ஒரு பழக்கமாக வைத்திருந்தாள். அதன் விளைவாய், ஆரம்பப் பள்ளிக்குச் செல்லும் முன்னரே வைக்கோலினால் செய்யப்பட்டது என்று ஒன்று, வெள்ளை சரிகையினாலான ஒன்று என்று பல தொப்பிகளைக் கழிவறையில் தவற விட்டிருக்கிறாள். கழிப்பறைகளில் அந்தக் காலத்தில் பிளஷ் அமைப்புகள் இல்லை. ஒரு வகைக் கழிவறைக் குழிதான் இருக்கும். அதனால் தொப்பிகள் விழுந்ததும் அங்கே மிதந்து கொண்டே இருக்கும். அதனால்தான் டோட்டோ- சானிடம் அம்மா, எப்போதும் கழிவறையை உபயோகித்து முடித்ததும் குழியை உற்றுநோக்கக் கூடாது என்று

சொல்லுவாள்.

அந்த நாள், பள்ளி ஆரம்பிப்பதற்கு முன் அம்மாவின் எச்சரிக்கையை மறந்து கழிவறைக்குள் சென்றாள். அதை மறுபடியும் நினைவுபடுத்தும் முன்னர், தான் குழியை உற்று நோக்கிக் கொண்டிருப்பதை அவளே உணர்ந்தாள். அந்த நேரம்தான் பர்சைப் பிடித்திருந்த பிடியைத் தளர விட்டிருக்க வேண்டும். அது தவறி கழிவறைக் குழிக்குள் நீரை வாரியடித்தவாறே விழுந்தது. அது கீழேயுள்ள இருட்டுக்குள் மறைந்த போது, டோட்டோ-சான் ஒரு அழுகையை வெளியே விட்டாள்.

இருந்தாலும் டோட்டோ-சான் கண்ணீர் சிந்துவதற்கோ, பர்ஸ் தொலைந்ததுதான் என விட்டு விட்டுச் செல்லுவதற்கோ மறுத்து விட்டாள். அவள் காவலாளியின் கொட்டிலுக்குச் சென்று பெரிய, நீளக் கைப்பிடியுள்ள ஒரு மரக்கரண்டியை எடுத்தாள். அதைத் தோட்டத்திற்கு தண்ணீர் ஊற்ற காவலாளி பயன்படுத்துவார். அதன் கைப்பிடி அவள் உயரத்தைப் போல் இரண்டு மடங்கு இருந்தது. இருந்தாலும் இது அற்பமானது என அவளை எதுவும் தடுக்கவில்லை. அவள் பள்ளியின் பின்புறமாய் சென்றாள். கழிவறைக் குழிகளைக் காலியாக்குவதற்காகப் பயன்படுத்தும் அந்தத் திறப்பைக் கண்டு பிடிக்க அவள் முயன்றாள். அந்தத் திறப்பு, கழிவறையின் பின்புற சுவர்களில்தான் இருக்க வேண்டும் என உறுதியாக நம்பினாள். கொஞ்ச நேரம் எந்தவித பயனும் இல்லாமல் தேடிய பின்பு, கடைசியாய் ஒரு சில அடிகள் தள்ளி ஒரு வட்ட கான்கிரீட் ஆள்முழுங்கிப் பள்ளத்தின் மூடி இருப்பதை அவள் கண்டாள். அதை கஷ்டப்பட்டுத் தூக்கியப் பிறகு, அது சந்தேகமில்லாமல் இவ்வளவு நேரமும் தான் தேடியதுதான் என்பதை அவள் உணர்ந்தாள். பிறகு தனது தலையை உள்ளே விட்டாள்.

“ஹை... குகோன்புட்சு குளம் அளவுக்குப் பெரிசாருக்கு” அவள் வியந்தாள்.

பிறகுதான் தன் வேலையை ஆரம்பித்தாள். கழிவறைக் குழியில் உள்ள பொருட்களைக் கரண்டியால் முகர்ந்து வெளியே ஊற்ற அரம்பித்தாள். முதலில் தான் பர்ஸை எங்கு விட்டாளோ, அந்த பகுதியில் முயற்சி செய்தாள். அந்தத் தொட்டி மூன்று கழிவறைக்கு உரியதாததால், அது மிகவும் ஆழமாயும், இருட்டாயும், பெரியதாயும் இருந்தது. மேலும் தலையை ரொம்பவும் உள்ளே விட்டால் அவள் உள்ளே விழும் அபாயமும் இருந்தது. அதனால் கழிவறை நீரை முகர்ந்து குழியைச் சுற்றியுள்ள நிலத்தில் விட்டு, நல்லதிற்காக எதிர்பார்த்திருப்பது என அவள் முடிவெடுத்தாள்.

அவள் ஒவ்வொரு முறை கோரும் போதும், கரண்டி முழுவதிலும் பர்ஸ் இருக்கிறதா என பரிசோதித்துப் பார்த்தாள். அதைச் செய்து முடிக்க ரொம்ப நேரம் பிடிக்கும் என அவள் நினைத்தே பார்க்கவில்லை. எவ்வளவுதான் முயன்றாலும் பர்ஸ் கிடைப்பதற்கான அறிகுறியே இல்லை. அது எங்குதான் போயிருக்க முடியும்? வகுப்பு ஆரம்பிப்பதற்கான மணி வேறு ஒலித்தது.

என்ன செய்யலாம் என அவள் யோசித்தாள். இவ்வளவு தூரம்

வந்த பிறகு தொடர்வதுதான் உத்தமம் என முடிவெடுத்தாள். புதுப்பிக்கப் பட்ட சக்தியுடன், அவள் முகர்ந்தாள்.

தலைமையாசிரியர் அந்தவழியே கடந்து சென்ற போது, அங்கு தரையில் ஒரு குவியலே கிடந்தது.

"என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" அவர் டோட்டோ-சானைக் கேட்டார்.

"நான் எனது பர்ஸை இதற்குள் தவற விட்டு விட்டேன்" என பதிலளித்து விட்டு, ஒருகணத்தைக் கூட வீணாக்காமல் அவள் முகர்ந்து கொண்டிருந்தாள்.

"அப்படியா" என்று சொல்லிவிட்டு, தான் உலாத்தும்போது கைகளை வழக்கமாய் பின்னே கட்டுவது போல கட்டிக்கொண்டு அந்த இடத்தை விட்டு அகன்றார் தலைமையாசிரியர். நேரம் போய்க் கொண்டிருந்தது. ஆனால் பர்ஸ் கிடைத்த பாடில்லை. அந்த துர்நாற்றக் குவியல் இன்னும், உயர்ந்து கொண்டே போனது.

தலைமையாசிரியர் மறுபடியும் வந்தார். "கண்டுபிடித்து விட்டாயா?" என்று விசாரித்தார்.

அபரிமிதமான வியர்வையைக் கன்னங்களிலிருந்து வாரியிறைத்த வாறு, டோட்டோ-சான் குவியலுக்கு நடுவிலிருந்து பதிலளித்தாள். "இல்லை"

தலைமையாசிரியர் இன்னும் அருகில் வந்து, சிநேகிதமான தொனியில் "தேடி முடித்த பின், மறுபடியும் எல்லாவற்றையும் உள்ளே போட் டுவிட வேண்டும். போட்டு விடுவாய் அல்லாவா?" என்றார். பின், முன்னர் சென்ற மாதிரியே, மறுபடியும் போய்விட்டார்.

"சரி" என்று சந்தோஷமாகச் சொல்லி விட்டு, தனது வேலையில் மூழ்கி விட்டாள். திடீரென ஒரு எண்ணம் அவளைத் தாக்கியது. அவள் குவியலைப் பார்த்தாள். "நான் வேலையை முடித்ததும், எல்லா கழிவறைப் பொருட்களையும் உள்ளே போட்டுவிடலாம் ஆனால் கழிவுத் தண்ணீருக்கு நான் என்ன செய்வது?"

அந்த திரவப்பகுதி கழிவுநீர், பூமிக்குள் வேகமாக ஊறி மறைந்து கொண்டிருந்தது. தலைலையாசிரியரிடம் எல்லாவற்றையும் மறுபடியும் உள்ளே போட்டு விடுவதாய் உறுதி கூறியுள்ளதால், அந்த திரவப்பகுதியைத் தான் எப்படி மறுபடியும் தொட்டிக்குள் ஊற்றப் போகிறோம் என கணக்கிட்டுக் கொண்டு வேலையை நிறுத்தினாள். கடைசியாக அவள், கொஞ்சம் ஈர மண்ணையும் உள்ளே போட்டு விடுவது தான் செய்யக் கூடிய காரியம் என முடிவெடுத்தாள்.

இப்போது அந்தக்குவியல் உண்மையிலேயே ஒரு மலை மாதிரி இருந்தது. தொட்டி கிட்டத்தட்ட காலியாகி இருந்தது. இருந்தாலும் பர்ஸைப் பற்றி எந்தத் தடயமும் இல்லை. ஒரு வேளை தொட்டியின் விளிம்புகளிலோ அடியிலோ மாட்டிக் கொண்டிருக்கலாம். இருந்தாலும் டோட்டோ-சான் கவலைப்படவில்லை. தன்னால் முடிந்தது எல்லாம் செய்து முடித்து விட்டோம் என அவள் திருப்திதான் அடைந்தாள்.

தலைமையாசிரியர் அவளைத் திட்டாமல், அவளை நம்பி அவளது சுயமரியாதையை அவளே உணரச் செய்ததால்தான் டோட்டோ-சானுக்குத் திருப்தி ஏற்பட்டது என்பதில் சந்தேகமே இல்லை. இருந்தாலும் இவையெல்லாம் டோட்டோ-சானுக்கு மிகவும் சிக்கலான விஷயங்கள். ஆதலால், டோட்டோ-சானால் அதைப் புரிந்து கொள்ள முடியவில்லை.

எந்தப் பெரிய ஆட்களும், டோட்டோ-சான் இப்படி செய்வதை கண்டிருந்தால் "பூமியில் அப்படி என்னதான் நீ செய்து கொண்டிருக்கிறாய்!" என்றோ, அல்லது "நிறுத்து. இது ஆபத்தானது" என்றோ எதிர்வினை புரிந்திருப்பார்கள். இல்லையென்றால் மாறாய், அவளுக்கு உதவி புரிந்திருப்பார்கள்.

"தேடி முடித்தபின், மறுபடியும் எல்லாவற்றையும் உள்ளே போட்டு விடவேண்டும். போட்டு விடுவாய் அல்லவா?" என்று சொல்லுவதைச் சற்று யோசித்துப்பாருங்கள். அம்மா இந்தக் கதையை டோட்டோ-சான் மூலம் கேள்விப்பட்டதும், என்ன அருமையான தலைமையாசிரியர் என நினைத்தாள்.

அந்த சம்பவத்திற்குப் பிறகு, கழிவறையைப் பயன்படுத்திய பின் டோட்டோ-சான் கழிவறைக் குழியை உற்று நோக்குவதையே விட்டு விட்டாள். தலைமையாசிரியர் தான் முழுவதுமாய் நம்புவதற்கு ஏற்றவர் என அவள் உணர்ந்தாள். எப்போதையும் விட அவரை மிகவும் விரும்பினாள்.

டோட்டோ-சான் தனது சத்தியத்தை, எல்லாவற்றையும் மறுபடியும் தொட்டிக்குள் போட்டு, காப்பாற்றினாள். எல்லாவற்றையும் வெளியே எடுப்பதுதான் மிகவும் கஷ்டமான வேலை. மறுபடியும் உள்ளே தள்ளுவது சீக்கிரமாகவே முடிந்து விட்டது. அவள் கொஞ்சம் ஈரமண்ணையும் போட்டாள். பின்னர் தரையைச் சமப்படுத்தினாள். மூடியைச் சரியாகப் பொருத்தினாள். கரண்டியைக் காவலாளியின் கொட்டிலில் மறுபடியும் வைத்தாள்.

அன்று இரவு படுக்கைக்குப் போகும் முன்னர், இருட்டுக்குள் தவற விட்ட அந்த அழகிய பர்ஸை நினைத்துக் கொண்டாள். அதை இழந்ததற்காக வருந்தினாள். இருந்தாலும் அன்றைய உழைப்பு அவளை மிகவும் களைப்புறச் செய்திருந்ததால், அவள் தூங்குவதற்கு அதிக நேரம் பிடிக்கவில்லை. அதே நேரத்தில், அவள் உழைப்பின் சாட்சியாய், அந்த ஈரமண், நிலவு வெளிச்சத்திலே மிகவும் அழகிய பொருளாய் ஒளிர்ந்து கொண்டிருந்தது.

எங்கோ அமைதியாய் பர்ஸ் அமர்ந்திருந்தது.

## டோட்டோ-சானின் பெயர்

டோட்டோ-சானின் உண்மையான பெயர் டெட்சுகோ. அவள் பிறப்பதற்கு முன், அம்மா அப்பாவின் நண்பர்களும், சொந்தக்காரர்களும் குழந்தை, பையன்தான் என்பதில் தாங்கள் உறுதியாக இருப்பதாய் சொன்னார்கள். அது தங்கள் முதல் குழந்தையாதலால், அவர்களும் அதை நம்பினார்கள்.

ஆதலால் குழந்தைக்கு 'டாரூ' என பெயர் வைப்பதாய் முடிவெடுத்தார்கள். ஆனால் குழந்தை பெண்ணாகப் போய்விட்டதால், அவர்கள் சிறிது ஏமாற்றமடைந்தார்கள். ஆனால் அவர்கள் இருவருமே, 'டாரூ'வின் சீன குணாம்சங்களை (அதற்கு அர்த்தம் - குரலைப் போல ஊடுருவியும், தொலை தூரம் தூக்கிச் சென்றும், தெளிவாகவும், எதிரொலித்தும்) மிகவும் விரும்பினார்கள்.

ஆதலால் சீன உச்சரிப்பின் மூலம் பெறப்பட்ட 'டெட்சு'வுடன் பெண்களின் பெயருக்குப் பின்னால், வழக்கமாக உபயோகிக்கப்படும் 'கோ'வையும் சேர்த்து, அதை ஒரு பெண்ணின் பெயராய் மாற்றி விட்டார்கள்.

அதனால் யாவரும் அவளை டெட்சுகோ-சான் என அழைத்தார்கள். (சான் என்பது 'சேன்' என ஒருவர் பெயரின் பின்னால் அழைக்கும் வழக்கமான ஒரு முறைதான்) ஆனால் அவளுக்கோ அது டெட்சுகோ-சான் என காதில் விழவில்லை. யாராவது அவளிடம் உன் பெயர் என்ன என்று கேட்டால், அவள் உடனே "டோட்டோ-சான்" என பதிலளிப்பாள். அவள் 'சான்' என்பது தனது பெயரின் ஒரு பகுதி என்றுதான் நினைத்துக் கொண்டிருந்தாள்.

அப்பா அவளை பையனாக நினைத்துக் கொண்டு, சில நேரங்களில் 'டாட்ஸ்கி' என்றழைப்பார். அவர்தான் சொல்லுவார், "டாட்ஸ்கி இங்கே வா. முள்ளாகக் குத்தும் ரோஜாக்களைத் தூக்குவதற்கு உதவு" அப்பாவையும், ராக்கியையும் தவிர மற்றபடி யாவரும் டோட்டோ-சான் என்றுதான் அழைப்பார்கள். அவள் தனது பள்ளி நோட்டுப் புத்தகத்தில் தனது பெயரை 'டெட்சுகோ' என்று எழுதினாலும், அவள் தன்னை டோட்டோ-சான் என்றுதான் நினைத்துக் கொண்டாள்.

## வானொலி நகைச்சுவையாளர்கள்

நேற்று டோட்டோ-சான் மிகவும் தளர்ந்து இருந்தாள். அம்மா "இனிமேல் ரேடியோவில் எந்த காமெடியனையும் நீ கவனிக்கக் கூடாது" என்று சொல்லிவிட்டாள்.

டோட்டோ-சான் சிறுமியாய் இருந்ததற்கு மாறாக, வானொலி பெரியதாக இருந்தது. அது மரத்தினால் செய்யப்பட்டு மிகவும் நேர்த்தியாய் இருந்தது. அவர்களது வானொலி செவ்வகமாகவும், வட்டமான மேற்பாகத்துடன், முன்பகுதியில் இளஞ்சிவப்புப் பட்டினால் மூடப்பட்ட ஸ்பீக்கர்களுடனும், அரேபிய முறையில் வார்க்கப்பட்டு அழகாக இருக்கும். அதற்கு இரண்டு கட்டுப்பாட்டு குமிழ்கள் இருந்தன.

அவள் பள்ளிக்குக் கிளம்ப ஆரம்பிக்கும் முன்னர், காதை இளஞ்சிவப்புப் பட்டுக்கு அருகே வைத்து 'ரகுகோ' நகைச்சுவை யாளர்களைக் கேட்பது அவளுக்கு மிகவும் பிடிக்கும். அவர்களுடைய ஜோக்குகள் மிகவும் நகைச்சுவையாய் இருந்ததாய் அவள் நினைத்தாள். நேற்றுவரை அவர்களைக் கவனிப்பதை அம்மா ஆட்சேபிக்கவில்லை.

நேற்று இரவு ஒரு வாத்தியக் குழுவிலிருந்து அப்பாவின் சில

நண்பர்கள் அவர்கள் வீட்டிற்கு வந்து, வாழ்வறையில் நாண் கச்சேரியை பயிற்சி செய்து கொண்டிருந்தார்கள்.

"செல்லோ இசைக்கும் திரு. இட்சுனேசதா டாஷிபானா, உனக்கு சில வாழைப்பழங்கள் கொண்டு வந்துள்ளார்" என்றாள் அம்மா.

டோட்டோ-சான் சிலிர்த்துப் போனாள். அவள் பாந்தமாய் திரு. டாஷிபானாவை வணங்கினாள். நன்றி சொல்லும் முகத்தான், அம்மாவிடம் வியந்து சொன்னாள் "ஹே... அம்மா... அது மிகவும் அழகாயும், ரொம்ப நல்லாவும் உள்ளது."

அதற்குப் பிறகு அம்மாவும், அப்பாவும் வெளியே போயிருக்கும் போதுதான், டோட்டோ-சான் ரகசியமாய் கேட்க வேண்டியிருந்தது. நகைச்சுவையாளர்கள் நன்றாகச் செய்யும்போது, அவள் கூக்குரலிட்டுச் சிரிப்பாள். யாராவது வளர்ந்தவர்கள் இதைக் கவனித்தால், இவ்வளவு சின்னஞ்சிறுமி இவ்வளவு கஷ்டமான ஜோக்குகளையெல்லாம் எப்படி புரிந்து கொண்டு சிரிக்கிறாள் என வியப்பார்கள். ஆனால் குழந்தைகள் உள்ளார்ந்த நகைச்சுவை உணர்வைப் பெற்றிருக்கிறார்கள் என்பதில் சந்தேகமேயில்லை. அவர்கள் எவ்வளவு சிறியவர்களாய் இருக்கிறார்கள் என்பது பிரச்சினையில்லை. ஒரு நகைச்சுவையான நிகழ்ச்சி உண்மையிலேயே நடந்தால், அவர்களால் எப்போதும் அதை உணரமுடியும்.

## ஒரு ரயில்வே கார் வந்தது

"இன்றிரவு ஒரு புதிய ரயில்வே கார் வருகிறது" மதிய உணவு இடைவேளையின்போது, மியோ-சான் சொன்னாள். மியோ-சான் தலைமையாசிரியரின் மூன்றாவது மகள். அவளும் டோட்டோ-சானின் வகுப்பில்தான் படிக்கிறாள்.

ஏற்கெனவே ஆறு கார்கள் வகுப்பறைகளாய் அணி வகுத்து நின்றன. இப்போது புதிதாய் ஒன்று வருகிறது. மியோ-சான் இது நூலக வண்டியாகப் போகிறது எனக் கூறினாள். அவர்கள் எல்லோரும் பயங்கரமாய் உற்சாகமடைந்து விட்டார்கள்.

"எந்த வழியாய் அதைப் பள்ளிக்குள் எடுத்து வரப்போகிறார்கள் என்பது எனக்கு ஆச்சரியமாய் உள்ளது" என்று யாரோ சொன்னார்கள்.

இது உண்மையிலேயே ஒரு சவாலான வேலைதான். அங்கு ஒரு கணம் நிசப்தம் நிலவியது.

"அது ஒரு வேளை ஓய்மாச்சி லைன் பாதை வழியாக வந்து, பின்னர் லெவல் கிராசிங்கில் இந்த வழியாய் பிரித்து அதை எடுத்து வரவேண்டும்" என யாரோ ஒருவன் பரிந்துரைத்தான்.

"பிறகு அதைத் தண்டவாளத்தை விட்டு இறக்க வேண்டும்" வேறொருவன் சொன்னான்.

"பின்னர் ஒரு வண்டியில் வைத்து அதை இங்கு கொண்டு வந்து விடுவார்கள்" மற்றொருவன் சொன்னான்.

"இந்த மாதிரியான காரையெல்லாம் தூக்குவதற்கான பெரிய வண்டியெல்லாம் கிடையாது" ஒருவன் உடனடியாகச் சுட்டிக் காட்டினான்.

"நான் அப்படி நினைக்கவில்லை..."

யோசனைகள் எல்லாம் கொஞ்சம், கொஞ்சமாய் மறைந்தன. ஒரு ரயில்வேக் காரை ஒரு வண்டியிலோ, டிரக்கிலோ வைக்க முடியாது என்பதைக் குழந்தைகள் உணர்ந்தார்கள்.

"தண்டவாளங்கள்தான்!" டோட்டோ-சான் கடுமையான யோசனைக்குப் பிறகு சொன்னாள். "அவர்கள் ஸ்கூல் வரைக்கும் சில தண்டவாளங்களைப் பதிக்கலாம்"

"எங்கிருந்து?" யாரோ கேட்டார்கள்.

"எங்கேயோ? இப்ப டிரெயின் எங்கேயிருக்கோ, அங்கே இருந்து" தனது யோசனை அப்படியொன்றும் சிறந்ததில்லை என நினைத்துக் கொண்டே, டோட்டோ- சான் சொன்னாள். எங்கிருந்து கார் வருகிறது என்பது பற்றி அவளுக்கு எதுவும் தெரியாது. இருந்த போதிலும் பள்ளிக்கு நேர் கோட்டில் ரயில் பாதை பதிக்க வழியிலுள்ள வீட்டையும், பொருட்களையும் இடித்துத் தள்ளிவிடமாட்டார்கள் என்றே நினைத்தாள்.

ஒரு வழியில்லையென்றால் இன்னொன்று என்று பல தேவையில்லாத கலந்துரையாடல்களுக்குப் பின்பு, குழந்தைகள் கடைசியாய் மதியத்திற்குப் பிறகு வீட்டிற்குப் போவதில்லை என்றும், காத்திருந்து கார் வருவதைப் பார்ப்பது என்றும் முடிவு செய்தார்கள். மியோ-சான், தனது அப்பாவான தலைமையாசிரியரிடம் சென்று, தாங்கள் அனைவரும் இரவு வரை பள்ளியிலேயே இருக்க முடியுமா என கேட்டு வருவதற்கு எல்லோராலும் தேர்வு செய்யப்பட்டாள். அவள் திரும்பி வருவதற்கு கொஞ்சம் நேரம் ஆனது.

"கார் பின்னிரவில்தான் வருமாம்" அவள் சொன்னாள். "மற்ற எல்லா டிரெயினும் ஓடுவது நின்ற பிறகுதான் அது வரும். யாராவது அதைப் பார்க்க விரும்பினால், முதலில் வீட்டிற்குச் சென்று அனுமதி வாங்க வேண்டும். பின் இரவு உணவை முடித்த பின்னர், விரும்பினால் தங்கள் பைஜாமாக்களையும், போர்வையையும் எடுத்துக் கொண்டு, திரும்பி விடலாம்.

"வாவ்!" குழந்தைகள் எப்போதையும்விட உணர்ச்சி வசப்பட்டு கூச்சலிட்டார்கள்.

"அவர் எங்கள் பைஜாமாக்களை எடுத்து வரவேண்டும் என்றாரா?"

"ஏதாவது போர்வை எடுத்து வர வேண்டுமா?"

அன்று மதியத்திற்குப் பின்பு யாருமே பாடத்தில் கவனம் செலுத்தவில்லை. பள்ளி முடிந்ததும், டோட்டோ-சானின் வகுப்புக் குழந்தைகள் நேராக வீட்டிற்குச் சென்றார்கள். எல்லோரும் அன்று முழு இரவும் மற்றவர்களைப் பைஜாமாவுடனும் போர்வையுடனும் பார்ப்பதற்கு, தாங்கள் போதுமான அதிர்ஷ்டம் உடையவர்களாய் இருப்பதாக நினைத்துக் கொண்டார்கள்.

வீட்டை அடைந்ததும், டோட்டோ-சான் அம்மாவிடம் சொன்னாள். "ஒரு டிரெயின் வருகிறது. அது எப்படி வரப்போகிறது என்பது எங்களுக்குத் தெரியாது. பைஜாமாவும், போர்வையும் வேணும். நான் போலாமா?"

இந்த மாதிரி விளக்கினால், அம்மாவால் நிலைமையை என்னவென்று

புரிந்து கொள்ள முடியவில்லை. தனது மகளின் முகத்திலுள்ள தீவிரமான பார்வையை வைத்து, ஏதோ விசித்திரமானதொன்று உள்ளது என்பதை மட்டும் அவளால் அனுமானிக்க முடிந்தது.

அம்மா டோட்டோ-சானை எல்லாவிதமான கேள்விகளும் கேட்டாள். கடைசியாய் அவள் இவையெல்லாம் எதைப் பற்றி என்றும், துல்லியமாக என்ன நடக்கப்போகிறது என்பதையும் கண்டறிந்தாள். அவளுக்கு இந்த மாதிரி வாய்ப்பெல்லாம் இனி வாய்க்காதாகையால், டோட்டோ-சான் அதைக் கண்டிப்பாக காணவேண்டும் என அம்மா நினைத்தாள். கார் வருவதைத் தானேகூட முடிந்தால் பார்க்க வேண்டும் எனவும் நினைத்தாள்.

அம்மா, டோட்டோ-சானின் பைஜாமாவையும், போர்வையையும் எடுத்துக் கொண்டாள். இரவு உணவு முடிந்ததும், அவளே டோட்டோ-சானைப் பள்ளிக்கு அழைத்துச் சென்றாள். கிட்டத்தட்ட பத்து குழந்தைகள் அங்கிருந்தார்கள். இந்த நிகழ்ச்சியைக் கேள்விப்பட்ட சில பழைய மாணவர்களும் அதில் இருந்தார்கள். தங்கள் குழந்தைகளுடன் ஒரு ஜோடி அம்மாக்களும் வேறு வந்திருந்தார்கள். அவர்களும் அங்கு தங்க விரும்புவதைப் போலத்தான் காணப்பட்டார்கள். இருந்தாலும் தங்கள் குழந்தைகளைத் தலைமையாசிரியரின் பொறுப்பில் ஒப்படைத்து, அவர்கள் வீடு சென்றார்கள்.

"நான் அது வரும்போது உங்களை எழுப்புகிறேன்" என குழந்தைகளுக்குத் தலைமையாசிரியர் உறுதியளித்த பிறகு, அவர்கள் அசெம்பிளி ஹாலில் போர்வையால் மூடிக்கொண்டு படுத்தார்கள்.

எப்படி டிரெயின் உள்ளே வரும் என்ற ஆர்வத்தில் அவர்களால் தூங்க முடியாது என்றுதான் குழந்தைகள் நினைத்தார்கள். ஆனால் எக்கச்சக்கமான சந்தோஷத்திற்கும், உணர்வு தூண்டுதலுக்கும் பிறகு, அவர்கள் களைப்படைந்து சீக்கிரமே தூங்க ஆரம்பித்து விட்டார்கள். "என்னை எழுப்புவதில் உறுதியாக இருங்கள்" என்று அவர்களால் சொல்ல முடிவதற்கு முன்பே, அவர்களில் பெரும்பாலனவர்கள் தூங்கி விட்டார்கள்.

"அது இங்கே வந்து விட்டது! அது இங்கே வந்து விட்டது!"

காட்டுக் கத்தலாய் கத்திய குரலில் விழிப்பூட்டப்பட்ட டோட்டோ-சான், குதித்து எழுந்து, பள்ளி மைதானத்து வழியாக ஓடி, கேட்டிற்கும் வெளிப்புறமாய் வந்தாள். ரொம்பப் பெரிய ரயில்வே கார் ஒன்று காலை மூடுபனிக்கிடையே லேசாகத் தெரிந்தது. அது கனவு போல் இருந்தது. தண்டவாளம் இல்லாத தெரு வழியே எந்தவித சப்தத்தையும் ஏற்படுத்தாமல் ஒரு டிரெயின் வருகிறது. அது ஓய்மாச்சி டிப்போவில் இருந்து டிராக்டரால் இழுக்கப்படும் ஒரு பெரிய டிரெய்லரில் வைத்து எடுத்துவரப்பட்டுக் கொண்டிருந்தது. டோட்டோ-சானும், மற்றவர்களும் தங்களுக்கு இதற்குமுன்பு தெரியாததை இப்போது கற்றுக் கொண்டார்கள். வண்டியை விட மிகவும் பெரியதான டிரெய்லரை, டிராக்டர் என்றழைக்கப்படும் ஒன்று இழுக்கும் என்பதுதான் அவர்கள் கற்றுக் கொண்டது. அவர்கள் எல்லோருடைய மனதிலும் இது அழுத்தமாய் பதிந்தது.

டிரெய்லரில் ஏற்றப்பட்ட ரயில்வே கார், ஆள் நடமாட்டமில்லாத அந்தத் தெரு வழியே, மெதுவாக நகர்ந்து வந்து கொண்டிருந்தது.

திடீரென ஒரு பெரிய அமைதியின்மை தோன்றியது. அந்தக் காலத்தில் ராட்சஷ கிரேன்கள் எல்லாம் இல்லை. அதனால் காரை டிரெய்லரில் இருந்து வெளியே எடுத்து, பள்ளி மைதானத்தில் அதற்கான இடத்தில் நிறுத்துவது ஒரு அதிகஷ்டமான பணியாகும். காரைக் கொண்டுவந்தவர், நிறைய மரப்பாளங்களை கீழே போட்டு, காரை மெதுவாக டிரெயிலரில் இருந்து உருட்டி, பள்ளி இடத்தில் வைக்க வேண்டும்.

"ஜாக்கிரதையாக கவனியுங்கள்" தலைமையாசிரியர் சொன்னார், இவைதான் உருளைகள். உருளைச் சக்தி இந்தப் பெரிய காரை நகர்த்து வதற்குப் பயன்படுத்தப்படுகிறது.

குழந்தைகள் மிகவும் ஆர்வத்துடன் அதைக் கவனித்தார்கள்.



"ஹ¬வ்வ-ஹோ, ஹ¬வ்வ-ஹோ" என பணிபுரியும் போது வேலை யாட்கள் சத்தம் எழுப்பினார்கள். அவர்களது சுருதி தப்பாத கத்தலுக்கு ஏற்றார் போல் சூரியனும் மெல்ல, மெல்லச் சரியான சமயத்தில் எழுந்து கொண்டிருந்தது.

பள்ளியில் உள்ள மற்ற ஆறு கார்களைப் போலவே, இதுவரை எவ்வளவோ மக்களைச் சுமந்து சென்ற இந்தக் காரின் சக்கரங்களும் கழற்றப்பட்டிருந்தன. அதனது பயணம் செல்லும் வாழ்க்கை முடிந்து விட்டது. இனிமேல் இது குழந்தைகளின் சிரிப்பு சத்தத்தைதான் சுமந்து செல்லும்.

காலைச் சூரியனின் மினுக்கம் தங்களது பைஜாமாக்களில் விழ, பையன்களும், பெண்களும் அங்கு நின்று கொண்டிருந்தார்கள். அவர்கள் மிகவும் சந்தோஷமாய் இருந்ததால், அவர்களால் தங்களது மகிழ்ச்சியைக் கட்டுப்படுத்த முடியவில்லை. அவர்கள் மேலும், கீழும் குதித்துக் கொண்டும், தலைமையாசிரியரின் கழுத்தைச் சுற்றி பிடித்துக் கொண்டும், அவரது கரங்களில் ஊஞ்சலாடிக் கொண்டும் இருந்தனர்.

அவர்களது கடுமையான தாக்குதலால் தலைமையாசிரியர் தள்ளாடி னாலும், சந்தோஷமாகச் சிரித்துக் கொண்டுதான் இருந்தார். அவரது மகிழ்ச்சியைக் கண்டதும், குழந்தைகளும் சேர்ந்து கூடச் சிரித்தார்கள்.

அவர்கள் எவ்வளவு சந்தோஷமாய் இருந்தார்கள் என்பதை அவர்களில் யாரும் எப்போதும் மறக்கவே மாட்டார்கள்.

## நீச்சல் குளம்

அது டோட்டோ-சானுக்குப் பொன் எழுத்தால் பொறிக்கப்பட வேண்டிய நாள். அப்போதுதான் முதல் தடவையாக, ஒரு குளத்தில் குளிக்கிறாள். அதுவும் மேலே துளி ஆடை இல்லாமல்!

அது காலையில்தான் நடந்தது. தலைமையாசிரியர்தான் எல்லோரிடமும் சொன்னார். "எல்லாமே திடீர்னு ரொம்ப சூடாயிருச்சு. வெப்பம் தாங்க முடியவில்லை. அதனால நம்ம நீச்சல் குளத்தை நிரப்பலாம்னு நான் நினைச்சிருக்கேன்."

"வாவ்" எல்லோரும் மேலும் கீழும் குதித்துக் கூப்பாடிட்டார்கள்.

டோட்டோ-சானும், முதல் கிரேடு குழந்தைகளும் "வாவ்" என்று எல்லோருடனும் சேர்ந்து கத்தியதுடன் நில்லாமல், பெரிய மாணவ மாணவிகளை விடவும் மிகவும் ஆர்வத்துடன் மேலும், கீழும் குதித்துக் கூத்தாடினார்கள். பெரும்பாலான குளங்களைப்போல, டோமோயியின் குளம் செவ்வக வடிவில் அமைந்ததில்லை. அதனுடைய ஒரு பக்கம் இன்னொன்றை விடக் குறுகலாய் இருந்தது. அது ஒரு படகைப் போல அழகுற வடிவமைக்கப்பட்டிருந்தது. இதனால் மிச்சப்பட்ட தரை ஏதோ செய்வதற்காக அப்படியே விடப்பட்டிருந்தது. இருந்தாலும் அந்தக் குளம் பெரியதாகவும், கம்பீரமாகவும் இருந்தது. அது வகுப்பறைக்கும் அசெம்பிளி ஹாலுக்கும் நடுவில் அமைந்திருந்தது.

பாடவேளை முழுவதும், டோட்டோ-சானும் மற்றவர்களும் நீச்சல்

குளத்தை அவ்வப்போது பார்ப்பதிலேயே கண்ணாய் இருந்தனர். நீச்சல் குளம் காலியாய் இருக்கும்போது, காய்ந்து விழுந்த இலைகள் அங்கும் இங்கும் சிதறி விழுந்து, அது ஒரு விளையாட்டு மைதானம் போல் தோற்றமளிக்கும். ஆனால் இப்போது, அவையெல்லாம் சுத்தப்படுத்தப் பட்டு, தண்ணீர் நிரம்பத் துவங்கியதும், அது ஒரு உண்மையான நீச்சல்குளம் போலவே தோற்றமளிக்கத் தொடங்கியது.

கடைசியாக மதிய உணவு வேளை வந்தது. குழந்தைகள் எல்லோரும் குளத்தைச் சுற்றிக் குழுமியதும், தலைமையாசிரியர், "முதலில் சில உடற்பயிற்சிகளைச் செய்வோம். பின்னர் குளத்தில் நீந்தலாம்..." என்றார்.

"நீச்சல் குளத்திற்குள் போக எனக்கொரு நீச்சல் உடை தேவை யல்லவா?" டோட்டோ-சான் நினைத்தாள். அம்மாவுடனும், அப்பா வுடனும் கமகுராவுக்கு அவள் சென்று இருந்தபோது, அவள் ஒரு நீச்சல் உடை, ஒரு ரப்பர் வளையம், மேலும் நீச்சல் சம்பந்தப்பட்ட சில பொருட்கள் வாங்கியிருந்தாள். டீச்சர் நீச்சல் உடை எடுத்து வர அவர்களைக் கேட்டுக் கொண்டார்களா என்பதைத் தனக்குள் நினைவு படுத்த முயன்றாள்.

அவளது எண்ண ஓட்டத்தைச் சரியாகப் புரிந்து கொண்டதுபோல, தலைமையாசிரியர், "நீச்சல் உடை இல்லையென்று கவலைப்படாதே. அசெம்பிளி ஹாலுக்குப் போய் என்னவென்று பார்" என்றார்.

டோட்டோ-சானும், மற்ற முதல் கிரேடு மாணவ மாணவிகளும் அசெம்பிளி ஹாலுக்குச் சென்ற போது, குளிப்பதற்குப் போவது போல பெரிய குழந்தைகள் அனைவரும் சட்டையைக் கழற்றிவிட்டு சந்தோஷக் கூச்சலிட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்கள் ஒருவர் பின் ஒருவராய் பூரண நிர்வாணமாய் வெளியேறி பள்ளி மைதானத்திற்குள் ஓடினார்கள். டோட்டோ-சானும் அவளது நண்பர்களும் அவர்களை வேகமாகத் தொடர்ந்தார்கள். அந்த மிதவெப்பக் காற்றில், ஆடை அணியாது இருப்பது மிகவும் சுகமாய் இருந்தது. அவர்கள் அசெம்பிளி ஹாலின் வெளியே முதல் மேற்படியை அடைந்ததும், மற்றவர்கள் வார்ம்-அப் (warm-up) உடற்பயிற்சியைச் செய்து கொண்டிருப்பதைக் கண்டார்கள். டோட்டோ-சானும் அவளது பள்ளித்தோழர்களும் வெறும் காலோடு படிகளில் இறங்கி ஓடினார்கள். தலைமையாசிரியரின் மகனும், ஜிம்னாஸ் டிக்கில் நிபுணருமான, மியோ-சானின் மூத்த அண்ணன்தான் நீச்சல் கற்றுக் கொடுப்பவன். அவன் டோமோயில் ஆசிரியராகப் பணிபுரிய வில்லை என்றாலும், பல்கலைக்கழக நீச்சல் அணியில் இடம் பெற்றிருந்தான். டோமோயி என்ற அவன் பெயரைத்தான் பள்ளிக்கும் வைத்திருக்கிறார்கள். டோமோயி-சான் நீச்சல் கால்சட்டை அணிந்திருந்தான்.

உடற்பயிற்சி முடிந்து, குளிர்ந்த நீர் அவர்கள் மேல் ஊற்றப் பட்டதும் குழந்தைகள் ஊளையிட்டார்கள். பின்னர் குளத்திற்குள் குதித் தார்கள். குளத்திற்குள் குதித்தவர்கள் தாங்களாகவே நிற்க முடிகிறதா என்பதைக் கவனித்துத் திருப்தி அடையும் வரை, டோட்டோ-சான் உள்ளே போகவில்லை. வீட்டுக் குளியலறைத் தொட்டி நீர் மாதிரி, இங்கு

நீர் சுடவில்லை. இருந்தாலும் குளியறைத் தொட்டியைவிட நீச்சல் குளம் பெரியதாயும் மிக அழகாகவும் இருந்தது. எவ்வளவு தூரம் கையை நீட்டினாலும், நீச்சல்குளத்தில் தண்ணீரைத் தவிர வேறொன்றுமில்லை.

ஒல்லிக் குழந்தைகள், குண்டுக் குழந்தைகள், சிறுவர்கள், சிறுமியர்கள் என்று எல்லோரும் தங்கள் பிறந்தநாள் உடையில் சிரித்துக் கொண்டும், சப்தமிட்டுக் கொண்டும், தண்ணீரை ஒருவர் மேல் ஒருவர் வாரி இறைத்துக் கொண்டும் இருந்தார்கள்.

இது எவ்வளவு சிறந்த வேடிக்கை என டோட்டோ- சான் தனக்குள் நினைத்துப் பார்த்தாள். உண்மையிலேயே இவைதான் மதுரமான உணர்வுகள்! ராக்கி தன்னுடன் பள்ளிக்கு வர முடியவில்லை என்பது தான் அவளுக்கு வருத்தமாக இருந்தது. நீச்சல் உடையில்லாமல், நீச்சல் குளத்திற்குள் இறங்கலாம் என்பது ராக்கிக்கு மட்டும் தெரிந்தால், அதுவும் உள்ளே வந்துவிடும் என்று டோட்டோ-சான் உறுதியாக நம்பினாள்.

தலைமையாசிரியர் குழந்தைகள் நிர்வாணமாய் நீந்த அனுமதித் திருக்கிறாரே என வியக்கலாம். இப்படிதான் குளிக்க வேண்டுமென்று எந்தவித திட்டவட்டமான விதிமுறைகளும் இங்கு இல்லை. நீச்சல் உடை கொண்டு வந்து, அதை அணிய விரும்பினால் அது கச்சிதமாய் சரிதான். அப்படியில்லாமல் இன்று போல, நீச்சல் உடை இல்லாமலேயே திடீரென நீச்சல் குளத்தில் நீந்த வேண்டுமென முடிவெடுத்தால், அதுவும் கச்சிதமாய் சரிதான். ஏன் அவர் குழந்தைகளை நிர்வாணமாய் குளிக்கவிட்டார்? ஏனென்றால், தலைமையாசிரியர் சிறுவர்களும், சிறுமியர்களும் தங்கள் உடற்கூறு வேற்றுமையில் ஆரோக்கியமற்ற ஆர்வத்தைக் காட்டுவது சரி யில்லை என்றும், தங்கள் உடலை மற்றவர்களுக்கு மறைப்பதற்காகப் படும் கஷ்டம் இயற்கைக்கு முரணானது என்றும் நினைத்தார்.

அவர், எல்லோருடைய உடலும் அழகானதுதான் என்பதை குழந்தை களுக்குப் பயிற்றுவிக்க விரும்பினார். டோமோயி குழந்தைகளில் யசுயாகி-சான் போல இளம்பிள்ளைவாதத்தால் பாதிக்கப்பட்ட சிலரும் இருந்தார்கள். அவர்கள் மற்றவர்களுடன் வெறும் உடலுடன், ஒன்றாக விளையாடும் போது, அது அவர்கள் வெட்க உணர்வைப் போக்கி, தாழ்வு மனப்பான்மை ஏற்படுவதைத் தடுக்கிறது என்பதைத் தலைமையாசிரியர் உணர்ந்திருந்தார். இது நடக்கும் போது, உடல் ஊனமுற்ற குழந்தைகள் முதலில் வெட்கம் அடைந்தாலும், சீக்கிரமே அவர்கள் சந்தோஷத்தை அனுபவிக்க ஆரம்பித்ததும், தங்கள் வெட்க உணர்வுகளிலிருந்து முழுவதுமாய் விடுதலை அடைந்து விடுகிறார்கள்.

இது குறித்து சில பெற்றோர்கள் கவலையடைந்தார்கள். அவர்கள் எப்போதும் அணிய வேண்டுமென வலியுறுத்தி தங்கள் குழந்தைகளுக்கு நீச்சல் உடை வாங்கித் தந்திருந்தார்கள். முதல் முதலிலிருந்தே ஆடை யில்லாமல் குளிப்பதுதான் சிறந்தது என டோட்டோ-சான் மாதிரி திட்ட வட்டமாக முடிவெடுத்தவர்களைப் பார்த்தும், தாங்கள் நீச்சல் உடை எடுத்து வர மறந்து விட்டதால் இப்படிக் குளிக்க நேர்ந்து விட்டது என்றுச் சாக்குச் சொல்லி குளிப்பவர்களைப் பார்த்தும், பெரும்பாலானவர்கள் (நீச்சல் உடை கொண்டு வந்திருந்தாலும்) மற்றவர்களைப் போல ஆடை

யில்லாமல் நீந்துவதுதான் வேடிக்கையானது என திருப்தியடைந்து விடுகிறார்கள். ஆனால் அவர்கள், வீட்டிற்குத் திரும்பும்போது நனைந்த நீச்சல் உடையை எடுத்துச் செல்ல வேண்டுமென்பதில் மட்டும் உறுதியாக இருந்தார்கள். நீச்சல் உடையே அணியாததால், நீச்சல் உடை தொடர்ந்து அணிவதால் ஏற்படும் வெள்ளைத்தடம், டோமோயி குழந்தைகள் யார் மேலும் பதியாமல் அவர்கள் உடல் முழுவதும் பெர்ரி பழங்களைப் போல் ஒரேயடியாய் பழுப்பாய் இருந்தது.

## தகுதி அறிவிப்பு அட்டை

வலப்பக்கமும், இடப்பக்கமும் பார்க்காமல் முதுகில் பள்ளிப்பை குதித்தாட, டோட்டோ-சான் ஸ்டேஷனில் இருந்து நேராக வீட்டிற்கு ஓடி வந்தாள். அந்தக் கோலத்தில் அவளைப் பார்த்த யாராய் இருந்தாலும், ஏதோ பயங்கரமாய் நடந்து விட்டது என்றுதான் நினைப்பார்கள். அவள் பள்ளிக் கேட்டை கடந்த கணமே ஓட ஆரம்பித்தவள்தான், ஓடிக் கொண்டேயிருக்கிறாள்.

வீட்டை அடைந்ததும், முன்கதவைத் திறந்து, "நான் திரும்பி வந்து விட்டேன்" என்று அவள் சொன்னாள். பின்னர் ராக்கியைப் பார்க்கச் சென்றாள்; அது கதவருகே, தனது முழு வயிற்றையும் தரையில் பதித்துக் குளுமையான இடம் பார்த்து படுத்திருந்தது. டோட்டோ-சான் ஒரு வார்த்தையும் பேசவில்லை. அவள் ராக்கியின் முன் அமர்ந்து, முதுகிலிருந்து பள்ளிப்பையைக் கழற்றி, தகுதி அறிவிப்பு அட்டையை வெளியே எடுத்தாள். அதுதான் அவளது முதல் 'தகுதி அறிவிப்பு அட்டை'. ராக்கி தனது மதிப்பெண்களைப் பார்க்கிற மாதிரி, அவள் அட்டையைப் பார்த்தது.

"இதைப் பார்" அவள் ரொம்பப் பெருமையாய்ச் சொன்னாள். அதில் A,B என்று பல குறியீடுகள். டோட்டோ-சானுக்கு A யை விட B சிறந்ததா இல்லை B யை விட A சிறந்ததா என்று இன்னும் தெரியாது. இவளுக்கே தெரியாத பட்சத்தில் ராக்கிக்கு இதையெல்லாம் தெரிந்து கொள்வது என்பது முடியவே முடியாத விஷயம். ஆனாலும் டோட்டோ-சான் தனது முதல் தகுதி அறிவிப்பு அட்டையை யாருக்கும் முன்னர் ராக்கிதான் காணவேண்டும் என விரும்பினாள். ராக்கி இதைக் கண்டு சந்தோஷமடையும் என அவள் உறுதியாய் நம்பினாள்.

தனது முகத்திற்கு எதிரே அந்த அட்டையைக் கண்ட ராக்கி, அதை முகர்ந்து பார்த்து, பின்னர் டோட்டோ- சானைப் பார்த்தது.

"இப்ப உனக்கு திருப்திதான், இல்லையா?" என்று டோட்டோ-சான் வினவினாள். "ஆனா இது முழுக்க முழுக்க கஷ்டமான வார்த்தைகளினால் இருப்பதினால், ஒரு வேளை உனக்குப் படிக்க முடியாம போயிருக்கலாம்"

ராக்கி தனது தலையைத் திருப்பி மறுபடி ஒரு முறை அந்த அட்டையை நன்றாகப் பார்த்தது. பிறகு டோட்டோ- சானின் கையை நக்கியது.

"நீ ரொம்ப சமத்து" சொல்லிக் கொண்டு அவள் எழுந்தாள்.

"இனிமே இதைக் கொண்டு போய் அம்மாகிட்ட காட்டுறேன்"

டோட்டோ-சான் சென்ற பிறகு, ராக்கி எழுந்து, மற்றொரு குளிர்ந்த இடத்தைக் கண்டு பிடித்தது. பின்னர் மெதுவாய் அங்கு சாய்ந்து, கண்களை மூடிக் கொண்டது. டோட்டோ-சான்தான் என்று இல்லாமல் யாராய் இருந்தாலும் சரி, ராக்கி கண்ணை மூடிக் கொண்டிருக்கும் பாணியைப் பார்த்தால், அது தகுதி அறிவிப்பு அட்டையைப் பற்றிதான் தீவிரமாய் யோசித்துக் கொண்டிருக்கிறது என்று நிச்சயமாக சொல்லுவார்கள்.

## கோடை விடுமுறை ஆரம்பித்தது

'நாம் நாளை கூடாரமடித்துத் தங்கப் போகிறோம். தயவு செய்து போர்வைகளையும், பைஜாமாக்களையும் எடுத்துக் கொண்டு நாளை மாலை பள்ளிக்கு வரவும்' என்ற தலைமையாசிரியரின் குறிப்பை வீட்டிற்கு எடுத்து வந்து டோட்டோ-சான் அம்மாவிடம் காட்டினாள். அடுத்த நாளிலிருந்துதான் கோடை விடுமுறை ஆரம்பிக்கிறது.

"கூடாரமடிப்பது என்பதற்கு என்ன அர்த்தம்?" டோட்டோ-சான் வினவினாள்.

அம்மாவும்கூட அது குறித்து வியப்படைந்தாலும், "எங்கோ வெளியிடத்திற்குச் சென்று, கூடாரங்கள் அமைத்து, அவைகளில் உறங்குவது என்பதுதான் இதற்கு பொருளாய் இருக்க வேண்டும். கூடாரத்திற்குள் உறங்கினால், நீ நிலவையும் நட்சத்திரத்தையும் பார்க்க முடியும். அவர்கள் எங்கே கூடாரம் அமைக்கப் போகிறார்கள் என்பதுதான் எனக்கு வியப்பாக உள்ளது. இதற்காகக் கட்டணம் என்று எதையும் குறிப்பிடவில்லை. ஆதலால், எங்கோ பள்ளிக்கு அருகில்தான் கூடாரம் அமைக்கப் போகிறார்கள்" என்று பதிலளித்தாள்.

யுகாந்திரத்திற்கும் தனக்குத் தூக்கம் வராது என்பதுபோல அன்றிரவு படுக்கைக்குச் சென்றபோது, டோட்டோ-சான் உணர்ந்தாள். கூடாரம் அடித்துத் தங்குவது என்ற திட்டமே பயங்கர சாகசம் போல் அவளை பயமுறுத்தியது. அவளது இதயமே வெடித்து விடுவதுபோல் வேகமாகத் துடித்தது.

அடுத்த நாள் காலை, விழித்த உடனேயே, தனது பொருட்களை அடுக்க ஆரம்பித்து விட்டாள். அன்று மாலை பைஜாமா உள்ள தனது தோல்பையின்மேல் போர்வையை வைத்துக்கொண்டு, எல்லோரிடமும் விடைபெற்றுப் புறப்பட்டாள். அப்போது, தான் மிகவும் சிறியவளாய் இருப்பதால் இவையெல்லாம் தம்மால் இயலுமா என அவள் உள்ளுக்குள் பயந்து கொண்டிருந்தாள். குழந்தைகள் பள்ளியில் குழுமியதும், தலைமையாசிரியர் "இனிமேல், எல்லோரும் அசெம்பிளி ஹாலுக்கு வாருங்கள்" என்றார். அவர்கள் அங்கே சென்றதும், கடினமானதும் சொரசொரப்பானதுமான ஏதோ ஒன்றைச் சுமந்து கொண்டு தலைமையாசிரியர் சிறு மேடையை நோக்கிச் சென்றார். ஆமாம், அவர் சுமந்து வந்தது ஒரு பச்சைநிறக் கூடாரத் துணி.

அதை விரித்துக் கொண்டே, "எப்படி கூடாரம் அமைப்பது என்பதை உங்களுக்குக் காட்டப் போகிறேன்" என்று தலைமையாசிரியர் சொன்னார், "தயவுசெய்து கவனத்துடன் இதைப் பாருங்கள்."

மூச்சை விட்டுக் கொண்டும், இழுத்துக்கொண்டும், தன்னந்தனியாக, கயிறுகளை இந்த வழியாக இழுத்தும், கம்பங்களை அந்த வழியாக அமைத்துக் கொண்டும் இருந்தார் தலைமையாசிரியர். என்ன ஆச்சரியம், கண்மூடித் திறப்பதற்குள் அங்கொரு அழகிய கூடாரம்!

அவர் சொன்னார், "இனிமேல் அசெம்பிளிஹால் முழுவதும் இது போலவே கூடாரம் அமைத்து, அதில் தங்க ஆரம்பியுங்கள்."

எல்லோரையும் போல அம்மாவும், எங்கோ வெளியிடத்தில்தான் அனைவரும் கூடாரம் அமைத்துத் தங்குவார்கள் என நினைத்திருந்தாள். ஆனால் தலைமையாசிரியர் வேறு மாதிரி சிந்தித்தார். இரவு மழை பெய்தாலோ அல்லது அதிகம் குளிர்ந்தாலோ குழந்தைகளுக்குக் கஷ்டம். ஹாலுக்குள் என்றால் ஒன்றும் பிரச்சினை இல்லை.

"நாங்கள் கூடாரம் அமைத்துத் தங்கப் போகிறோம், நாங்கள் கூடாரம் அமைத்துத் தங்கப் போகிறோம்" என்ற சந்தோஷக் கூச்சலுடன் குழந்தைகள் தங்களுக்குள் குழுவாகப் பிரிந்து, டீச்சர்களின் உதவியுடன், கடைசியாக தேவையான அளவு கூடாரங்களை அமைத்து முடித்தார்கள். ஒரு கூடாரத்திற்குள் மூவர் படுத்துறங்க முடியும். டோட்டோ-சான் சீக்கிரமாய் தனது பைஜாமாவை மாட்டிக் கொண்டாள். குழந்தைகள் அனைவரும் மகிழ்ச்சியுடன் இந்தக் கூடாரத்திற்குள்ளும் அந்தக் கூடாரத்திற்குள்ளும் ஊர்ந்து கொண்டிருந்தார்கள். கூடாரத்தின் அங்கேயும், இங்கேயும் எக்கச்சக்கமான பார்வையாளர்கள்!

எல்லோரும் பைஜாமா அணிந்ததும், தலைமையாசிரியர் எல்லோரும் பார்க்க முடிகிற மாதிரி நடுவில் வந்து அமர்ந்து, தனது வெளிநாட்டு அனுபவங்களை அவர்களுக்குக் கூற ஆரம்பித்தார். சில குழந்தைகள் கூடாரத்திற்குள் படுத்துக்கொண்டு தலையை மட்டும் வெளியே நீட்டிக் கொண்டிருந்தார்கள். வேறு சிலரோ சரியாக அமர்ந்திருந்தார்கள். வேறு சிலரோ குழந்தைகளின் மடியில் தலை வைத்துப் படுத்திருந்தார்கள். அவர்கள் அனைவரும் தாங்கள் பார்த்திராத, ஏன் சிலபேர் கேட்டும் கூட இராத வெளிநாடுகளைப் பற்றி தலைமையாசிரியர் கூறும் கதைகளை மிகவும் உன்னிப்பாய் கவனித்துக் கொண்டிருந்தார்கள். தலைமை யாசிரியரின் கதைகள் மிகவும் ஆர்வத்தை தூண்டுவதாக இருந்தன. அதே சமயத்தில் அது கடல் கடந்த நாடுகளில் இருக்கும் மற்ற குழந்தைகளும் தங்களுக்கு நண்பர்கள்தான் என்ற உணர்வையும் அவர்களிடம் ஏற்படுத்துவதாக இருந்தது.

அசெம்பிளி ஹால் கூடாரத்திற்குள் தூங்கும் இந்த ஒன்றுமில்லாத நிகழ்ச்சி, குழந்தைகளுக்கு வாழ்க்கையிலேயே மறக்க முடியாத சந்தோஷ மான, மதிப்பு வாய்ந்த அனுபவமாகி விட்டது. தலைமையாசிரியருக்கு நிச்சயமாக குழந்தைகளை எப்படி சந்தோஷமாக வைத்துக்கொள்வது என்பது தெரிந்திருக்கிறது.

தலைமையாசிரியர் தனது பேச்சை முடித்ததும், அசெம்பிளி ஹாலின்

விளக்கு அணைக்கப்பட்டது. எல்லாக் குழந்தைகளும் தங்களது கூடாரத்திற்குச் சென்று விட்டார்கள். சிரிப்பலைகளை சில பேரிடமிருந்து கேட்க முடிந்தது. மற்றவர்களிடமிருந்து 'குசு குசு' பேச்சைக் கேட்க முடிந்தது. கூடாரத்திற்குள் தூரத்து மூலையில் ஏடாகூடமாய் தகராறு நடப்பது போலக் கூட சத்தம் கேட்டது. பிறகு கொஞ்சம் கொஞ்சமாய் அமைதி ஆக்ரமித்தது.

நிலவோ, நட்சத்திரமோ இல்லாமல் அசெம்பிளி ஹாலில் கூடாரம் அடித்துத் தங்குதல் முடிந்து விட்டது. இருந்தாலும் எல்லோரும் முழுமையாய் இதை அனுபவித்தார்கள். அவர்களைப் பொறுத்தவரை, இந்தச் சின்ன அசெம்பிளி ஹால் ஒரு உண்மையான கூடாரமடிக்கப்பட்ட மைதானமாகத்தான் தோன்றியது. திங்கள் மினிர்வும், நட்சத்திர ஒளிர்வும் நிரந்தரமாய் நிறைந்திருந்த அந்த இரவு, அவர்களது மனக்குகைக்குள் பொதிந்து போனது.

## அரிய சாதனை

அசெம்பிளி ஹாலில், கூடாரம் அடித்துத் தங்கி இரண்டு நாட்கள் கழித்துத்தான் டோட்டோ-சான் அரிய சாதனை நடத்தி முடித்தாள். அது தான் யசுயாகி-சானை அவள் அழைத்திருந்த நாள். அவள் அவனை அழைத்திருந்தது மிகவும் ரகசியமாயிருந்ததால், அது அவளது அம்மாவிற்கோ, அப்பாவிற்கோ அல்லது யசுயாகி-சானின் பெற்றோர்களுக்கோ தெரியாது. அவள் யசுயாகி-சானை தனது மரத்திற்கு வருமாறு அழைத்திருந்தாள்.

டோமோயி மாணவ மாணவிகள் அனைவருக்கும் பள்ளி மைதானத்தில் ஒவ்வொரு மரம் இருந்தது. ஒவ்வொருவரும் அது தாங்கள் பற்றி ஏறுவதற்கான மரம் என நம்பினார்கள். டோட்டோ-சானின் மரம் மைதானத்தின் விளிம்பில், வேலியை ஒட்டினாற்போல், குகோன்புட்சுவுக்குப் போகும் தெரு அருகில் இருந்தது. அது மிகவும் பெரியதாயும், ஏறும் போது வழுக்கக் கூடியதாயும் இருந்தது. இருநதாலும் மிகவும் திறமையாக அதில் ஏறிவிட்டால், தரையிலிருந்து ஆறாவது அடியில் ஒரு கிளை வந்து விடும். அந்த கிளை ஒரு தூளி மாதிரி வசதியாக இருக்கும். டோட்டோ-சான் பள்ளி முடிந்த பின்பும், பள்ளி இடைவேளை போதும் அங்கு போவது வழக்கம். அங்கே உட்கார்ந்து கொண்டு, தூரவெளிகளையும், வானவெளிகளையும், கீழே சென்று கொண்டிருக்கும் ஆட்களையும் பார்த்துக் கொண்டிருப்பாள்.

குழந்தைகள் தங்களது மரங்களை, தங்களது சொந்த சொத்தாகக் கருதினார்கள். அதனால நீங்கள் யாராவது ஒருவர் மற்றவர் மரத்தில் ஏற விரும்பினால், மிகவும் பணிவுடன் அவர்களிடம் சென்று "தொந்தரவு செய்வதற்கு என்னை மன்னிக்கவும். நான் உங்கள் மரத்திற்கு வரலாமா?" என்றுதான் கேட்க வேண்டும்.

யசுயாகி-சானுக்கு இளம்பிள்ளைவாதம் இருந்ததால் அவன் எந்த மரத்திலுமே ஏற முடிந்ததில்லை. அதனால் அவனால் தனக்கு என்று

எந்த மரத்தையும் சொந்தம் கொண்டாட முடியவில்லை. அதனால்தான் அவனைத் தனது மரத்திற்கு வருமாறு டோட்டோ-சான் அழைத்திருந்தாள். தங்களைச் சுற்றியுள்ளவர்களுக்கு இது தெரிந்தால் தேவையில்லாத குழப்பம் எழும் என்பதால், அவர்கள் இதை ரகசியமாக வைத்திருப்பது என முடிவெடுத்திருந்தார்கள்.

டோட்டோ-சான் வீட்டை விட்டு புறப்படும் போது, யசுயாகி-சானை டென்னன் சோபூவில் உள்ள அவன் வீட்டில் சந்திக்கப் போவதாய் அம்மாவிடம் சொன்னாள். அவள் பொய் சொன்னதால், அம்மாவை நேருக்கு நேர் பார்க்க முடியவில்லை. தனது ஷூ நாடாவையே பார்த்துக் கொண்டிருந்தாள். ராக்கி ஸ்டேஷன் வரைக்கும் அவளுடன் வந்தது, அவள் பிரியும் போது, அதனிடம் உண்மையை மறைக்க முடியவில்லை.

"நான் யசுயாகி-சானை எனது மரத்தில் ஏற்றப் போகிறேன்" என்றாள் அவள்.

டோட்டோ-சான் குதித்தோடி பள்ளியை அடைந்தபோது, அவளது ரயில் பாஸ் அவளது கழுத்தில் குதித்தாடியது. கோடை விடுமுறையாதலால் அப்படியே கிடக்கட்டும் என விடப்பட்ட மலர் படுகையருகே யசுயாகி-சான் தனக்காக காத்திருப்பதை அவள் கண்டாள். அவன் டோட்டோ-சானை விட ஒரு வருடமே மூத்தவன். ஆனாலும், அவன் பேசும்போது அவனது குரல் ரொம்பவும் பெரியவனது சத்தம் போல் ஒலிக்கும்.

டோட்டோ-சானைக் கண்டதும், யசுயாசி-சான் கால்களை இழுத்து இழுத்து நடந்து, அதற்குத் தகுந்தாற்போல் சமநிலைப்படுத்த கைகளை முன்னே நீட்டியபடி, அவளை நோக்கி வேகமாக நடந்தான். ஏதோ ரகசியமான ஒன்றை செய்யப்போவதாக நினைத்ததும் டோட்டோ-சானுக்கு சில்லிட்டது. மெல்ல, பயங்கலந்து சிரித்தாள். அதைப்போலவே யசுயாசி-சானும் பதிலுக்குச் சிரித்தான்.

டோட்டோ-சான், யசுயாகி-சானை தனது மரத்திற்கு அழைத்துச் சென்றாள். அவள் முதல் நாள் இரவே நினைத்து வைத்திருந்த மாதிரி காவலாளி கொட்டிலுக்குச் சென்று ஏணியை எடுத்துக் கொண்டாள். அங்கிருந்து அதை மரத்திற்கு இழுத்துக் கொண்டே வந்து, அதை அந்தக் கிளையின்மேல் ஏறுவதற்கு லாவகமாய் மரத்தின் மேல் சாத்தினாள். அவள் அதன் மேல் ஏறி, ஏணியின் உச்சத்தை அடைந்ததும், "சரி... இப்போது ஏற முயற்சி செய்..." என்றாள்.

யசுயாகி-சானின் கைகளும், கால்களும் மிகவும் வலுவிழந்து இருந்ததால், உதவியில்லாமல் அவனால் ஏணியின் முதல் படியைக் கூட ஏறமுடியாது என்றுதான் தோன்றியது. அதனால் டோட்டோ-சான் ஏணி வழியாய் வேகமாக கீழிறங்கி, யசுயாகி-சானின் பின்னிருந்து அவனை மேல் நோக்கித் தள்ளினாள். ஆனால் டோட்டோ-சான் மிகவும் சிறியவளாயும், ஒல்லியாகவும் இருந்ததால், அவளால் செய்யமுடிந்தது என்னவோ யசுயாகி-சானை பிடித்துக் கொள்ள முடிந்தது மட்டுந்தான். யசுயாகி-சான் ஏணியின் கீழ் நின்று கொண்டு, முதல்படியில் இருந்து கால்களைத் தூக்க முனைந்தபோது, அவன் தலை ஒருபக்கமாய் சாய்ந்தது. டோட்டோ-சானுக்கு அப்போதுதான் முதல் தடவையாய் தான் நினைத்ததைக் காட்டிலும் இது மிகவும் கடினமாகப் போகிறது என்பது புரிந்தது.

அவளால்தான் என்ன செய்ய முடியும்?

எப்பாடு பட்டாயினும் யசுயாகி-சானை மரத்தில் ஏற்றிவிட வேண்டுமென டோட்டோ-சான் விரும்பினாள். அதற்காக மேற்கொண்டு செய்ய வேண்டியதை ஆர்வத்துடன் யோசித்துக் கொண்டிருந்தாள். அவள் ஏணியைச் சுற்றி வந்து யசுயாகி-சானை நேருக்கு நேர் பார்த்தாள். சமாதானமே படுத்த முடியாதது போல் அவன் உடைந்து போயிருந்தான். அதனால் அவள், கன்னங்களை 'புப்ப்' என்று ஊதி, அவனை உற்சாகப் படுத்துவதற்காக தனது முகத்தை வேடிக்கையாய் அஷ்ட கோணலாக்கினாள்.

"பொறுத்திரு! நான் ஒரு திட்டம் வைத்துள்ளேன்."

அவள் மறுபடியும் காவலாளியின் கொட்டிலுக்குச் சென்றாள். ஏதாவது தனக்கு உதவிகரமாக இருக்குமா என ஒவ்வொரு பொருளாய் இழுத்து அவள் பார்த்துக் கொண்டிருந்தாள். கடைசியாய் அவள் ஒரு 'படிக்கட்டு' ஏணியை கண்டு பிடித்தாள். அதுவே உறுதியாக நிற்குமாதலால், ஏறும் போது அதை யாரும் பிடிக்க அவசியமில்லை.

அந்த 'படிக்கட்டு ஏணி'யை இழுத்து வரும்போது, அவளுக்கு தனது பலத்தைக் குறித்து வியப்பாய் இருந்தது. மேலும் அந்த படிக்கட்டு அந்தக் கிளை வரை போனது, அவளுக்கு மிகவும் சந்தோஷமாய் இருந்தது.

"இனி பயப்படாதே" அவனது மூத்த அக்கா மாதிரி சொன்னாள். "இது நீ ஏறும்போது ஆடவே ஆடாது..."

'படிக்கட்டு ஏணி'மேல் யசுயாகி-சான் நடுக்கத்துடன் நிற்பது போலத் தோன்றியது. வியர்வையில் மூழ்கியிருந்த டோட்டோ-சானை அவன் பார்த்தான். யசுயாகி-சானுக்கும் எக்கச்சக்கமாய் வியர்த்திருந்தது. பின்னர் அவன் மரத்தைப் பார்த்தான். பிறகு மிகவும் உறுதியுடன், முதற்படிக்கட்டில் தனது காலை வைத்தான். 'படிக்கட்டு ஏணி'யின் உச்சியை அடைவதற்கு யசுயாகி-சானுக்கு எவ்வளவு நேரம் பிடித்தது என்பதை அவர்கள் இருவருமே உணரவில்லை. கடுங்கோடையின் வெயில் முதுகைப் பிளந்தாலும், யசுயாகி-சானை 'படிக்கட்டு ஏணி'யின் உச்சிக்குக் கொண்டு செல்ல வேண்டும் என்ற எண்ணத்தைத் தவிர அவளுக்கு வேறொன்றுமில்லை. டோட்டோ-சான் அவனுக்குப் பின்னால் நின்று கொண்டு, அவன் காலைத் தூக்கி விட்டாள். யசுயாகி-சானும் தனது அனைத்து சக்தியையும் திரட்டிப் போராடி, கடைசியாய் மேலே வந்தடைந்தான்.

"ஹுர்ரே!"

ஆனால் அதற்குப் பிறகு எதுவும் நம்பிக்கையளிப்பதாய் தெரிய வில்லை. டோட்டோ-சான் மரக்கிளைக்குத் தாவினாள். ஆனால் எப்படி முயற்சி செய்தாலும், யசுயாகி-சானை 'படிக்கட்டு ஏணி'யிலிருந்து மரக் கிளைக்கு கொண்டு வரவே முடியவில்லை. 'படிக்கட்டு ஏணி'யைப் பிடித்துக்கொண்டு யசுயாகி-சான் டோட்டோ-சானைப் பரிதாபமாகப் பார்த்தான். திடீரென டோட்டோ-சானுக்கு அழவேண்டும் போலிருந்தது. எப்படியாவது யசுயாகி-சானை தனது மரத்திற்குக் கொணர்ந்து, அவனுக்கு எல்லாவித பொருட்களையும் காட்ட வேண்டுமென அவள் விரும்பினாள்.

ஆனாலும் அவள் அழவில்லை. தான் அழுதால், யசுயாகி-சானும் சேர்ந்து ரொம்பவும் அழ ஆரம்பித்து விடுவான் என அவள் பயந்தாள்.

அதற்குப் பதிலாய் இளம்பிள்ளை வாதத்தால் ஒட்டிப்போயிருந்த விரல்களுடன் கூடிய அவனது கையைப் பிடித்துக் கொண்டாள். அவனது கை அவளுடையதைவிடப் பெரியதாயும், அவனது விரல்கள் அவளுடையதை விட நீளமாகவும் இருந்தது. அப்படியே அவனது கையை நீண்ட நேரம் பிடித்துக் கொண்டிருந்தாள். பிறகு அவள் சொன்னாள், “படுத்துக்கொள்... நான் உன்னை மேலே இழுத்து விடுவேன்...”

மரக்கிளையின் நுனியில் நின்று கொண்டு, வயிற்றால் ‘படிக்கட்டு ஏணி’யில் படுத்துக் கிடக்கும் யசுயாகி-சானை, டோட்டோ-சான் மரத்தை நோக்கி இழுப்பதை, யாராவது பெரியவர்கள் பார்த்திருந்தால் கூச்சலிட்டிருப்பார்கள். அது அவ்வளவு பயங்கர ஆபத்தானதாய் இருந்தது.

ஆனால் யசுயாகி-சான் டோட்டோ-சானை முழுமையாய் நம்பினான். டோட்டோ-சானும் அவனுக்காக தனது உயிரையே பணயம் வைத்தாள். தனது குட்டிக் கைகளால் அவனது கரங்களை பிடித்துத் தனது அத்தனை சக்தியையும் திரட்டி அவனை இழுத்தாள்... இடைவெளி விட்டு, இடைவெளி விட்டு பெரிய மேகக் கூட்டங்கள் அவர்களைச் சூடு



பிளக்கும் சூரியனிலிருந்து கருணையுடன் காப்பாற்றின.

கடைசியாய் அவர்கள் மரத்தில் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தவாறு நின்று கொண்டிருந்தார்கள். வியர்வையால், நனைந்த தனது தலைமுடியை பின்னால் கோதிவிட்டுக் கொண்டே, மிகவும் பணிவுடன் தலை வணங்கி, "என் மரத்திற்கான உன் வரவு, நல்வரவாகுக" என டோட்டோ-சான் வரவேற்றாள்.

யசுயாகி-சான் மரத்தில் வெட்கத்துடன் சாய்ந்து கொண்டு சிரித்தான். பிறகு சொன்னான், "நான் உள்ளே வரலாமா?" என்று.

யசுயாகி-சானால் தான் இதற்கு முன்னால் கண்டிருக்க முடியாத காட்சிகளை எல்லாம் காண முடிந்தது. "இதனால்தான் அப்படி மரத்தில் ஏற வேண்டுமென எல்லோரும் விரும்புகிறார்கள்!" அவன் சந்தோஷமாய் சொன்னான்.

அவர்கள் மரத்து மேலேயே ரொம்ப நேரம் தங்கியிருந்து எல்லா விஷயங்களைப் பற்றியும் பேசினார்கள்.

"அமெரிக்காவிலுள்ள எனது அக்கா, 'டெலிவிஷன்' எனச் சொல்லப் படும் ஒன்றை வைத்திருப்பதாக சொல்கிறாள்" என்று உற்சாகத்துடன் சொன்னான். "அது ஜப்பானுக்கும் வந்து விட்டால், வீட்டில் உட்கார்ந்த படியே நாம் 'சுமோ மல்யுத்தத்தை' பார்க்கலாம் என அவள் சொல்கிறாள். அது ஒரு பெட்டி போல் இருக்குமாம்."

வெகு தூரத்திற்கு, வெளியே போக முடியாத யசுயாகி-சானுக்கு வீட்டில் இருந்தபடியே எல்லா வகையான விஷயங்களையும் கவனிக்க முடியுமானால், அது எவ்வளவு வசதியாக இருக்கும் என்பதை அப்போது டோட்டோ-சானால் புரிந்து கொள்ள முடியவில்லை.

டோட்டோ-சானுக்கு எப்படி சுமோ மல்யுத்த வீரர்கள், நமது வீட்டிலுள்ள பெட்டிக்குள் வரமுடியும் என்பது ஆச்சரியமாய் இருந்தது. அதுவும் சுமோ மல்யுத்த வீரர்கள் ரொம்ப தண்டியாய் இருப்பார்கள்! எல்லாமே ஒரே மாதிரி ஆச்சரியமாய் இருந்தது. அந்தக் காலத்தில் யாருக்கும் டெலிவிஷனைப் பற்றி தெரியாது. யசுயாகி-சான்தான் டோட்டோ-சானுக்கு முதலில் டெலிவிஷனைப் பற்றி சொன்னான்.

சில் வண்டுகள் இசைக்கத் தொடங்கின. அந்தக் குழந்தைகள் மிகவும் மகிழ்ச்சியாய் இருந்தார்கள். யசுயாகி-சானைப் பொருத்தவரை அதுதான் அவன் முதலும், கடைசியுமாய் ஒரு மரத்தில் ஏறியது.

## தைரியத்திற்கான பரீட்சை

"நாற்றமடிக்கும், சுவையாய் இருக்கும், பயங்கரமாய் இருக்கும். அது எது?"

இந்த விடுகதைக்கு அவர்களுக்கு ஏற்கெனவே பதில் தெரிந் திருந்தாலும் இதை அவர்கள் பலமுறை விடுவிப்பதற்கு சலித்ததே இல்லை. டோட்டோ-சானும் அவளது நண்ப, நண்பிகளும் இந்தப் புதிரை விடுவிக்கவோ, மற்றவர்களிடம் போடவோ சலிப்படைந்ததே இல்லை. "நாற்றமடிக்கும், பயங்கரமாய் இருக்கும். அது எது? என்ற விடுகதையை

எங்கிட்ட கேளேன்" என்று கூட அவர்கள் கெஞ்சுவார்கள்.

அதன் பதில் இதுதான், "கழிவறையிலிருந்து அவரை கலந்த பழக் கூழுடன் ரொட்டி சாப்பிடும் துர்தேவதை"

டேமோயின் தைரியப் பரீட்சை நடந்து முடிந்த விதமும், இப்படி ஒரு விடுகதையை உருவாக்கி விட்டது.

"சிராய்த்துவிட்டாலும், உங்களை சிரிக்க வைக்கும். அந்த பயங்கரமானது எது?"

அவர்கள் அசெம்பிளி ஹாலில் கூடாரம் அமைத்துத் தங்கிய அன்று, தலைமையாசிரியர் "நாம் குகோன்புட்சு கோயிலில் ஒரு இரவு 'தைரியப் பரீட்சை' நடத்தப் போகிறோம். யாரெல்லாம் பேயாக விரும்புகிறீர்களோ, அவர்களெல்லாம் கையைத் தூக்குங்கள்" என்றார். கிட்டத்தட்ட ஏழு பையன்கள் தாங்கள் பேயாக பங்கெடுக்க விரும்புவதாய் தெரிவித்தார்கள். பள்ளி அந்தக் குறிப்பிட்ட நாளில் குழுமியதும், பேயாகப் போகும் பையன்கள் அதற்கான ஆடை அணிகலன்களை தாங்களே அணிந்து கொண்டு வந்து, கோயில் மைதானத்தில் மறைவதற்காக சென்று விட்டார்கள்.

"நீங்கள் சாகும் மாதிரி பயமுறுத்தப் போகிறோம்" என்று போகும் போது, அவர்கள் சூளுரைத்துச் சென்றார்கள்.

மீதமுள்ள முப்பது சொச்சம் குழந்தைகளும் தங்களுக்குள் கிட்டத்தட்ட ஐந்து பேருள்ள குழுக்களாய் பிரிந்து கொண்டார்கள். பேய்கள் குகோன்புட்சுவில் அடுக்கடுக்கான இடைவெளியில் நிறுத்தப்பட்டார்கள். குழந்தைகள் கோயில் மைதானத்தைச் சுற்றியும், மயானத்திற்குச் சென்றும், பேய்களைக் கண்டு பயப்படாமல் பள்ளிக்குத் திரும்ப வேண்டும்.

இது அவர்கள் எவ்வளவு தூரம் தைரியமாய் இருக்கிறார்கள் என்பதைப் பரீட்சிப்பதற்குத்தான் என்றாலும், யாராவது முழு சுற்றையும் முடிக்காமல் திரும்பி விட்டாலும் அதிலும் தவறு ஒன்றுமில்லை என்று தலைமையாசிரியர் விளக்கியிருந்தார். டோட்டோ-சான் அம்மாவிடமிருந்து இரவலுக்கு ஒரு கை விளக்கு வாங்கி வந்திருந்தாள்.

"பயந்து தோற்று விடாதே." அம்மா சொல்லியிருந்தாள்.

சில பையன்கள் தாங்கள் பேயைப் பிடித்துவிடப் போவதாகவும், அதற்காகத் தாங்கள் வண்ணத்துப் பூச்சி பிடிக்கும் வலையை வாங்கி வந்துள்ளதாகவும் கூறினார்கள். வேறு சிலர் தாங்கள் கயிறைக் கொண்டு வந்துள்ளதாகவும், அதில் பேய்களைக் கட்டிவிடப் போவதாயும் கூறினார்கள்.

அவர்கள் என்ன செய்யவேண்டும் என்பதைத் தலைமையாசிரியர் விளக்குவதற்குள்ளும், "கல் காகிதம், கத்திரிக்கோல்" என்று மாற்றி மாற்றிச் சொல்லும் விளையாட்டின் மூலம் குழுக்களை அமைப்பதற்குள்ளும் இருட்டி விட்டது. ஆர்வத்துடன் கூச்சலிட, முதல் குழு பள்ளி கேட்டில் விடப்பட்டது. இப்படியே டோட்டோ-சானின் குழு போவதற்கான நேரமும் வந்து விட்டது.

தலைமையாசிரியர் குகோன்புட்சு கோயிலை அடையும்வரை எந்தப் பேயும் வராது என சொல்லியிருந்தார். இருந்தாலும் குழந்தைகள் அதை

முழுமையாக நம்பவில்லை. அவர்கள் கோயில் வாசலை அடையும் வரை பயத்துடனேயே முன்னேறிக் கொண்டிருந்தார்கள். கோயில் காவலர்கள் தேவா அரசர்களை, வாசலை அடைந்ததும் காண முடிந்தது. நிலா இல்லாததால், கோயில் மைதானம் ரொம்பவும் இருண்டு கிடந்தது. அன்றைக்கு மைதானம் மிகவும் மனோகரமாயும், பரந்தும் கிடந்தது என்றாலும், எப்போது ஒரு பேயைச் சந்திக்கப் போகிறோமோ என்ற பயத்தைத் தாங்க முடியாமல் குழந்தைகள் துடித்தார்கள். "ஈய்ய்ய்" மரம் காற்றில் சலசலத்தாலும் சிலர் ஊளையிடுவார்கள். யாருடைய காலாவது எதையாவது மென்மையானதைத் தொட்டதும், "இதோ பேய்" என சப்தமிடுவார்கள் சிலர். கடைசியாய் தங்கள் கையை நண்பர்கள் பிடித்திருந்தாலும் 'பேய்' மாதிரி தோன்றும். டோட்டோ-சான் மயான வழியாக மட்டும் போகக் கூடாது என மனதைத் தேற்றிக் கொண்டாள். ஏனென்றால் அங்குதான் 'பேய்'கள் காத்துக் கொண்டு இருக்கும். 'தைரியப்பரீட்சை குறித்து எல்லாமே தெரிந்துவிட்டது. இது போதும் என்று திரும்பி விட வேண்டியதுதான்' என அவள் நினைத்தாள். அந்தக் குழுவிலுள்ள மற்றவர்களும் அதே நேரத்தில் அதே முடிவைத்தான் எடுத்திருந்தார்கள். இருந்தாலும் அப்படி முடிவு எடுத்தது தாங்கள் ஒருவர் மட்டுமாய் இருந்து விடக்கூடாது என்பதை மறுபடியும் அவர்கள் உறுதிப்படுத்திக் கொள்ள நினைத்தார்கள். கடைசியாக அனைவரும், அவர்கள் கால்கள் அவர்களை எவ்வளவு வேகத்தில் சுமந்து வருமோ, அவ்வளவு வேகத்தில் பள்ளிக்குத் திரும்பினார்கள்.

அவர்கள் பள்ளிக்குத் திரும்பியதும் அவர்களுக்கு முன்னர் கிளம்பிய அத்தனை குழுவும் திரும்பி விட்டதை அறிந்தார்கள். மயானம் வரைக்கும் போகும் தைரியம் யாருக்குமே கிட்டத்தட்ட இல்லை என்பதைத்தான் 'தைரியப் பரீட்சை' காட்டியது.

சிறிது நேரத்திற்குப் பிறகு, வெள்ளைத் துணியைத் தலையில் அணிந்த ஒரு பையன் டீச்சரின் துணையுடன் அழுதுகொண்டே கேட் வழியே வந்தான். அவன் 'பேய்'களில் ஒருவன். அவன் முழுவதும் மயானத்திலேயே பதுங்கிக் கிடந்திருக்கிறான். ஆனால் அங்கு யாருமே வரவில்லை. அதனால் அவனைக் கொஞ்சம் கொஞ்சமாய் பயம்பிடித்துக் கொண்டது. அவன் வெளியே வந்து விட்டான். அவன் தெருவில் அழுது கொண்டிருப்பதைக் கண்டுபிடித்த மேற்பார்வையிடும் டீச்சர், அவனைத் திருப்பி பள்ளிக்கு அழைத்து வந்தார். அவனை எல்லோரும் சமாதானப் படுத்த முயன்று கொண்டிருந்தபோது, அழுது கொண்டிருக்கும் ஒரு பையனுடன் இன்னொரு பேயும் அழுது கொண்டு வந்தது. அந்தப் பேயாக இருந்தவன் மயானத்தில்தான் மறைந்திருக்கிறான். யாரோ அங்கு வருவதை உணர்ந்ததும், பயமுறுத்துவதற்காக, அவன் தாவிக் குதித் திருந்தான். அப்போது இருவருடைய தலையும் நேரடியாக மோதிக் கொண்டது. காயமடைந்ததுடன், இறந்து போனதாகவே பயந்துபோய், இருவரும் ஒன்றாகவே திரும்பி ஓடி வந்திருக்கிறார்கள். அது மிகவும் வேடிக்கையாக இருந்தது. இவ்வளவு பயந்துபோன பிறகும் அவர்கள் திரும்பி வந்து விட்டார்கள் என்பது பெரிய நிம்மதியாய் இருந்தது.

குழந்தைகள் தங்கள் தலைகள் குலுங்கச் சிரித்தார்கள். பேய்களும் ஒரே சமயத்தில் சிரிக்கவும் அழவும் செய்தன. சீக்கிரமே மிகிடா என்ற துணைப் பெயரைக் கொண்ட டோட்டோ-சானின் பள்ளித்தோழன் திரும்பி வந்தான். செய்தித்தாளினால் செய்யப்பட்ட பேய் ஆடையை அணிந்திருந்த அவன் மயானத்திற்கு யாருமே வரவில்லை என்று கோபமாய் இருந்தான்.

கைகளிலும், கால்களிலும் சொறிந்ததில் ஏற்பட்ட சிராய்ப்புகளைக் காண்பித்து, "நான் இவ்வளவு நேரமும் அங்கேயே 'அம்போ'ன்னு காத்துக் கொண்டிருந்தேன்" என புகார் செய்தான்.

"ஒரு பேய் கொசுக்களினால் கடிக்கப்பட்டு விட்டது" என்று யாரோ சொன்னதும், மறுபடியும் யாவரும் சிரிக்க ஆரம்பித்தார்கள்.

ஐந்தாவது கிரேடு ஹோம் ரூம் டீச்சர் திரு. மருயாமா "சரி, இனி இது போதும். இனிமேல் போய் மீதியுள்ள பேய்களையும் அழைத்து வந்து விடுவோம்" என்று சொல்லி அதற்கு ஆயத்தமானார். அவர் பேய்களை வளைத்துப் பிடித்தார். சில பேய்கள் தெரு வெளிச்சத்தில் தடுமாறி நின்று கொண்டிருந்தன. சில பேய்கள் ரொம்பவும் பயந்து போய் வீட்டிற்கே போய்விட்டன. கடைசியில் அவர் எல்லோரையும் பள்ளிக்கு அழைத்து வந்தார்.

அந்த இரவுக்குப் பிறகு, டோமோயி மாணவ, மாணவிகள் பேய்களுக்கு எப்போதுமே பயப்படுவது இல்லை. ஏனென்றால் பேய்கள் கூட, பயப்படத்தானே செய்கின்றன.

## ஒத்திகை மண்டபம்

டோட்டோ-சான் அமைதியாக நடந்தாள். ராக்கி கூட அவ்வப்போது டோட்டோ-சானைப் பார்த்துக் கொண்டே அமைதியாக நடந்தது. அதற்கு ஒரே அர்த்தம்தான் இருக்கமுடியும். அவர்கள் இருவரும் அப்பாவின் ஒத்திகை மண்டபத்தை உற்றுப் பார்க்கப் போகிறார்கள். சாதாரணமாய் டோட்டோ-சான் தன்னால் எவ்வளவு முடியுமோ அவ்வளவு வேகமாய் ஓடுவாள். அல்லது கீழே போட்ட எதையாவது தேடிக் கொண்டே போகிற மாதிரி செல்வாள். அல்லது அடுத்தவர் தோட்டத்து வேலிக்குள் தரையோடு படுத்து, புகுந்து கொண்டிருப்பாள்.

அப்பாவின் ஒத்திகை மண்டபத்திற்கு வீட்டிலிருந்து நடந்து போக ஐந்து நிமிடம் ஆகும். அப்பா ஒரு இசைக் குழுவின் ஒத்திசையமைப் பாளராய் (Concert-master) இருக்கிறார் என்பதற்குப் பொருளே, அவர் வயலின் வாசிப்பார் என்பதுதான். ஒரு முறை அவள் ஒரு இசை நிகழ்ச்சிக்கு அழைத்துச் செல்லப்பட்டாள். அப்போது மக்கள் யாவரும் கைதட்டி முடித்ததும், வியர்த்துக் கொட்டும் இசை நிகழ்ச்சி நடத்துனர் ரசிகர்களை நோக்கித் திரும்பி, தனது சிறு மேடையிலிருந்து இறங்கி, வயலின் வாசிக்கும் அப்பாவிடம் சென்று கை கொடுத்தார். அது ஏன் என்று புரியாமல் டோட்டோ-சான் தவித்தாள். தொடர்ந்து இசைக்குழுவில் உள்ள மற்றவர்களும் எழுந்து நின்றார்கள்.

"ஏன் அவர் கை கொடுக்கிறார்?" டோட்டோ-சான் முணு

முணுத்தாள்.

"நடத்துனர், இசைக்குழுவினர் நன்றாக இசைத்தமைக்காக அவர்களுக்கு நன்றி சொல்ல விரும்புகிறார். அதனால் இசைக்குழுவின் பிரதிநிதியான அப்பாவிற்கு நன்றி சொல்லும் முகமாய் கை குலுக்குகிறார்" என அம்மா விளக்கினாள்.

டோட்டோ-சான் ஒத்திகை மண்டபத்திற்கு வர விரும்புவதற்கான காரணமே, பள்ளியைப் போல் இல்லாமல் அனைவரும் எல்லா வகையான வாத்தியக் கருவிகளையும் இங்கு இசைப்பார்கள். மேலும் திரு. ரோசன்ஸ்டாக் என்ற இசை நடத்துனர் வேடிக்கையாக ஜப்பானிய மொழியைப் பேசுவார் என்பதுவும் இன்னொரு காரணம்.

அப்பா அவளிடம், ஜோசப் ரோசன்ஸ்டாக் ஐரோப்பாவின் புகழ் வாய்ந்த இசை நடத்துனர் எனவும், ஆனால் ஹிட்லர் என்பவர் ஜெர்மனியில் மோசமான வேலைகள் செய்ய ஆரம்பித்ததால், அவர் அங்கிருந்து தப்பித்து ஜப்பான் வந்து, இங்கு இசையமைத்துக் கொண்டிருக்கிறார் எனவும் சொல்லியிருந்தார். அப்பா ரோசன்ஸ்டாக்கினால் தான் மிகவும் கவரப்பட்டதாய் சொன்னார். டோட்டோ-சானுக்கு அப்போதைய உலக நிலமை புரியவில்லை. அப்போதுதான் ஹிட்லர் யூதர்களைத் துன்பப்படுத்த ஆரம்பித்திருந்தான். இது மட்டும் நடந்திராவிட்டால், ரோசன்ஸ்டாக் ஜப்பானுக்கு வந்திருக்கவே மாட்டார். இசையமைப்பாளர் கோஸ்காக் யமாடாவினால் நிறுவப்பட்ட இந்த இசைக்குழு, உலகத்தரம் வாய்ந்த இந்த இசை நடத்துனரின் முயற்சி மட்டும் இல்லாது போயிருந்தால், இந்தக் குறுகிய காலத்தில் எட்டியுள்ள முன்னேற்றத்தைக் கண்டிப்பாகச் சாதித்திருக்காது. ரோசன் ஸ்டாக் ஐரோப்பாவிலுள்ள முதல் தரமான இசைக்குழுவின் தரத்திற்கு நிகராக



இந்த இசைக்குழுவும் ஈடு தர வேண்டுமென கேட்டுக் கொண்டார். அநேகமாக ஒத்திகையின் முடிவில் ரோசன்ஸ்டாக் அழுதேவிடுவார்.

"நான் எவ்வளவு கஷ்டப்பட்டு முயற்சி செய்கிறேன். நீங்கள் ஈடு கொடுத்து வேலை செய்ய மறுக்கிறீர்கள்"

ஹீடியா செயிடோ செலோ இசையமைப்பாளர்- இவர்தான் ரோசன்ஸ்டாக் ஓய்வெடுக்கும் போது இசை நடத்துனராய் இருப்பார். நல்ல ஜெர்மனியில் பேசி, எல்லோருக்குமாய் அவரே பதிலளிப்பார். "நாங்கள் எங்களால் முடிந்த அளவிற்கு நன்றாகத்தான் செய்கிறோம். ஆனால் எங்கள் நிபுணத்துவம் இன்னும் போதுமான அளவிற்கு வளர வில்லை. எங்களது தோல்வி வேண்டுமென்று செய்தது இல்லை என்று மட்டும் உங்களுக்கு நான் உறுதி கூற முடியும்"

இப்படித்தான் குழப்பமான நிலையில் இருந்து தப்பித்துக் கொள்வார்கள். ஆனால் சில நேரங்களில் ரோசன்ஸ்டாக் முகமெல்லாம் சிவந்து, தலையிலிருந்து நீராவி வருகிறதோ என்று சந்தேகப்படுமளவிற்கு, கோபத்தில் இருப்பார். அப்போது அவர் ஜெர்மனியில் கத்த ஆரம்பித்து விடுவார். அந்த மாதிரி சமயங்களில், மோவாய்க் கட்டையில் கைவைத்து, தனது வழக்கமான ஜன்னல் வழியாகக் கவனித்துக் கொண்டிருக்கும் டோட்டோ-சான், மெல்ல விலகி, ராக்கியுடன் தரையில் பதுங்கிக் கொள்வாள். மறுபடியும் இசை ஆரம்பிக்கும்வரை, மூச்சுவிடக்கூடத் துணிவின்றி அப்படியே காத்திருப்பாள்.

ஆனால் சாதாரணமாய் ரோசன்ஸ்டாக் மிகவும் நளினமானவர். அவரது ஜப்பானிய மொழி மிகவும் வேடிக்கையாய் இருக்கும்.

அவர்கள் நன்றாக இசையமைத்தால், வேடிக்கையான உச்சரிப்பில் "மிகவும் நன்றாக இருந்தது குரோயனாகி-சேன்" என்று சொல்லுவார். இல்லையென்றால் "அதிசயிக்கத்தக்க மாதிரி உள்ளது" என்று போற்றுவார்.

டோட்டோ-சான் ஒத்திகை மண்டபத்திற்குள்ளே சென்றதே இல்லை. அவள் ஜன்னல் வழியே உற்று நோக்கி, இசையைக் கவனிப்பதையே மிகவும் விரும்பினாள். எப்போதாவது அவர்கள் இடைவேளை விட்டு, புகை பிடிப்பதற்காக வெளியே வரும்போது, அப்பா அடிக்கடி அவளை அங்குதான் காண்பார்.

"ஓ... இங்கேயா இருக்கிறாய் டாட்ஸ்கி?" என்று அப்பா கேட்பார்.

திரு.ரோசன்ஸ்டாக் அவளைக் கண்டுபிடித்தால், அவளிடம் "காலை வணக்கம்" என்றோ "நல்ல நாளாய் இருக்கட்டும்" என்றோ சொல்வார். இப்போது டோட்டோ-சான் பெரியவளாகி விட்டாள். ஆனாலும், இப்போதும் அவர் அவள் சின்னப் பெண்ணாய் இருக்கும்போது செய்தது போலவே, அவளை அணைத்து அவளது கன்னத்தோடு தனது கன்னத்



கிங்-யோ கிங்-யோ

தையும் ஒருங்கே வைப்பார். அது அவளைச் சிறிது கலவரப்படுத்தினாலும், அவள் ரோசன்ஸ்டாக்கை மிகவும் விரும்பினாள். அவர் சன்னமான வெள்ளி விளிம்புடன் கூடிய 'கண்ணாடியை அணிவார். அவரது மூக்கு பெரியதாய் இருக்கும். அவரை அதிக உயரம் என்று சொல்ல முடியாது. இருந்தாலும் பார்த்தவுடன் இவர் ஒரு கலைஞர்தான் என புரிந்து கொள்ளும் அளவிற்கு அழகான முகத்தைப் பெற்றிருந்தார்.

டோட்டோ-சானுக்கு அந்த ஒத்திகை மண்டபம் மிகவும் பிடித்திருந்தது. அது கொஞ்சம் பழசாகியிருந்தாலும், மேற்கத்திய பாணியில் தான் இருந்தது.

சென்சோகு குளத்தில் இருந்து வீசும் காற்று, இசையின் நாதத்தை ஒத்திகை மண்டபத்திற்கும் வெகு தூரத்திற்கு இட்டுச் சென்றது. சில நேரங்களில் தங்க மீன் (கிங்யோ) விற்பவரின் சத்தமும் இசையுடன் கலந்து இனிய நாதத்தை எங்கும் ஒலிக்கச் செய்தது.

## வெந்நீர் ஊற்றுக்கு ஒரு பயணம்

கோடை விடுமுறை முடிவுக்கு வந்தது. கடைசியாக வெந்நீர் ஊற்றுப் பிரதேசத்திற்கு போவதற்கான நாளும் வந்தது. டோமோயின் முக்கிய நிகழ்ச்சி இந்தப் பயணம்தான் என அதன் மாணவ, மாணவிகள் கணித்தார்கள். பல விஷயங்கள் வழக்கமாய் போனதால் அம்மாவை ஆச்சரியப்பட வைக்கவில்லையென்றாலும், டோட்டோ-சான் ஒருநாள் பள்ளியிலிருந்து வந்து "நான் வெந்நீர் ஊற்றுப் பயணத்திற்கு மற்றவர்களுடன் சேர்ந்து போகட்டுமா?" என்று கேட்டதும், அம்மா திக்பிரமையடைந்தாள். அவள் பெரியவர்கள்தான் குழுக்களாய் வெந்நீர் ஊற்றுக்கு போவார்கள் என கேள்விப்பட்டிருக்கிறாள். நிச்சயமாய் முதல் கிரேடு குழந்தைகள் போவதை அவள் கற்பனை கூட செய்ததில்லை. ஆதலால் அவள் தலைமையாசிரியர் கடிதத்தை மிகவும் கவனமாய் படித்தாள். பின்னர், அது ஒரு நல்ல யோசனைதான் என்று நினைத்ததோடு அல்லாமல், அவரது திட்டம் குறித்து அவளுக்கு அவர்மேல் நல்ல மரியாதையே நிரம்பி வழிந்தது. ஹூயுகவோகாவிலுள்ள இஜூ தீபகற்பத்தில் டோய் என்றழைக்கப்படும் இடத்திலான ஒரு "கடற்கரை படிப்பே" இந்தப் பயணம் என்றாலும் மிகையாகாது. அங்கே கடலில் ஒரு வெந்நீர் ஊற்று இருந்தது. அங்கு குழந்தைகள் நீந்தவும் செய்யலாம். வெப்பக் குளிப்பும் எடுக்கலாம். அந்தப் பயணம் மூன்று பகலும், இரண்டு இரவும் நீடித்தது. டோமோயி மாணவன் ஒருவனின் தந்தையார் அங்கேயொரு தங்கும் விடுதி வைத்திருந்தார். அதில் முதல் கிரேடு முதல் ஆறாம் கிரேடு வரையுள்ள ஐம்பது மாணவர்களும் தங்கிக் கொள்ளலாம். ஆகவே அம்மா சம்மதித்து விட்டாள்.

புறப்படுவதற்கு முன்னர் அந்தக் குறிப்பிட்ட நாளில் டோமோயி மாணவர்கள் பள்ளியில் குழுமினார்கள்.

எல்லோரும் கூடியதும் தலைமையாசிரியர் கூறினார், "இதற்குப் பிறகு நாம் ரயிலிலும், கப்பலிலும் பயணம் செய்யப் போகிறோம். நான்

உங்களில் யாரும் தொலைந்து விடுவதை விரும்பவில்லை. புரிந்ததா? சரி, நாம் போகலாம்!"

இதுதான் அவர் விடுத்த ஒரே எச்சரிக்கை. இருந்தபோதிலும் ஜியுகவோகாவில் டோக்கியோ ரயிலைப் பிடிக்கும்போது குழந்தைகள் ஆச்சரியப்படும் வகையில் ஒழுக்கமாய் நடந்தார்கள். ஒருவரும் ஓடவில்லை, காரை விட்டுக் குதிக்கவில்லை. அவர்கள் செய்தது என்னவோ தங்கள் அருகில் உட்கார்ந்தவர்களிடம் அமைதியாய் பேசிக் கொண்டது மட்டும்தான். டோமோயி மாணவ, மாணவிகள் வரிசையில் வரவேண்டு மென்றோ, ஒழுங்காக நடக்க வேண்டுமென்றோ. உணவை உண்ணும் போது அதை தரையில் சிந்தக் கூடாது என்றோ ஒரு போதும் அறிவுறுத்தப் படவில்லை. தங்களைவிட சிறியவர்களையும், பலம் குறைந்தவர்களையும் தள்ளக் கூடாது; முரட்டுத்தனமான குணம் வெட்கப்படக் கூடியது; வரும் வழியில் குப்பை கிடந்தால் எடுத்து வைத்துக் கொள்ள வேண்டும்; பிறருக்கு வெறுப்புண்டாக்கும், தொந்தரவளிக்கும் எதையும் செய்யாம லிருக்க முயற்சிப்பது போன்றவை டோமோயி குழந்தைகளுக்கு அவர்களது தினசரி பள்ளி வாழ்க்கையிலிருந்தே மனதில் பதிந்திருந்தது. இவை எல்லாவற்றையும் விட விநோதம் என்னவெனில், வகுப்பின் நடுவிலே ஜன்னல் வழியே வீதி இசைஞர்களுடன் பேசி மொத்தப் பள்ளியையே கெடுத்த டோட்டோ-சான், டோமோயில் சேர்ந்த முதல் நாளில் இருந்தே தனது மேஜையில் ஒழுங்காக அமர்ந்து, தனது பாடங்களை ஒழுங்காகச் செய்கிறாள் என்பதுதான். அவளது முந்திய பள்ளியிலுள்ள டீச்சர்களில் யாராவது ஒருவர் அவளை இப்போது பார்த்தால், அதுவும் மற்றவர்களுடன் ஒழுங்காய் ரயிலில் உட்கார்ந்து போகும் அவளைப் பார்த்தால், "இது வேறு யாரோ!" என்றுதான் சொல்லுவார்கள்.

நூமாஜுவில், அவர்கள் ஏற்கெனவே கனவு கண்டு வைத்திருந்த மாதிரியே இருந்த அந்தக் கப்பலில் ஏறினார்கள். அது ஒன்றும் பெரிய கப்பல் இல்லை. இருந்தாலும், அவர்கள் உற்சாகத்துடன், கப்பலின் மேற்தளத்திற்கு வந்து, எல்லா மூலை முடுக்குகளையும் உணர்வதற்காகவும், அதிலிருந்து தொங்குவதற்காகவும் பார்வையிட்டார்கள். கடைசியாக கப்பல் பயணத்தைத் துவங்கியதும், கப்பல் துறையிலிருந்த நகரவாசிகளுக்கு குழந்தைகள் கையாட்டினார்கள். அவர்கள் கொஞ்சம் தூரம் போவதற்குள், மழை பிடித்துக் கொண்டது. அதனால் எல்லோரும் உள்ளே செல்ல வேண்டியதாயிற்று. சீக்கிரமே கடலும் முரட்டுத்தனமாய் மாறியது. மற்ற சில பேர்களைப் போலவே, டோட்டோ-சானும் கடல் நோயில் விழுந்தாள். அப்போதுதான், பெரிய பையன்களில் ஒருவன் கப்பலின் நடுவில் நின்று கொண்டு, கப்பலை நிலை நிறுத்துபவன் போல் நடித்தான். கப்பல் ஒரு பக்கம் திரும்பினால், "ஊப்ஸ்" என்று சொல்லிக்கொண்டே மறுபக்கம் அவன் ஓடுவான். பிறகு மறுபக்கமும் 'ஊப்ஸ்' என்றவாறே ஓடுவான். அது மிகவும் வேடிக்கையாக இருந்தது. கடல் நோயினால் பாதிக்கப் பட்டிருந்தாலும் அவர்களால் சிரிப்பை அடக்க முடியவில்லை. அவர்கள் டோயிக்கு கப்பல் வரும்வரை சிரித்துக் கொண்டே இருந்தார்கள். அதில் புதுமையான விஷயம் என்னவென்றால் எல்லோரும் கப்பலை விட்டு

இறங்கியதும், முற்றிலும் குணமடைந்து நன்றாக உணரும் போது, அந்த பரிதாபத்திற்குரிய "ஊப்ஸ்" பையன் நோயுற்றான்!

டோய் ஸ்பா, காடுகள் நிறைந்த மலைகளினால் சூழப்பட்ட ஒரு கடற்கரை கிராமம். கொஞ்சம் ஓய்வு எடுத்தபின், டீச்சர் அவர்களை கடலுக்கு அழைத்துச் சென்றார். அவர்கள் பள்ளியில் உள்ள நீச்சல்குளம் மாதிரி இல்லாததால், எல்லோரும் நீச்சல் உடை அணிந்து கொண்டார்கள்.

கடலில் வெந்நீர் ஊற்று என்பது மிகவும் அபூர்வமானது . அந்த வெந்நீர் ஊற்று மூடிய (closed) ஒன்று இல்லையாதலால், வெந்நீர் ஊற்றை, கடலிலிருந்து பிரிப்பதற்காக எந்தவித கோடும் இல்லை. வெந்நீரூற்று என்று சொல்லப்படும் இடத்தில் நீங்கள் மூழ்கினால், சுடுநீர் உங்கள் கழுத்து வரைக்கும் வந்து, நீங்கள் உங்கள் வீட்டு சுடுநீர்த் தொட்டியிலிருப்பது போலவே ரம்மியமாக உணர்வீர்கள். வெந்நீர் ஊற்றிலிருந்து கடலுக்குள் செல்ல விரும்பினால், நீங்கள் செய்ய வேண்டியது என்னவோ, பதினைந்து அடி ஒரு பக்கமாய் நகரவேண்டியது தான். தண்ணீர் படிப்படியாய் குளிர்ந்து கொண்டே போகும். நீங்கள் மேலும் போகப்போக, குளிர்ச்சியை உணர்ந்தால், உங்களுக்கே தெரியும் நீங்கள் கடலில் இருக்கிறீர்கள் என்று. ஆதலால் கடலில் கொஞ்சம் நீந்திய பின்பு, நீங்கள் குளிர்ச்சியை உணர ஆரம்பித்து விடுவீர்கள். இப்போது நீங்கள் செய்ய வேண்டியது வேகமாய் வெப்ப நீரோட்டத்திற்கு வந்து கழுத்து வரைக்கும் வெதுவெதுப்பு குளியலை அனுபவிக்க வேண்டியது தான். அப்போது வீட்டில் இருப்பதுபோலவே உணர்வு இருக்கும். இது பார்ப்பதற்கு மிகவும் வேடிக்கையாய் இருக்கும். வழக்கமான கடலில் அந்த குளியல் தொப்பிகள் அணிந்த குழந்தைகள் நீந்தும்போது பார்க்க மிகவும் யதார்த்தமாய் இருக்கும். அந்தக் குழந்தைகளோ வெப்ப நீரோட்டத்தில் நீந்தி இளைப்பாறும் போது, ஒருவட்டம் அமைத்துக் கொண்டு தாங்கள் ஒரு குளியலறையில் இருப்பது போல அரட்டை அடித்துக் கொண்டிருப்பார்கள். இதை யாராவது பார்த்தால், அவர்களுக்கு, "ஏன் இந்த சிறுவர் சிறுமிகள் வெப்ப நீரோட்டத்திற்கு வந்ததும் பெரியவர்களைப் போல நடந்து கொள்கிறார்கள்?" என நினைக்கத் தோன்றும். அந்தக் காலத்தில், இப்போதைய தனியார் கடற்கரை போலவே, எல்லா கடற்கரைகளும் ஆள் அரவமற்றுக் கிடக்கும். அதனாலேயே குழந்தைகள் இந்த வழக்கத்திற்கு மாறான வெப்ப நீரோட்டக் குளியலை மிகவும் நன்றாக அனுபவித்தார்கள். எக்கச் சக்கமான நேரம் நீரிலேயே தங்கி விட்டு பின்னர் வீட்டிற்கு வருவார்கள். வரும்போது அவர்கள் விரல்களில் எல்லாம் அடுக்கடுக்காய் சுருக்கங்கள் விழுந்திருக்கும்.

ஒவ்வொரு இரவும், தங்களது மெல்லிய மெத்தைக்குள் மூடிக்கொண்டு போர்த்தியதும், குழந்தைகள் முறை வைத்துக் கொண்டு பேய்க்கதைகள் சொல்லுவார்கள். அப்போது டோட்டோ-சானும், மற்ற முதல் கிரேடு குழந்தைகளும் மிகவும் பயந்துபோய் அழுவார்கள். இருந்தாலும் கண்ணீருக்கு நடுவிலும், "அதற்குப் பிறகு என்ன?" என்று அக்கறையாய் விசாரிப்பார்கள்.

பள்ளிக்குள்ளேயே கூடாரம் அடித்துத் தங்கி விளையாடியது போலவோ தைரியப்பரீட்சை போலவோ இன்றி, டோய் ஸ்பாவில் தங்கியிருந்த அந்த மூன்று நாட்களும் உண்மையிலேயே ஒரு வாழ்க்கை அனுபவம். உதாரணத்திற்கு அவர்கள் முறை வைத்துக்கொண்டு இரவு உணவிற்கு காய்கறிகளும், மீனும் வாங்கச் செல்வார்கள். அப்போது யாராவது அவர்களை நீங்கள் எந்தப் பள்ளியில் இருந்து வருகிறீர்கள், அல்லது எந்த ஊரிலிருந்து வருகிறீர்கள் எனக் கேட்டால், மிகவும் பவ்வியமாக பதில் சொல்வார்கள். சில குழந்தைகள் பக்கத்திலுள்ள காடு களில் கிட்டத்தட்ட காணாமல் போய்விட்டார்கள். சில பேர் நீந்தித் திரும்பி வர முடியாத அளவுக்கு ரொம்ப தூரம் கடலுக்குள் போய் மற்ற வர்களை கவலைக்குள் ஆழ்த்தி விடுவார்கள். சிலர் கடற்கரை மண்ணில் புதைந்துள்ள கண்ணாடித் துண்டுகளால் காலைக் கிழித்துக் கொள்வார்கள். ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் மற்றவர்கள் பாதிக்கப்பட்டவர்களுக்கு தங்களால் இயன்ற அளவு உதவுவார்கள்.

ஆனாலும் இவை அனைத்தும் வேடிக்கையாகவே இருக்கும். அங்கு சில்வண்டுகள் நிரம்பிய காடும், 'பாப்சிகிள்ஸ்'கூட வாங்க முடிந்த கடையும் இருந்தன. அவர்கள் தானே தனக்கு ஒரு பெரிய மரப்படகை செய்து கொண்டிருந்தவனை அங்கு சந்தித்தார்கள். அவன் ஏற்கெனவே அதைப் படகாய் வடிவமைத்திருந்தான். ஒவ்வொரு காலையும் முதல் காரியமாய், கடற்கரையில் இறங்கி ஓடி இன்று எவ்வளவு தூரம் படகை செய்து முடித்திருக்கிறான் என்றுதான் குழந்தைகள் பார்ப்பார்கள். அந்த மனிதன் டோட்டோ-சானுக்கு ஒரு நீண்டு சுருண்ட மரச்செதிலைப் பரிசாய்க் கொடுத்தான்.

அவர்கள் அங்கிருந்து புறப்பட வேண்டிய அன்று தலைமையாசிரியர், "இங்கு வந்ததற்கு அடையாளமாய் ஒரு போட்டோ எடுத்தால் எப்படி இருக்கும்?" என வினவினார். அவர்கள் அனைவரும் சேர்ந்து ஒரு போட்டோகூட எடுத்தது இல்லையாதலால் குழந்தைகளுக்கு இந்தத் திட்டமே உள்ளத்தைக் கிளர்ச்சி கொள்ளச் செய்தது. ஆனால் டீச்சர் தனது காமிராவுடன் தயாரானவுடன், ஒன்று சிலர் கழிவறைக்குச் சென்றிருப்பார்கள் அல்லது சிலர் ஷூவை மாற்றுகாலில் போட்டுக் கொண்டு வந்து சரிப்படுத்திக் கொண்டிருப்பார்கள். எல்லாம் முடிந்து, கடைசியாக டீச்சர் "யாவரும் ரெடியா?" என வினவும்போது, ஒன்றிரண்டு குழந்தைகள் அதிக நேரம் புகைப்படத்திற்கு 'போஸ்' கொடுத்ததில் களைப்படைந்து தரையில் படுத்துக் கிடந்தார்கள். இப்படியாய் போட்டோ எடுத்து முடிப்பதற்குள், போதும் போதுமென்றாகி விட்டது.

குழந்தைகள் தங்கள் விருப்பப்படி 'போஸ்' கொடுத்துள்ள, கடலை பின்புறமாய் கொண்டுள்ள அந்த போட்டோ, ஒவ்வொருவருக்கும் விலை மதிப்பற்ற பொக்கிஷமாகிவிட்டது. அதை ஒருவர் பார்த்தாலே போதும், நினைவலைகள் கப்பல் பயணம், வெப்ப நீரோட்டம், பேய்க் கதைகள், 'ஊப்ஸ்' பையன் என வெள்ளமாய்ப் பாயும். டோட்டோ-சான் அந்த சந்தோஷமான கோடை விடுமுறையை எப்போதுமே மறந்ததில்லை.

ம்ம்... அதெல்லாம் ஒரு காலம்! அப்போது டோக்கியோவில் உள்ள

அவர்கள் வீட்டின் அருகிலுள்ள குளத்தில் நன்னீர் நண்டுகள் ஏராளமாய் உலவும். துப்புரவுத் தொழிலாளியின் வண்டியை பெரிய எருதுகள் இழுத்துச் செல்லும்.

## யூரித்மிக்ஸ்

ஜப்பானிய பள்ளிகள் ஏப்ரலில் துவங்குவதால், கோடை விடுமுறை முடிந்ததும், இரண்டாம் செமஸ்டர் ஆரம்பித்துவிடும். டோட்டோ-சானுக்கு, தனது வகுப்புப் பிள்ளைகளுடன் எல்லா பெரிய மாணவ மாணவிகளும் கூட நண்பர்களாகியிருந்தார்கள். கோடை விடுமுறையில் நடந்த பல சந்திப்புகள்தான் அதற்குக் காரணமாதலால் அதற்கு நன்றி தெரிவித்தாக வேண்டும். அதற்காகவே அவள் டோமோயியை மேலும் விரும்பினாள். டோமோயி வகுப்புகள் மற்ற சாதாரணப் பள்ளியை விட, பல விஷயங் களில் வித்தியாசமாக இருப்பதைப் போலவே, இசை கற்றுக் கொடுப் பதிலும் இருந்தது. அங்கு இசைக்காக நிறைய நேரம் அர்ப்பணிக்கப்பட்டது. அங்கு எல்லாவிதமான இசைப் பாடங்களும் நடத்தப்பட்டன. அதில் 'யூரித்மிக்ஸ்'காக ஒரு பீரியட் தினமும் ஒதுக்கப்பட்டிருந்தது. 'யூரித்மிக்ஸ்' ஸ்விட்சர்லாந்து ஆசிரியரும், இசையமைப்பாளருமான 'எமிலி ஜாக்குவஸ் டால்குரோஸ்' என்பவர் வடிவமைத்த ஒரு சிறப்பு வகையான தாளப் படிப்பு. அவரது இந்த கண்டுபிடிப்பு 1904ல்தான் எல்லோருக்கும் தெரிந்தது. அது விரைவில் ஐரோப்பா, அமெரிக்கா முழுவதும் நடைமுறை படுத்தப்பட்டது. எல்லா இடங்களிலும் இது சம்பந்தமான ஆய்வு மற்றும் பயிற்சி முகாம்கள் தோன்றிய வண்ணம் இருந்தன.

டோமோயி ஹாகுன் ஆரம்பிக்கும் முன், அதன் தலைமையாசிரியர் சோசாகு கோபயாஷி ஐரோப்பாவிற்குச் சென்று அங்கு எப்படி குழந்தைகள் பயிற்றுவிக்கப்படுகிறார்கள் என்பதைக் கண்டார். அவர் ஏராளமான ஆரம்பப் பள்ளிகளுக்குச் சென்று, அங்குள்ள கல்வியாளர் களிடம் பேசினார். பாரிஸில் அருமையான கல்வியாளரும், இசையமைப் பாளருமான டால்குரோஸை சந்தித்தார்.

'குழந்தைகளுக்கு எப்படி காதுகளினால் மட்டும் அல்லாமல் மனதினால் இசையைக் கேட்பது, உணர்வது என்பதை பயிற்றுவிப்பது; குழந்தைகளை எப்படி இசை என்பது சுவராசியமற்ற, உயிரற்ற விஷயம் என்பதற்கு பதிலாக அது ஒரு இயக்கம் என்பதை உணரவைப்பது; குழந்தைகளின் நுண்ணுணர்வுகளை எப்படித் தட்டியெழுப்புவது' என்பது குறித்து டால்குரோஸ் நிறைய காலம் ஆராய்ந்திருந்தார்.

குழந்தைகள் குதிப்பது, ஓடுவது, கும்மாளமிடுவது ஆகியவற்றைப் பல காலம் அவதானித்த டால்குரோஸ், முடிவாய் ஒரு தாள உடற்பயிற்சியை படைக்கும் திட்டத்திற்கு வந்தார். அந்தத் தாள உடற்பயிற்சிதான் 'யூரித்மிக்ஸ்'

கோபயாஷி பாரிஸில் டால்குரோஸ் பள்ளியில் ஒரு வருட காலம் பயின்று, டால்குரோஸின் முறையில் முழுவதுமாய் தேர்ந்தார். இசையமைப்பாளர் ஹோஸ்காக் யமாதா, நவீன ஜப்பானிய நடனத்தின் ஆதிகர்த்தா பாகு இஷி, காபூகி நடிகர் இக்சிகாவா சதன்ஜி II, நவீன

நாடக முன்னோடி ஹஷ்ரு ஒசானி, நடனமணி மிகியோ இடோ போன்ற பல ஜப்பானியர்கள் டால்குரோஸினால் ஈர்க்கப்பட்டார்கள். இவர்கள் அனைவரும் பலவிதமான கலைகளுக்கு டால்குரோஸின் படிப் பினைகள்தான் அடிப்படை என நம்பினார்கள். ஆனால் சோசாகு கோபயாஷிதான் இதை ஜப்பானிய ஆரம்பப் பள்ளிகளிலேயே நடை முறைப்படுத்திய முதல் மனிதர்.

அவரிடம் யூரித்மிக்ஸ் என்றால் என்ன என்று கேட்டால், அவர் பதிலளிப்பார், "இது உடல் இயக்கத்தை மெருகூட்டும் ஒரு விளையாட்டு, நமது உடலை எப்படிப் பயன்படுத்துவது, எப்படிக் கட்டுக்குள் வைத்துக் கொள்வது என்பதை மனதுக்குக் கற்றுக் கொடுக்கிறது. இந்த விளையாட்டு மனதிற்கும் உடலுக்கும் தாளத்தைப் புரிந்துகொள்ள வகை செய்கிறது. யூரித்மிக்ஸை பயிற்சி செய்வது, தனித்தன்மையைப் பாங்குடன் மிளிரச் செய்கிறது. பாங்குடன் மிளிரும் தனித்தன்மை, இயற்கையின் விதிகளுடன் ஒத்துப்போகக் கூடிய, இயைந்து செயலாற்றக் கூடிய அளவுக்கு அழகானது, உறுதியானது" டோட்டோ-சானின் வகுப்புகள், தாளத்தை உடல் புரிந்து கொள்ளச் செய்வதற்கான பயிற்சியுடன் ஆரம்பித்தன. தலைமையாசிரியர் அசெம்பிளி ஹாலில் உள்ள சிறிய மேடையில் பியானோ வாசிக்க ஆரம்பிப்பார். குழந்தைகள் எங்கிருந்தாலும் இசைக்கு இயைந்தவாறு நடக்க ஆரம்பிப்பார்கள். அவர்கள் எந்த மாதிரி தாங்கள் நடக்க விரும்பு கிறார்களோ அப்படி நடக்கலாம். ஆனால் மற்றவர்கள் மேல் மோதிக் கொள்ளாமல், தாங்கள் விரும்புகிற மாதிரி நடக்கலாம். அதனாலேயே அவர்கள் அதே வட்ட திசையிலேயே சுற்றி நடக்க வேண்டியிருந்தது. அவர்கள் இது இரண்டு-தட்டு நேர (two-beat time) இசை எனக் கருதினால், ஒரு இசையமைப்பாளர் நடக்கும்போது கையை அசைப்பது போல, மேலும் கீழும் தங்களது கைகளை அலை போல் அசைப்பார்கள். கால்களைப் பொருத்த வரை மிகவும் அழுத்தி நடக்கக் கூடாது. இதற்கு அர்த்தம் பாலே நடனத்தில் உள்ளது போல நுனிவிரலால் நடக்க வேண்டும் என்பதல்ல. தாங்கள் மிகவும் இறுக்கமின்றி இருக்கும் போது எப்படி முன்னங் கால்களைப் பதித்து நடப்பார்களோ, அப்படி நடந்தால் போதும் என குழந்தைகள் அறிவுறுத்தப்பட்டிருந்தார்கள். இதில் முக்கியமான அம்சமே இயல்பாய் இருத்தல்தான். அதனால் அவர்கள் எது சரியென உணர்கிறார்களோ அப்படியே நடக்கலாம். தாளம் மூன்று தட்டு நேரத்திற்கு மாறினால், அவர்கள் கரங்களை அதற்குத் தகுந்தாற் போல் ஆட்ட வேண்டும். இசையின் போக்கிற்குத் தகுந்தாற் போல் தங்கள் வேகத்தை சரி செய்துகொண்டு, மெதுவாகவோ வேகமாகவோ நடக்க வேண்டும். அவர்கள் தங்கள் கரங்களை ஆறு-தட்டு நேர தாளம் வரைக்கும் தகுந்தாற்போல உயர்த்தவோ தாழ்த்தவோ கற்றிருக்க வேண்டும்.

நான்கு-தட்டு நேர தாளம் மிகவும் எளிது—
"தாழ்த்து, உன்னைச் சுற்றி, பக்கவாட்டில் உயர்த்து"
அதுவே-ஐந்து-தட்டு நேர த்தாளமானால், இப்படி-
"தாழ்த்து, உன்னைச் சுற்றி, முன்னே, பக்கங்களில்,
பின்னர் உயர்த்து"

இதுவே ஆறு-தட்டு நேர தாளமானால், கரங்கள் போக வேண்டியமுறை-

"தாழ்த்து உன்னைச் சுற்றி, முன்னே உன்னைச் சுற்றி மறுபடியும்,
பக்கங்களில், மறுபடியும் உயர்த்து"

ஆகவே தாளத்தட்டுகள் மாறிக்கொண்டே போகையில் அது மிகவும் கஷ்டமாய் இருக்கும். தலைமையாசிரியர் "நான் பியானோவின் போக்கை மாற்றினாலும், நான் சொல்லும் வரைக்கும் நடனப் போக்கை நீங்கள் மாற்றக் கூடாது" என்று சொல்லி விட்டால், எல்லாம் இன்னும் கடினமாகி விடும்.

உதாரணத்திற்குக் குழந்தைகள் இரண்டு-தட்டு நேரத்திற்கு தகுந்தாற் போல் நடந்து கொண்டிருக்கிறார்கள். அப்போது இசை மூன்று-தட்டு நேரத்திற்கு மாறி விடுகிறது. இருந்தாலும் மூன்று-தட்டு நேர தாளத்தைக் கேட்டுக் கொண்டே, இரண்டு-தட்டு நேரத்திற்கான முறையில் நடக்க வேண்டும். இது மிகவும் கடினம் என்றாலும் தலைமையாசிரியர் இது குழந்தைகளின் மனக்குவிப்புத் திறனை வளர்க்கிறது என்பார்.

கடைசியாக அவர் கத்துவார், "நீங்கள் இப்போது மாற்றலாம்..."

முழு நிதானத்துடன், குழந்தைகள் மூன்று-தட்டு நேர நடைக்கு உடனடியாகத் தாவுவார்கள். ஆனால் இதுதான் மிகவும் சர்வ ஜாக்கிரதையாக இருக்க வேண்டிய தருணம். இரண்டு-தட்டு நேர நடையிலிருந்து விடுபட்டு, மூன்று தட்டு நேர நடைக்குப் போகுமாறு மூளை தசைகளுக்கு எல்லா செய்திகளையும் அனுப்பும் போது, இசை ஐந்து-தட்டு நேரத்திற்கு மாறும்! கைகளும், கால்களும் ஸ்தம்பித்து, "ஐயோ சார்... கொஞ்சம் பொறுங்கள்... பொறுங்கள்!" என்று கூடக் கத்தியிருக்கிறார்கள். ஆனால் தொடர்ந்த பயிற்சியின் விளைவாய், இந்த மாதிரியான மாறுதல்கள் செய்வதை மகிழ்ச்சி தரக்கூடியதாய் உணர்ந்தார்கள். குழந்தைகள் இப்படி அடிக்கடி மாறுதல் வராதா என ஏங்கிக் கொண்டு, இதைத் தங்களுக்குள் அனுபவித்தார்கள். சாதாரணமாய் எல்லா குழந்தைகளும் தனியாகத்தான் நடக்க வேண்டும். ஆனால் சில நேரங்களில் இருவர் சேர்ந்து நடப்பார்கள். அப்போது இரண்டு-தட்டு நேர இசைக்குத் தகுந்தாற் போல் கைகளை இருவரும் பிடித்துக்கொண்டு நடக்க வேண்டும். அல்லது இருவரும் கண்ணை மூடிக்கொண்டு ஒருங்கே நடக்க வேண்டும். அங்கு தடை செய்யப்பட்ட ஒரு விஷயம்—கலந்துரையாடும் போது ஏற்படும் 'லொட, லொட' பேச்சுதான்...

பெற்றோர்-ஆசிரியர் கூட்டமைப்பின் சார்பாய் ஏதாவது கூட்டம் நடக்கும் போது சில நேரங்களில் அம்மாக்கள் இதை ஜன்னல் வழியாய் கூர்ந்து கவனிப்பார்கள். ஒவ்வொரு குழந்தையும் கையையும் காலையும் மிகவும் இயல்பாய் ஆட்டிக்கொண்டு, இசைக்கு ஏற்றாற்போல் மிகச் சரியாய், சந்தோஷமாய் குதியாட்டம் போடுவதைப் பார்ப்பதே ஒரு தனி அழகு.

இப்படியாக யூரித்மிக்ஸின் நோக்கமே, மனதும் உடலும் தாளத்தை உணர்வதற்குப் பயிற்சியளிப்பதுவும், அதன் மூலம் உணர்வுக்கும் சதைக்கும் இடையே ஒருங்கமைப்பை ஏற்படுத்துவதும், கடைசியாக கற்பனா சக்தியை



தட்டியெழுப்பி, படைப்பாற்றலை வளர்த்தெடுப்பதுவுமே ஆகும்.

டோட்டோ-சான் பள்ளிக்கு வந்த முதல் நாளே 'கேட்'டில் உள்ள பெயரைப் பார்த்து அம்மாவைக் கேட்டாள், "டோமோயி என்றால் என்ன?" என்று. டோமோயி என்பது புராதன காற்புள்ளி (comma) வடிவக் குறியீடு. ஆகவேதான் தலைமையாசிரியர் தனது பள்ளிக்கு இரண்டு டோமோயிக்களினால்— ஒன்று கருப்பு, மற்றொன்று வெள்ளை— இணைக்கப்பட்டு ஏற்படுத்தப்பட்ட முழுவட்ட வடிவமான பாரம்பரிய சின்னத்தைத் தழுவிக் கொண்டார்.

இந்த மேற்கண்ட குறியீடு அவரது குழந்தைகளுக்கான குறிக்கோளை சரியாய்க் காட்டியது. உடலும், மனதும் மிகத் துல்லியமாய் ஒருங்கிணைக்கப்பட்டு வளர்க்கப்பட வேண்டும். இரண்டு டோமோயிகள் இணைந்து வட்டம் உருவாவது போல...

தலைமையாசிரியர் யூரித்மிக்ஸை பள்ளிப் பாடத்திட்டத்தில் இணைத்தார். ஏனெனில் அது அதிகப்படியாக பெரியோர்களின் தலையீடு இல்லாமல் குழந்தைகள் தங்கள் தனித்தன்மையை இயற்கையாகவே வளர்த்துக் கொள்ள முடிகிறது என்பதால். தலைமையாசிரியர், அது நல்ல விளைவுகளை, குழந்தைகளிடம் ஏற்படுத்தும் என நம்பினார்...

தலைமையாசிரியர், தனது சமகாலத்து பள்ளிப்படிப்பு, புத்தகத்தில் எழுதியுள்ளதை அப்படியே படிப்பதற்கு அதிகப்படியான அழுத்தம் கொடுத்து; குழந்தைகளின் இயற்கை குறித்த புலன் புலப்பாட்டையும், கடவுளை விட மிகச் சன்னமான குரலையும் உள்ளுணர்வால் உணரக்கூடிய

தன்மையையும் வீணடித்து அவர்களது ஊக்கசக்தியைக் கெடுத்து குட்டிச் சுவராக்கி விடுகிறது என வருந்தினார்.

கவிஞர் பாஸ்ஹோ இப்படி எழுதுகிறார்:

கவனி! ஒரு தவளை
புராதான குளத்து
அமைதிக்குள் பாய்ந்தது!

குளத்துக்குள் தவளை பாய்வதை எத்தனையோ பேர்தான் பார்த்திருக்கிறார்கள்– உலகம் தோன்றியது முதல். இந்த உலகத்தில் 'வாட்' மட்டும்தான் கொதிக்கும் குவளையிலிருந்து நீராவி போவதைப் பார்த்தார், 'நியூட்டன்' மட்டும்தான் மரத்திலிருந்து ஆப்பிள் கீழே விழுவதைப் பார்த்தார்– என்பதெல்லாம் இல்லை.

கண்கள் இருந்தும், அழகைப் பார்க்கத் தவறினால்... காதுகள் இருந்தும், இசையை கேட்கத் தவறினால்– இதயம் இருந்தும் கசியாததால், அது கனன்று கொண்டிருக்க வாய்ப்பே இல்லாமல் போய் விட்டால்... தலைமையாசிரியர் இதுதான் மிகவும் பயப்பட வேண்டிய விஷயம் எனச் சொல்வார்.

டோட்டோ-சான் வெறுங்காலுடன் இசடோரா டங்கன் மாதிரியே குதித்தும், ஓடியும் போவதில் மிகவும் சந்தோஷம் அடைந்தாள். இதுவும் பள்ளிப் பாடத்தின் ஒரு பகுதி என்பதை அவளால் நம்பவே முடியவில்லை.

## நான் விரும்பிய ஒரே ஒரு பொருள்

டோட்டோ-சான் ஒரு கோயில் விழாவிற்குப் போவது இதுதான் முதல் தடவை. அவளது பழைய பள்ளிக்கு அருகிலுள்ள சென்சோகு குளத்தின் நடுவில் ஒரு தீவு உள்ளது. அந்தத் தீவில்தான் அழகிற்கும், இசைக்கும் தேவியான பெண்டனின் புண்ணியஸ்தலம் இருந்தது. அந்த வருடாந்திர விழாவின்போது இரவில், குறைந்த அளவிற்கே ஒளியூட்டப்பட்ட தெரு வழியே அம்மா, அப்பாவுடன் டோட்டோ-சான் சென்று கொண் டிருந்தாள். விழா பிரதேசத்தை அடைந்ததும், முகத்தில் அடித்தாற் போல பளீர் வெளிச்சம். டோட்டோ-சான் ஒவ்வொரு சின்னச் சின்னக் கடைக் குள்ளும் தலையை நுழைத்துப் பார்த்தாள். அங்கு எங்கே பார்த்தாலும் வித்தியாசமான சத்தங்கள் - கிரீச் சத்தம், நீராவி போவது போல 'உஸ்ஸ்' சத்தம், வெடி வெடிப்பது போல 'பாப்' சத்தம். சுண்டியிழுக்கும் வித்தி யாசமான நறுமணங்கள். எங்கு பார்த்தாலும் ஏதாவது ஒரு புதுமை, ஏதாவது ஒரு விநோதம்.

அங்கு பொம்மைக் குழாய்கள் இருந்தன. அதன் வழியாக 'பெப்பர் மிண்ட்'டை உள்ளிழுத்து புகைக்க வேண்டியதுதான். அந்த குழாய்கள் பூனை மற்றும் நாய் படங்களினாலோ, 'பெட்டி பூப்' (Betty Boop) படங்களினாலோ அலங்கரிக்கப்பட்டிருந்தன. அங்கு 'லாலிபாப்'பும், பஞ்சு மிட்டாயும்கூட இருந்தன. அது தவிர மூங்கில் துப்பாக்கிக் குழல் இருந்தது. அது வழியாக ஒரு வகையான தாவரத் தண்டுப்பாகத்தை நுழைத்து, துப்பாக்கியால் சுட்டால் பலமான 'பாப்' சத்தம் எழும்.

தெருவோரம் இருந்த ஒரு மனிதன் கத்தி, வாள் போன்றவற்றை அப்படியே விழுங்கிக் கொண்டிருந்தான்! பின்னர் கண்ணாடித் துண்டுகளைச் சாப்பிட்டான். இன்னொரு மனிதன் ஒரு 'பவுடர்' விற்றுக் கொண்டிருந்தான். அதைக் கிண்ணத்து விளிம்பில் தடவிப் பேசினால், கிண்ணம் எதிரொலிக்கும். பிறகு மாயத் தங்க மோதிரமிருந்தது. அதில் பணத்தை வைத்தால் பணம் மாயமாய் மறைந்து விடும்! பிறகு ஒரு படம் விற்றார்கள். அதை வெளிச்சத்தில் காட்டினால்தான் படம் தெரியும்.. நிழல் விழுந்தால் மறைந்து விடும்... பேப்பர் மலரைத் தண்ணீர் நிறைந்த கண்ணாடிக் குவளையில் போட்டதும் மலர்ந்தது... டோட்டோ-சான் நடந்து கொண்டிருக்கும்போது, இங்கும் அங்கும் கூர்ந்து பார்த்துக் கொண்டே சென்றவள், திடீரென நின்றாள்...

"ஓ.. பாருங்கள்.." மஞ்சள் நிறத்தில் சிணுங்கிக் கொண்டிருந்த கோழிக்குஞ்சுகள் நிறைந்த கூண்டைக் காட்டி அவள் கத்தினாள்.

"எனக்கு இதில் ஒண்ணு வேணும்." அப்பாவையும், அம்மாவையும் இழுத்துக் கொண்டே சொன்னாள். "எனக்கு இதில் ஒண்ணு எப்படியாவது வேணும்."

அத்தனை கோழிக்குஞ்சுகளும் டோட்டோ-சானை நோக்கித் திரும்பி, தனது சிறிய தலைகளை அவள் பக்கம் தூக்கிக் கொண்டு, தனது இறகுகளைச் சிலிர்த்துக் கொண்டு இன்னும் சத்தம் போட்டு சிணுங்கின.

"அது ரொம்பவும் கவர்ச்சிகரமாய் இருக்கு இல்லையா?" டோட்டோ-சான் தனது வாழ்க்கையிலேயே இவ்வளவு தூரம் எதுவும் தன்னைக் கவர்ந்ததில்லை என்பதை உணர்ந்தாள். அவள் தனது பெற்றோர்கள் முன்னர் தலைவணங்கி கெஞ்சிக் கேட்டாள்.

"தயவு செய்து வாங்கித் தாருங்கள்.." மிகவும் உருக்கமாய், அப்பாவையும், அம்மாவையும் பார்த்து டோட்டோ-சான் கேட்டாள். ஆனால் அவள் பெற்றோர்கள் சீக்கிரமே அங்கிருந்து அவளை இழுத்துச் சென்றதை அவளால் நம்பவே முடியவில்லை.

"நீங்கள் ஏதாவது எனக்கு வாங்கித் தருவதாக உறுதியளித்து இருந்தீர்கள். ஆனால் நான் விரும்பும் ஒரே ஒரு பொருள் இதுதான்.."

"இல்லை மகளே!" அம்மாதான் அமைதியாக சொன்னாள்- "இந்த பரிதாபக் கோழிக்குஞ்சுகள் சீக்கிரமே செத்து விடும்.."

"ஏன்?" டோட்டோ-சான் கேட்டுக்கொண்டே, அழ ஆரம்பித்து விட்டாள்.

அப்பா அந்த கடைக்காரர் கேட்க முடியாதபடி ஓரமாய் அவளை இழுத்துச் சென்று விளக்க ஆரம்பித்தார். "டாட்ஸ்கி, இப்போது அவை நன்றாகத்தான் இருக்கின்றன. ஆனால் அதனால் ரொம்ப நாள் வாழ முடியாது. அது இறந்தால் உன்னால் தாங்க முடியாது. அதனால்தான் அதை வாங்கித்தர விரும்பவில்லை.."

டோட்டோ-சான் அதை வாங்கியே ஆக வேண்டும் என மனதை உறுதி செய்துகொண்டதால், அவர்கள் சொன்னதைக் கேட்கவே இல்லை.

"நான் அதை சாக விடமாட்டேன்! நல்லாப் பார்த்துக் கொள்வேன்!"

அம்மாவும், அப்பாவும் டோட்டோ-சானை அந்த இடத்தை விட்டு

இழுத்துச் செல்ல முயன்றார்கள். ஆனால் டோட்டோ-சான் அந்த கோழிக்குஞ்சுகளையே பேரார்வத்துடன் பார்த்தாள்... அதேபோல் கோழிக்குஞ்சுகளும் டோட்டோ-சானை ஆர்வத்துடன் பார்த்து இன்னும் சத்தம் போட்டு சிணுங்கின. டோட்டோ-சான் தனக்கு ஓர் கோழிக்குஞ்சு வேண்டுமென்பதில் உறுதியாகிக் கொண்டே போனாள். அவள் தனது பெற்றோர்களிடம் மிகவும் வேண்டிக் கொண்டாள், "தயவுசெய்து எனக்கு ஒன்று வாங்கித் தாருங்கள்."

ஆனால் அம்மாவும், அப்பாவும் மிகவும் உறுதியாக இருந்தார்கள்.

"உனக்கு அதை வாங்கிக் கொடுக்க நாங்கள் விரும்பவில்லை. ஏனெனில் இறுதியில் தாங்கொணா துயரத்தில் அது உன்னை ஆழ்த்திவிடும்."

டோட்டோ-சான் வெடித்துக் குமுறினாள். அவள் கன்னங்களில் வெள்ளமாய் கண்ணீர் பெருக்கெடுத்தோட வீட்டை நோக்கி நடந்தாள். அவர்கள் மறுபடியும் ஒளியிழந்த தெருவிற்கு வந்ததும் அழுது கொண்டே முரண்டு பிடித்தாள். "நான் எதையும் என் வாழ்க்கையில் விரும்பியதில்லை. நான் இனிமேல் எதையுமே உங்களிடம் கேட்க மாட்டேன். தயவு செய்து இந்த ஒன்றை மட்டும் எனக்கு வாங்கித் தந்து விடுங்கள்.."

கடைசியாக அம்மாவும், அப்பாவும் விட்டுக் கொடுத்தார்கள்.

அது மழைக்குப் பின் தோன்றிய சூரியவெளிச்சம் போலிருந்தது. ஒரு சின்னக் கூண்டில் இரண்டு கோழிக்குஞ்சுகளை வைத்து எடுத்துக் கொண்டு வீட்டிற்கு வரும்போது, வழியெல்லாம் சிரித்துக் கொண்டே வந்தாள்.

அடுத்த நாள், அம்மா ஒரு ஆசாரியை வரவழைத்து, மரத்துண்டுகளால் ஒரு விசேஷமான கூண்டைச் செய்து அதனுடன் ஒரு மின்சார விளக்கைப் பொருத்தினாள். மின்சார விளக்கின் வெப்பத்தில் குஞ்சுகள் வெது வெதுப்பாய் இருக்கும் அல்லவா! டோட்டோ-சான் நாள் முழுவதும் கோழிக்குஞ்சுகளை கண் மூடாது கவனித்துக் கொண்டே இருந்தாள்.

அந்த சிறிய மஞ்சள் குஞ்சுகள் மிகவும் துடிதுடிப்புடன்தான் இருந்தன. ஆனால், அந்தோ பரிதாபம்! நாலாவது நாள் ஒன்றும், ஐந்தாவது நாள் மற்றொன்றும் எல்லாவித அசைவுகளையும் நிறுத்தி விட்டன. அவள் அவைகளைத் தொட்டு அசைத்துப் பார்த்தாள்; கூப்பிட்டுப் பார்த்தாள். ஆனால் ஒரு சின்ன சிணுங்கல்கூட இல்லை. அவள் அவைகளுக்காகக் காத்துக் கிடந்தாள். ஆனால் அவை அதற்குப் பின் கண்களைத் திறக்கவே இல்லை. அப்பாவும், அம்மாவும் சொன்னபடியே எல்லாம் நடந்து விட்டது. தனக்குள்ளே அழுது கொண்டு, தோட்டத்தில் ஒரு குழிதோண்டி, அந்த இரண்டு குஞ்சுகளையும் அதில் புதைத்தாள். பின்னர் ஒரு சின்னப் பூவை அந்த இடத்தில் வைத்தாள்.

அந்தக் குஞ்சுகள் இருந்த கூண்டு இப்போது பயங்கர பெரிசாகவும், வெறித்துப் போயும் இருப்பது போலத் தோன்றியது. அந்தக் குஞ்சுகளின் மெல்லிய மஞ்சள் சிறகுகள் கூண்டின் முக்கு மூலைகளில் ஒட்டிக் கொண்டிருப்பது கண்ணில் பட்டதும், அந்த குஞ்சுகள் விழாவின் போது சத்தம் போட்டு சிணுங்கியது அப்படியே மனத்திரையில் ஓடும். அப்போது

பற்களை இடுக்கிப் பிடித்துக்கொண்டு, சத்தம் வெளியே தெரியாமல் டோட்டோ-சான் கதறுவாள்.

அவள் தனது வாழ்க்கையில் எதையும் இப்படி நேசித்ததில்லை. அதனால்தான் அது கையைவிட்டு சீக்கிரம் போய்விட்டதோ! இதுதான் அவளது வாழ்க்கையில் இழப்பும், பிரிவும் குறித்த முதல் அனுபவம்...

## அவர்களது மோசமான சட்டைகள்

டோமோயி பள்ளிக்குக் குழந்தைகளை மோசமான உடைகளையே உடுத்தி அனுப்புமாறு, அவர்களது தலைமையாசிரியர் பெற்றோர்களிடம் கேட்டுக் கொண்டார். மோசமான உடைகளைக் குழந்தைகள் அணிந்து வந்தால், அது சேறு பட்டாலோ கந்தலாகக் கிழிந்தாலோ அதிகம் கவலைப்பட வேண்டாம் என அவர் நினைத்தார். சட்டை அழுக்குப் பிடித்துவிடும், பின்னர் திட்டுவார்கள் எனக் குழந்தைகள் கவலைப் படுவதோ, சட்டைகிழிந்து விடும் என விளையாட்டில் அவர்கள் கலந்து கொள்ளத் தயங்குவதோ அவர்களுக்கு இழைக்கப்படும் அவமானமாய் தலைமையாசிரியர் கருதினார். டோமோயிக்கு அருகில் ஒரு ஆரம்பப்பள்ளி இருந்தது. அதில் சிறுமிகள் மாலுமி சூட் சீருடையையும், சிறுவர்கள் நீண்ட காலர் வைத்த மேற்சட்டையும், கீழே கால்சட்டையும் சீருடையாக அணிவார்கள். ஆனால் டோமோயி சிறுவர்கள் சாதாரணமான உடையில் பள்ளிக்கு வருவார்கள். பின்னர் ஆசிரியர்களின் அனுமதியுடன், உடையைப் பற்றி எந்தவித பயமும் இல்லாமல், இதயமே வெடித்து விடும் அளவிற்கு விரைவுடன் விளையாடுவார்கள். அந்தக் காலத்து உடைகள் இன்றைய 'ஜீன்ஸ்' போல அவ்வளவு உழைக்காது. அதனால் எல்லா பையன்கள் டிரவுசரிலும் ஏதாவது 'ஒட்டல்' இருக்கும். சிறுமிகளும் கூட கிடைக்கக் கூடியவற்றில் ரொம்ப வலிமையான பொருட்களாலான 'டிரஸ்'களையும், 'ஸ்கர்ட்டு'களையும் தான் அணிவார்கள்.

டோட்டோ-சானின் பொழுதுபோக்கே, மற்றவர்களது தோட்டம் அல்லது காலியிடம் இவற்றில் அமைந்துள்ள கம்பி வேலிகளின் வழியே உள்ளே ஊர்ந்து நுழைவதுதான். அதனால் சட்டை குறித்து குழந்தைகள் கவலைப்படக் கூடாது என்பது அவளுக்கு மிகவும் பொருந்தியது. அந்தக் காலத்தில் எல்லாமே ஏறத்தாழ கம்பி வேலிகள்தான். அவற்றில் சிலவற்றில் தரைமட்டத்தில் கூட கம்பி வேலி கட்டியிருப்பார்கள். அந்த மாதிரி ஒன்றுக்குள் நுழைய வேண்டுமானால் நாயைப்போல வளை பறித்து நுழைந்து செல்ல வேண்டும். டோட்டோ-சான் எவ்வளவுதான் ஜாக்கிரதையாக இருந்த போதிலும், சட்டை முட்கம்பியில் மாட்டிக் கிழிவதைத் தவிர்க்கவே முடிந்ததில்லை. ஒரு முறை, நூல் நூலாகிப் போன மஸ்லினில் ஆன பழைய சட்டையை அணிந்து அவள் விளையாடிய போது, அது மேலிருந்து கீழ்வரை கந்தல் கந்தலாகி விட்டது. அது பழைய. துணியானாலும், அம்மா அதை மிகவும் விரும்பினாள் என்பதை டோட்டோ-சான் அறிவாள். ஆகையால் என்ன சொல்வது என்பதற்காக, அவள் மூளையைப்போட்டுக் கசக்கிக் கொண்டாள். முட்கம்பி வேலியில்

கிழிந்து விட்டது என அம்மாவிடம் சொல்ல அவள் மனம் ஒப்பவில்லை. தன்னால் அது கிழிபடுவதை தடுக்க இயலாமல் போய்விட்டது என்று சொல்வதற்குப் பொருத்தமான ஏதாவது ஒரு பொய்யைக் கண்டுபிடித்து சொல்வதுதான் பரவாயில்லை என அவள் நினைத்தாள். கடைசியாக அவள் கீழ்க்கண்ட கதையை சொன்னாள்.

வீட்டிற்கு வந்ததும், "நான் ரோடு வழியாய் நடந்து வந்து கொண்டிருக்கும்போது, எனக்கு யாரென்றே தெரியாத நிறைய குழந்தைகள் என் முதுகுக்குப் பின்னால் கத்தியை எறிந்து விட்டார்கள். அதனால்தான் என் சட்டை இப்படி கிழிந்து விட்டது..." என டோட்டோ-சான் புளுகினாள். அவள் பேசிக்கொண்டிருக்கும்போது, இனி அம்மா தொடர்ந்து கேட்கப்போகும் கேள்விகளுக்கு எப்படிப் பதில் சொல்லப் போகிறோம் எனத் தெரியாமல் விழித்துக் கொண்டிருந்தாள்.

ஆனால் நன்றி கூறத்தக்க வகையில், அம்மா சொன்னது என்னவோ "இது ரொம்ப பயங்கரமில்லையா!" என்பது மட்டும்தான்.

டோட்டோ-சான் நிம்மதிப் பெருமூச்சினால் உப்பிப் போனாள். அம்மாவும் இந்த மாதிரி நேரத்தில் அந்த ஆசையான சட்டை கிழிவதி லிருந்து தடுப்பதற்கு யாரும் டோட்டோ-சானுக்கு உதவியிருக்க முடியாது என உணர்ந்திருக்கலாம்... ஆனால் அம்மா அவளின் 'கத்தி' கதையை நம்பவில்லை. அவள் முதுகில் எறியப்பட்ட கத்தி, அவள் சட்டையை கிழித்ததோடு அவளையும் காயப்படுத்தியிருக்க வேண்டுமே.. மேலும் டோட்டோ-சான் இந்த நிகழ்ச்சியால் கொஞ்சம்கூடப் பயந்து போன மாதிரியும் தெரியவில்லை. அம்மா சீக்கிரமே அது ஒரு கட்டுக்கதை எனப் புரிந்து கொண்டாள். இருந்தபோதிலும், இவ்வளவு கிழிந்ததற்கு வருத்தம் தெரிவிப்பது என்பது டோட்டோ-சானுக்கு வழக்கத்தில் இல்லாத ஒன்று. டோட்டோ-சான் சட்டை இப்படியானதை மோசமாக உணர்ந்ததால்தான் புளுகினாள் என்பதை அம்மா புரிந்து கொண்டாள். அவள் அப்படி உணர்ந்ததே, அம்மாவிற்கு நெகிழ்வூட்டியது... ஆனால் அம்மா வேறு எதையோ அவளிடம் கேட்க வேண்டும் என கொஞ்ச காலமாய் காத்திருந்தாள். இதுதான் அதற்கு சரியான நேரம் என அவளுக்கு மனதில் பட்டது.

"உனது சட்டை எப்படி கத்தி மற்றும் அது மாதிரியான பொருட் களினால் கிழிக்கப்படுகிறது என்பதை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் தினமும் உன் ஜட்டியையயும் எப்படி இப்படிக் கிழித்துக் கொள்கிறாய் என்பதுதான் எனக்குப் புரியவில்லை" என அம்மா சொன்னாள்.

பட்டிகளினால் ஒழுங்கமைக்கப்பட்ட டோட்டோ-சானின் ஜட்டிகள் எப்படிக் கிழிந்து விடுகின்றன என்பதைத்தான் அம்மாவால் புரிந்து கொள்ளவே முடியவில்லை. சறுக்கி விளையாடினாலோ, தவறிக் கீழே விழுந்தாலோ ஒன்று ஜட்டியில் சகதியும் படியும்; அல்லது கொஞ்சம் கொஞ்சமாய் ஜட்டி பழசாகும் என்றுதான் அம்மா எதிர் பார்த்தாள். ஆனால் இப்படிக் கந்தலாய் எப்படிக் கிழியும்?

டோட்டோ-சானும் ஒருகணம் அதை யோசித்துப் பார்த்தாள்.

பின்னர் சொன்னாள், "இங்கே பாரு. வேலிக்குள் வளை தோண்டி நுழையும்போது 'ஸ்கர்ட்' மாட்டிக் கிழிவதை தடுக்க முடியாது. அதே மாதிரி பின்னே வரும்போது ஜட்டி கிழிவதையும் தடுக்க முடியாது. இப்படியே வேலியின் ஒரு பக்கத்திலிருந்து, மறு பக்கம் வரை, 'மன்னியுங்கள் உள்ளே வரலாமா?' என்றும் 'சரி, வந்தனம். வருகிறேன்' என உள்ளேயும், வெளியேயும் மாறி மாறிப் போய் முடிப்பதற்குள் ஜட்டி மற்றும் எல்லாம் கிழிந்து போய்விடுகிறது."

அம்மாவிற்கு அவள் சொல்வது புரியவில்லை. இது ஏதோ கிண்டல் போல அவளுக்கு ஒலித்தது.

"கிண்டல் பண்ணுகிறாயா?" அம்மா கேட்டாள்.

இந்தக் கேள்வியினால் ஆச்சரியம் அடைந்த டோட்டோ-சான் "ஏன் இதை நீயும் முயற்சி பண்ணக்கூடாது? அது ரொம்ப வேடிக்கையா இருக்கும். கடைசியா உன் ஜட்டி கூடக் கிழிந்துபோகும்.." என்றாள்.

டோட்டோ-சான் மிகவும் விரும்பிய அந்தக் கிளர்ச்சியூட்டும் விளையாட்டு இதுதான்.

முதலில் முட்கம்பி வேலியினால் அடைக்கப்பட்ட ஒரு வெற்று இடத்தை கண்டுபிடிக்க வேண்டும், "மன்னியுங்கள் உள்ளே வரலாமா?" என்பதில் முட்கம்பி வேலியைத் தூக்கி, கீழே ஒரு வளை தோண்டி அது வழியே ஊர்ந்து செல்வது வரை அடங்கும். ஒரு முறை உள்ளே வந்ததும், மறுபடியும் பக்கத்து முட்கம்பி வேலியை தூக்கி, வளை பறித்து "வந்தனம். வருகிறேன்" என சொல்லி பின்னால் வரவேண்டும்.. அம்மாவிற்கு டோட்டோ-சானின் 'ஸ்கர்ட்' எப்படிக் கிழிகிறது என்பது தெளிவாகப் புரிந்தது. இது மறுபடியும், மறுபடியும் தொடர்ந்து செய்யப்படுவதால் முட்கம்பிக்குக் கீழே வளை தோண்டி "மன்னிக்கவும், உள்ளே வரலாமா?" என வருவதுவும், பின்னர் புது வளை வழியாய் "சரி, வந்தனம். வருகிறேன்" எனத் திரும்புவதுவும்—ஸ்கர்ட்டும், ஜட்டியும், கிழிந்து, சர்வநாசம். டோட்டோ-சான் சந்தோஷமாய் கோணல் மாணலாய் வேலியின் ஒரு கரையிலிருந்து மறுகரை வரை முன்னும் பின்னும் போய் வருவதால், அவளது ஜட்டிகள் கிழிவதில் எந்த ஆச்சரியமும் இல்லை.

இதை ஒரு விளையாட்டாக நினைத்துப் பார்த்தால், இது பெரியவர்களுக்கு வெறுப்பூட்டத்தக்கதாயும், எந்தவித சந்தோஷத்தையும் தர இயலாததாய்தான் இருக்கும். ஆனால் குழந்தைகளுக்கோ அதில் அவ்வளவு சந்தோஷம்! டோட்டோ-சானை, தலை முடியில், நக இடுக்கில் ஏன் காதுகளில் அழுக்குடன் பார்க்கும்போது, அம்மாவால் சிறிது வெறுப்படைவது என்பதைத் தவிர்க்கவே முடியாது. இருந்தாலும் தலைமையாசிரியரின் மேலுள்ள மரியாதை கூடுவதையும் தவிர்க்க முடியாது.

தாங்கள் அணியும் உடைகளை, தங்களுக்கு எவ்வளவு விருப்பமோ அந்த அளவிற்கு அழுக்காக்கட்டும் என்ற தலைமையாசிரியரின் பரிந்துரை, அவர் குழந்தைகளை எவ்வளவு சரியாய்ப் புரிந்து வைத்திருக்கிறார் என்பதற்கான உதாரணம்.

## தாகாஹாஷி

ஒருநாள் காலை, அவர்கள் எல்லோரும் பள்ளி மைதானத்தில் ஓடிக் கொண்டிருந்த போது, தலைமையாசிரியர் சொன்னார். "இங்கே உங்களுக்கு ஒரு புது நண்பனை அறிமுகப்படுத்தப் போகிறேன். இதோ இவன்தான்... பெயர் தாகாஹாஷி. இவன்முதல் கிரேடு ரயிலில் சேர்ந்து கொள்வான்."

டோட்டோ-சான் உட்பட எல்லா குழந்தைகளும் தாகாஹாஷியைப் பார்த்தார்கள். அவன் தன் தொப்பியை எடுத்து தலைவணங்கி, வெட்கத்துடன், "எல்லோரும் நலமா?" என்றான். டோட்டோ-சானும், அவளது பள்ளித்தோழர்களும் முதல் கிரேடுதான் படிப்பதால் மிகவும் சிறுவர்களாய் இருந்தார்கள். ஆனால் தாகாஹாஷி பையனாய் இருந்தபோதிலும், தனது சிறிய கரங்களுடனும், கால்களுடனும் இன்னும் சிறுத்து காணப்பட்டான். அவனது கரங்களில் காணப்பட்ட தொப்பியும் மிகவும் சிறியதாக இருந்தது. ஆனால் அவனது தோள்கள் திண்மையாய் அகன்று காணப்பட்டன. அவன் கைவிடப்பட்டவனாய் நின்று கொண்டிருந்தான்.

"நாம் அவனுடன் பேசுவோம்" என்று டோட்டோ-சான் மியோ-சானிடமும், சாக்கோ-சானிடமும் சொன்னாள். அவர்கள் தாகாஹாஷியிடம் சென்றார்கள். அவர்கள் அவனை நெருங்கும் போது, அவனும் அதற்கு இயைவாய் சிரித்தான். அவர்களும் பதிலுக்குச் சிரித்தார்கள். அவனுக்கு நல்ல பெரிய வட்டக் கண்கள். அதன் வழியாக ஏதோ சொல்ல விரும்புபவன் போலப் பார்த்தான்.

"ரயிலில் இருக்கும் வகுப்பறையை நீ பார்க்க விரும்புகிறாயா?" என டோட்டோ-சான்தான் கேட்டாள்.

"ம்ம்ம்..." எனச் சொன்ன தாகாஹாஷி, தனது தலையில் தொப்பியை அணிந்து கொண்டான்.

டோட்டோ-சான் வகுப்பறையை அவனுக்குக் காட்டுவதில் மிகவும் அவசரமாய் இருந்தாள். அவள் ரயிலின் கதவருகே நின்று கொண்டு, உள்ளே ஏறும் முனைப்புடன், "சீக்கிரம் வா" என்றாள்.

தாகாஹாஷி வேகமாக நடப்பதுபோலத் தோன்றினாலும், இன்னும் நிறைய தூரம் கடக்க வேண்டியிருந்தது.

ஓடுவதற்கு ஆயத்தமானது போல தள்ளாடி வந்து கொண்டிருந்த அவன், "நான் வந்து கொண்டிருக்கிறேன்" என்றான்.

இளம்பிள்ளை வாதத்தினால் பாதிக்கப்பட்ட யசுயாகி-சானைப் போல தாகாஹாஷி காலை இழுத்து நடக்கவில்லை என்றாலும், இவனுக்கும் ரயிலுக்குள் நுழைய யசுயாகி சானுக்கு தேவைப்படும் நேரம் தேவைப்படுகிறது என்பதை டோட்டோ-சான் உணர்ந்தாள். அவள் அவனுக்காகப் பொறுமையாகக் காத்திருந்தாள். தாகாஹாஷி தன்னால் முடிந்த அளவிற்கு ஓட்டோடி அவசரமாய் வந்ததால், 'அவசரம்' என சொல்ல இயலவில்லை. அவன் கால்கள் மிகவும் குட்டை மேலும் அது வில்போல் வளைந்திருக்கும். டீச்சர்களுக்கும், பெரியவர்களுக்கும் அவன் வளர்ச்சி நின்று விட்டது என்பது தெரியும். டோட்டோ-சான், தான் வருவதற்காக காத்துக் கொண்டிருக்கிறாள் என்பதைக் கண்டதும் கைகளை ஆட்டிக்கொண்டு வேகமாக

வருவதற்கு தாகாஹாஷி முயன்றான். ரயில் கதவை அடைந்ததும், "நீ வேகமாக ஓடுகிறாய்" என்றான்.

பிறகு அவன் சொன்னான், "நான் ஒசாகாவில் இருந்து வருகிறேன்."

"ஒசாகாவா?" டோட்டோ-சான் ஆச்சரியத்துடன் இரைந்தாள். ஒசாகா அவள் இதுவரை கண்டிராத கனவு நகரம். அம்மாவுடைய இளைய தம்பி—அதாவது டோட்டோ-சானின் மாமா—ஒரு பல்கலைக்கழக மாணவர். அவர் வீட்டிற்கு வரும்போது தனது இரண்டு கைகளாலும் டோடோ-சானின் தலையைப் பிடித்து, அவளை அப்படியே எவ்வளவு உயரம் தூக்க முடியுமோ அவ்வளவு உயரம் தூக்கி, சொல்வார், "உனக்கு நான் ஒசாகாவை காட்டுகிறேன்" உயரம் போனதும் "ஒசாகாவை இப்போது பார்க்க முடிகிறதா?" என்பார். இது சாதாரணமாய் பெரியவர்கள் குழந்தைகளிடம் விளையாடும் ஒரு விளையாட்டுதான். இருந்தாலும் டோட்டோ-சான் இதை உண்மையென்று நம்பினாள். இப்படி தூக்கும் போது, முகத்து சதை இழுத்துக் கொள்ளும், கண்கள் இடம் நழுவி பிதுங்கும், காதுகள் வலிக்கும், இருந்தாலும் உன்மத்தமாய் தூரத்தில் தெரிவதை உற்றுநோக்கி ஒசாகா தெரிகிறதா எனப் பார்ப்பாள். ஆனாலும் ஒசாகாவை அவள் காணவே முடிந்ததில்லை. இருந்தாலும் தன்னால் ஒருநாள் ஒசாகாவைக் காணமுடியும் என அவள் உறுதியாக நம்பினாள். ஆகவே மாமா வந்தால், அவள் தயங்காமல் கேட்பாள், "மாமா, ஒசாகாவைக் காட்டுங்கள்" என்று. இப்படித்தான் ஒசாகா அவளுக்கு கனவு நகரமாகிப் போனது. அங்கிருந்து தாகாஹாஷி வந்திருக்கிறான்!

"ஒசாகா பற்றி எனக்குச் சொல்லேன்" அவள் தாகாஹாஷியிடம் கேட்டாள்.

"ஒசாகாவைப் பற்றியா?" சந்தோஷமாய் சிரித்துக் கொண்டே அவன் வினவினான். அவனது குரல் தெளிவாயும், முதிர்ந்தும் இருந்தது. அப்போது பார்த்து முதல் வகுப்பிற்கான மணி அடித்தது.

"ஐயோ! பரிதாபமே!" டோட்டோ-சான் சொன்னாள். தாகாஹாஷி அவனது பையினால் கிட்டத்தட்ட முழுவதுமாய் மறைக்கப்பட்ட அவனது உடலை ஆட்டிக்கொண்டே, உல்லாசமாய் வகுப்பறைக்குள் நுழைந்தான்; முதல் வரிசையில் சென்று அமர்ந்தான். டோட்டோ-சான் வேகமாய் அவனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டாள். எங்கு விரும்புகிறோமோ, அங்கு அமரலாம் என்பதற்காக அப்போது டோட்டோ-சான் மிகவும் சந்தோஷமடைந்தாள். அவள் அவனை விட்டுப் பிரிய விரும்பவே இல்லை. இப்படித்தான் தாகாஹாஷி அவளுடைய நண்பன் ஆனான்.

## 'தாவுவதற்கு முன்னால் கவனி'

பள்ளியிலிருந்து வீட்டிற்கு வந்து கொண்டிருந்த வழியில், கிட்டத்தட்ட வீட்டை அடைந்து விட்ட நேரத்தில், டோட்டோ-சான் சாலையின் ஓரத்தில் கிடந்த அதைக் கண்டாள். அதனால் சுண்டி இழுக்கப்பட்டாள். அது ஒரு பெரிய மணல் குவியல்! கடலிலிருந்து இவ்வளவு தூரம் தள்ளி

மணலைப் பார்ப்பது எவ்வளவு அருமை! இது உண்மையா, இல்லை கனவா? டோட்டோ-சான் வியந்து போனாள். முதலில் மெதுவாகத் தவ்வி, மெல்ல மெல்ல வேகம் பிடித்து, முழு வேகத்தை அடைந்து, ஒரே தாவலில் மணல் குவியலின் சிகரத்தை அடைந்தாள். ஆனால் அது உண்மையில் மணலே அல்ல! மணலுக்குள், தயாரிக்கப்பட்ட சாம்பல் பூச்சு குவியலாய் இருந்தது, 'பளாம்' சத்தத்துடன் அவள் உள்ளே அமிழ்ந்தாள். அவளது நெஞ்சு வரைக்கும் அது 'பிசின்' மாதிரி ஒட்டிக் கொண்டது. பள்ளிப்பை மற்றும் ஷூ பையுடன் ஒரு சிலை நின்ற மாதிரி அவள் தோன்றினாள். அவள் வெளியே வர எவ்வளவுக்கெவ்வளவு முயல்கிறாளோ, அவ்வளவுக் கவ்வளவு கால் வழுக்கியது. அவள் ஷூ கிட்டத்தட்ட வெளியே வந்து விட்டது. அதில் முழுவதுமாய் புதைந்து போகாமல் இருக்க அவள் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டியிருந்தது. ஆகையால் அவள் எதுவும் செய்யாமல் அப்படியே தனது இடது கரத்தால் ஷூ பையை கலவைக்கு மேல் தூக்கிப் பிடித்தவாறே நிற்க வேண்டியதாயிற்று. யாரோ அவளுக்குத் தெரியாத ஒன்றிரண்டு பெண்கள் கூட அந்த வழியாகப் போனார்கள். டோட்டோ-சான் மெல்லிய குரலில், "தொந்தரவுக்கு மன்னித்து இங்கே கவனியுங்களேன்" என்று கூட அழைத்துப் பார்த்தாள். ஆனால் அவர்கள் டோட்டோ-சான் ஏதோ விளையாடுகிறாள் என நினைத்துக் கொண்டு புன்னகை செய்துகொண்டே தங்கள் வழியே சென்றார்கள்.

மாலை மயங்கி, இருட்டு ஆக்ரமிக்க ஆரம்பித்த வேளையில், அம்மா அவளைத் தேடிக்கொண்டு வந்துவிட்டாள். டோட்டோ-சானின் தலை குவியலுக்கு மேலே ஒட்டிக் கொண்டிருப்பது போல தோன்றியது. அம்மா அதைப் பார்த்து அதிர்ந்து போனாள். அம்மா ஒரு நீண்ட கம்பை எடுத்து வந்து, அதன் மறுபக்கத்தை டோட்டோ-சான் பிடித்துக் கொள்வதற்காக நீட்டினாள். அவள் அதைப் பற்றிக் கொண்டதும், அவளை அப்படியே வெளியே இழுத்தாள். முதலில் அம்மா கையைக் கொடுத்துதான் டோட்டோ-சானை இழுக்க முயன்றாள். ஆனால் அம்மாவின் கால் கலவையில் பதிந்து மாட்டிக்கொண்டது.

டோட்டோ-சான், சுவரில் பூசப்பட்டது போல, சாம்பல் பூச்சினால் முழுவதுமாய் பூசப்பட்டிருந்தாள்.

"நான் இதுக்கு முன்னாடியே உன்கிட்ட சொல்லியிருக்கேன் இல்லையா" என்று ஆரம்பித்த அம்மா தொடர்ந்து சொன்னாள், "ஏதாவது ஆர்வத்தைத் தூண்டுகிற மாதிரி இருந்தால், உடனே அதற்குள் பாய்ந்து விடாதே... தாவுவதற்கு முன்னால் கவனி."

'இதுக்கு முன்னாடியே நான் சொன்னது' என அம்மா குறிப்பிட்ட சம்பவம், மதிய இடைவேளையின் போது பள்ளியில் நடந்தது. டோட்டோ-சான் அசெம்பளி ஹாலுக்குப் பின்னால் உள்ள அந்த சின்னப் பாதை வழியாய் நடந்து சென்று கொண்டிருந்தாள். பாதையின் ஊடே, ஒரு முழு செய்தித்தாள் தரையில் கிடந்தது. அதன் மேலே அப்படியே தாவினால் எவ்வளவு வேடிக்கையாய் இருக்கும் என டோட்டோ-சான் மனதுக்குள்ளே நினைத்துக் கொண்டாள். சில அடிகள்

பின்னால் வந்து, சின்ன தாவல்களுடன் ஆரம்பித்து, செய்திதாளின் மையத்தை குறி வைத்து, நல்ல வேகம்பிடித்து, ஓரே தாவுதான்- பள்ளிக்கூட காவலாளி கழிவறைக் குழியை தற்காலிகமாக மூடுவதற்காக அந்த செய்தித்தாளை பயன்படுத்தியிருந்தார். அவருக்கு வேறு ஏதோ பணி யிருந்ததால், துர்நாற்றம் வெளியே பரவாமல் இருக்க, கான்கிரீட் மூடியும் வெளியே போய் விட்டதால், ஒரு செய்தித்தாளை வைத்து மேலே மூடிச் சென்றிருந்தார். டோட்டோ-சான் கழிவறை குழிக்குள், பெரிய 'ப்ளாப்' சத்தத்துடன் நேராக உள்ளே போய்விட்டாள். உண்மையிலே இது பயங் கரமானது. ஆனால் அவர்கள் எப்படியோ சமாளித்து பழைய சுத்தமான டோட்டோ-சானை மறுபடியும் கொண்டு வந்து விட்டார்கள். அதைத்தான் இப்போது அம்மா குறிப்பிட்டாள்.

"நான் இனிமேல் எதற்குள்ளும் தாவவே மாட்டேன், அம்மா. தாவவே மாட்டேன்" என்றாள் அவள், அம்மாவுக்கு பெரிய தொல்லை யிலிருந்து விடுதலை பெற்றது போலிருந்தது. ஆனால் டோட்டோ-சான் அதற்குப் பிறகு சொன்ன வார்த்தை, அம்மாவின் விடுதலை முழுமை யடையாதது என்பதை உணர்த்தியது.

"இனிமேல் நான் செய்தித்தாள் மேலும், மணல் குவியல் மேலும் கண்டிப்பாகத் தாவவே மாட்டேன், அம்மா"

செய்தித்தாள், மணல் தவிர வேறு ஏதாவது இருந்தால் அதில் கண்டிப்பாய்த் தாவுவது என்பதுதான் இப்போது டோட்டோ-சான் தலைக்குள் ஏற்றிக் கொண்ட செய்தி என்பது அம்மாவிற்கு சர்வ நிச்சயமாய் புரிந்தது.

அவர்கள் வீட்டை அடையும்போது, நன்றாக இருட்டி விட்டது.

## அதற்குப் பிறகு... உம்... உம்

மதிய உணவு டோமோயில் எப்போதுமே சந்தோசமாய்தான் இருக்கும். ஆனால் புதிதாக ஒன்று சந்தோஷத்தைக் கூட்டுவதற்காக இப்போது சேர்க்கப்பட்டது.

தலைமையாசிரியர் பள்ளியின் ஐம்பது மாணவ, மாணவிகளது டிபன் பாக்சிலும், 'கடலிலிருந்து கொஞ்சம், மலைகளிலிருந்து கொஞ்சம்' இருக்கிறதா எனச் சோதித்துக் கொண்டே வந்தார். அவரது மனைவி இரண்டு குழம்புப் பாத்திரங்களை அவர் பின்னாலேயே தூக்கிக் கொண்டு வந்தாள். யாருடைய மதிய உணவிலாவது ஏதாவது ஒன்று குறைந்திருந்தால் அவர் மனைவி அதை மட்டும் பரிமாறுவார். அதற்கு பிறகு "மெல்லு, மெல்லு அதை நன்றாக மெல்லு" என்று பாடலை எல்லோரும் பாடுவார்கள். பிறகு 'இடதாகிமாசு' தொடரும். இப்போது 'இடதாகிமாசு'க்குப் பிறகு யாராவது ஒரு சிறு சொற்பொழிவு நடத்த வேண்டும்.

ஒரு நாள் தலைமையாசிரியர் சொன்னார். "நாம் எல்லோரும் எப்படிச் சொற்பொழிவாற்றுவது என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என நான் நினைக்கிறேன். நீங்கள் இது குறித்து என்ன நினைக்கிறீர்கள்?

இனிமேல், நாம் மதிய உணவை முடித்த பின், நம்மில் ஒருவர் ஒவ்வொரு நாளும் இந்த வட்டத்தின் நடுவிற்கு வந்து எதைக் குறித்தாவது பேச வேண்டும்... என்ன, நான் சொல்வது சரிதானே?"

சில குழந்தைகள் தங்களிடம் சொற்பொழிவாற்றும் திறன் சரியாக இல்லை என நினைத்தாலும், மற்றவர்கள் பேசுவதைக் கவனிப்பது சுவாரசியமானது என நினைத்தார்கள். சிலர் தங்களுக்குத் தெரிந்ததை மற்றவர்களுக்குச் சொல்வதே மிகவும் சிறந்தது எனக் கருதினார்கள். டோட்டோ-சானுக்கு என்ன பேசுவது என்று தெரியாவிட்டாலும், தானும் அதற்கு ஒரு முயற்சி செய்யவே விரும்பினாள். பெரும்பான்மை யானவர்கள் தலைமையாசிரியரின் கருத்திற்கு உடன்பட்டதால், மறுநாளிலிருந்தே சொற்பொழிவை ஆரம்பித்து விடுவது என அவர்கள் முடிவெடுத்தார்கள்.

ஜப்பானியக் குழந்தைகள் உணவு வேளையில் பேசக் கூடாது என்றே அறிவுறுத்தப்படுகிறார்கள். ஆனால் தலைமையாசிரியர் தன்னுடைய வெளிநாட்டு அனுபவத்தின் மூலம் அப்படியே மாற்றுக் கருத்துக் கொண்டிருந்தார். அவர் தனது மாணவ மாணவிகள் உணவிற்காக அதிக



நேரம் எடுத்துக் கொள்ளவும், உண்ணும்போது கலந்துரையாடி அனுப விப்பதை ஊக்குவிக்கவும் விரும்பினார்.

மேலும் தனது மாணாக்கர்கள் ஜனத்திரள் முன்னர் எழுந்து சென்று தங்களது கருத்துக்களைத் தெளிவாகவும், நீரோட்டப் பிரவாகத் துடனும் எந்தவித தர்மசங்கடமும் இன்றி சொல்வது அவசியம் என அவர் கருதினார். அதனாலேயே தனது கருத்தை நடைமுறைப்படுத்த வேண்டிய சரியான தருணம் என அப்போது முடிவெடுத்தார்.

குழந்தைகள் அவர் கருத்தை ஏற்றுக் கொண்டதும், இதுதான் அவர் சொன்னது... டோட்டோ-சான் அதை ஈடுபாட்டுடன் கவனித்துக் கொண்டிருந்தாள்.

"நீங்கள் நல்ல பேச்சாளராய் வரவேண்டும் என்பதற்காக கவலைப்பட வேண்டிய அவசியமே இல்லை." மேலும் அவர் தொடர்ந்தார். "உங்களுக்கு எது பிடிக்கிறதோ அதைப்பற்றி பேசலாம். ஆமாம் எதைப்பற்றி வேண்டுமானாலும் சரி... எப்படியாவது நாமும் பேச ஒரு முயற்சி செய்வோமே."

பிறகு பேச்சாளர்களின் முறை தீர்மானிக்கப்பட்டது. பிறகு யார் பேச வேண்டுமோ, அவர் பாட்டு முடிந்ததும் சீக்கிரமே மதிய உணவை சாப்பிட்டு முடித்து விட வேண்டும் என்பதுவும் முடிவு செய்யப்பட்டது.

மதிய உணவு வேளையின் போது இரண்டு, மூன்று நண்பர்களுடன் பேசுவது போல் அல்லாமல் மொத்தப் பள்ளிக்கு எதிரே நின்று சொற் பொழிவு ஆற்றுவதற்கு ரொம்பத் தைரியம் வேண்டும். மற்றும் அது மிகவும் கஷ்டமானது என்பதைக் குழந்தைகள் சீக்கிரம் கண்டுபிடித்தார்கள். சில குழந்தைகள் முதலில் மிகவும் வெட்கப்பட்டு அசட்டுத்தனமாய் சிரிப்பார்கள். ஒரு பையன் எக்கச்சக்கமாய் முயற்சி செய்து, நன்றாகத் தயார் செய்து வந்தான். ஆனால் பேசுவதற்காக நடுவில் வந்த கணத்தில், அவனுக்கு எல்லாம் மறந்து போயிற்று, அவன் பலமுறை தான் தயாரித்து வந்த சொற்பொழிவின் தலைப்பையே திரும்பத் திரும்ப சொல்லிக் கொண்டிருந்தான். "ஏன் தவளைகள் பக்கவாட்டில் குதிக்கின்றன?" என்பதைப் பலமுறை சொல்லி முடித்த பின், "மழை பெய்யும்போது..." என ஆரம்பித்து, ஆரம்பித்த இடத்தை விட்டு அவன் நகரவேயில்லை. கடைசியாக 'அவ்வளவுதான் முடிந்தது' என்று சொல்லி தலைவணங்கி தன் இடத்திற்கு அவன் திரும்பிப் போய்விட்டான்.

டோட்டோ-சானின் முறை இன்னும் வரவில்லை. ஆனால் அது வந்தால், அவளது நேசமிக்க "இளவரசனும், இளவரசியும்" என்ற கதையைத்தான் அப்போது சொல்ல வேண்டும் என அவள் இப்போதே முடிவெடுத்துக் கொண்டாள். எல்லாருக்கும் அவள் சொல்லப்போகும் கதை தெரியும். இடைவேளையில் அவள் இந்தக் கதையை சொல்ல முயலும்போதுகூட, குழந்தைகள் "அந்தக் கதை எங்களுக்கு ரொம்ப சலித்துப் போச்சு..." என்று சொல்வார்கள். அப்படி இருந்தால்கூட, அந்தக் கதையைதான் சொல்ல வேண்டும் என அவள் முடிவெடுத்து விட்டாள்.

இந்தப் புதிய முயற்சி நன்றாக நடந்து கொண்டிருக்கும் போது,

தனது முறை வரும்போது ஒரு மாணவன் தன்னால் பேச முடியாது என உறுதியாக மறுத்துவிட்டான்.

"நான் சொல்லுவதற்கு ஒன்றுமில்லை" என அவன் அறிவித்தான்.

டோட்டோ-சான் கூட ஆச்சரியப்பட்டாள். ஒருவருக்கு சொல்வதற்கு ஒன்றுமே இல்லாமல் எப்படி இருக்கும்? ஆனால் அந்த சிறுவனுக்கு ஒன்றும் இல்லாமல் போய்விட்டது. தலைமையாசிரியர் காலியான 'டிபன் பாக்ஸ்' பெட்டியுள்ள அவன் மேஜையின் அருகே சென்றார்.

"அப்ப உனக்குச் சொல்லுவதற்கு ஒன்றுமே இல்லை"...? எனக் கேட்டார்.

"ஒன்றுமில்லை"

அந்த மாணவன் புத்திசாலித்தனமாக எதையும் முயற்சிக்கவில்லை அல்லது யாரையும் ஏமாற்ற முயலவில்லை. உண்மையிலேயே சொல்லத் தகுந்த மாதிரி அவனால் எதையும் யோசிக்க முடியவில்லை.

தலைமையாசிரியர் தனது தலையைத் திரும்பவும் நிமிர்த்தி, தன் ஓட்டைப் பற்கள் வெளியே தெரிவது பற்றிகூடத் தெரியாமல் "கட, கட" வென சிரித்தார்.

"நாம் முயற்சி செய்து, நீ சொல்வதற்கு எதையாவது கண்டு பிடிப்போம்".



"எனக்காகச் சிலவற்றைக் கண்டுபிடிக்கப் போகிறீர்களா?" பையன் திடுக்கிட்டுக் கேட்டான்.

தலைமையாசிரியர் அந்தச் சிறுவனை வட்டத்தின் நடுவில் நிற்க வைத்து, அவர் சிறுவனின் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டார்.

"முயற்சி செய், நினைத்துப் பார்" என்றார் தலைமையாசிரியர். "நீ காலையில் விழித்ததும் என்ன செய்தாய்? பள்ளிக்கு வரும்முன், என்ன செய்தாய்? நீ முதன் முதலில் என்ன செய்தாய்?"

"அதற்குப் பிறகு" என்ற பையன், தன் தலையைச் சொறிந்து கொண்டு யோசித்தான்.

"நல்லது" என்ற தலைமையாசிரியர், "நீ அதற்குப் பிறகு' என்று சொன்னாய், அதனால் நீ சொல்வதற்கு ஏதோ வைத்திருக்கிறாய். அதற்குப் பிறகு நீ என்ன செய்தாய்?" என கேட்டார்.

"அதற்குப் பிறகு... உம்... உம் ... நான் எழுந்தேன்... " தன் தலையை இன்னும் தேய்த்துக் கொண்டே சொன்னான்.

போட்போ-சானும், மற்றவர்களும் மிகவும் சந்தோஷமடைந்தார்கள். ஆனாலும் அவன் சொல்வதை மிகவும் உன்னிப்பாய் கவனித்தார்கள். அந்த பையன் தொடர்ந்து சொன்னான். "அதற்குப் பிறகு... உம்... " அவன் தலையை மறுபடியும் சொறிந்து கொண்டான். தலைமையாசிரியர் பொறுமையாய் முகத்தில் சிரிப்புடன் அவனைக் கவனித்துக் கொண்டிருந்தார். அவன் பேச ஆரம்பிக்க, அவர் சந்தோஷமாய் மேஜையில் கைகளால் தட்டினார். பிறகு சொன்னார். "அற்புதம்... இது போதும். நீ காலையில் எழுந்தாய். நீ அதை எல்லோரும் புரியும்படி சொல்லிவிட்டாய். இதில் கிண்டலுக்கு எதுவுமில்லை. எல்லோரையும் சிரிக்க வைக்க, நல்ல பேச்சாளராய்த்தான் இருக்க வேண்டும் என்பதில்லை. இதில் முக்கிய விஷயம் என்னவென்றால் நீ சொல்வதற்கு முக்கிய விஷயம் எதுவுமில்லை என்றாய். ஆனால் சொல்வதற்குச் சிலவற்றை நீயே கண்டுபிடித்துவிட்டாய்."

ஆனால் பையன் அத்துடன் உட்காரவில்லை. அவன் இன்னும் சத்தமான குரலில் சொன்னான். "அதற்குப் பிறகு... உம்..."

அனைத்துக் குழந்தைகளும் முன்னே சரிந்து உன்னிப்பாய்க் கவனித்தார்கள். அந்தச் சிறுவன் நீண்ட பெருமூச்சு விட்டுத் தொடர்ந்தான். "அதற்கு பிறகு... உம்... அம்மா... உம்... அவள் சொன்னாள் 'பல்லை விளக்கு' என்று ... உம்... அதனால் நான் பல்லைத் துலக்கினேன்... "

தலைமையாசிரியர் கைதட்ட ஆரம்பித்தார். எல்லா மாணவ, மாணவிகளும்கூட கைதட்ட ஆரம்பித்தார்கள். ஆனால் அந்த சிறுவனோ முன்பையும் விட உரத்த குரலில், தொடர்ந்து பேசினான். "அதற்குப் பிறகு... உம்..."

குழந்தைகள் கைதட்டுவதை நிறுத்திவிட்டு, மூச்சு விடுவதைக்கூட குறைத்து, முன்னே இன்னும், இன்னும் முகத்தைத் தாழ்த்தி ஆர்வத்துடன் கவனித்தார்கள்.

கடைசியாக, அந்தப் பையன் வெற்றிகரமாக முடித்தான்... "அதற்குப் பிறகு... உம்... நான் பள்ளிக்கு வந்துவிட்டேன்..."

பெரிய மாணவனில் ஒருவன் ரொம்பவும் முன்னே சரிந்து

கவனித்ததில், நிலை தடுமாறி 'டிபன்பாக்ஸ்'சில் முகத்தை இடித்துக் கொண்டான். இருந்தாலும் அவன் பேசுவதற்கு எதையோ கண்டுபிடித்து விட்டான் என்பதில் எல்லோரும் மிகவும் சந்தோஷம் அடைந்தார்கள்.

தலைமையாசிரியர் மிகவும் பலமாய் கைதட்டினார். டோட்டோ-சானும், மற்ற மாணவ மாணவிகளும் சேர்ந்து கைதட்டினார்கள். அதற்குப் பிறகும், "அதற்குப் பின்... உம்... ." மாணவன் கைதட்டலைப் பெற்றுக் கொண்டே நின்றான்... அசெம்பிளி ஹால் முழுவதும் கைதட்டலால் நிரம்பி வழிந்தது.

அந்தப் பையன் பெரிய ஆளாய் ஆனபிறகும் அந்தக் கைத்தட்டு பாராட்டுதலைக் கண்டிப்பாய் மறந்திருக்க மாட்டான்.

## நாங்கள் விளையாடிக் கொண்டு மட்டும்தான் இருந்தோம்

டோட்டோ-சான் ஒரு மோசமான விபத்தில் சிக்கிக் கொண்டாள். அவள் பள்ளி விட்டு வீடு வந்தபோது இது நடந்தது. இரவு உணவுக்கு முன்னர், அவளும், ராக்கியும் 'ஓநாய்' விளையாட்டை அவள் அறையில் விளையாடிக் கொண்டிருந்தபோதுதான் அது நடந்தது.

அந்த ஆட்டத்தை அவர்கள் விளையாட ஆரம்பிக்கும்போது இருவரும் எதிரெதிர் திசையில் இருக்க வேண்டும். பின்னர் இருவரும் ஒருவரையொருவர் நோக்கி உருண்டு வந்து மோதி சின்ன சண்டையுடன் முடிக்க வேண்டும். அவர்கள் அதைப் பல தடவை விளையாடி விட்டு, அதில் இன்னும் ஏதாவது சிக்கல் இருக்க வேண்டும் என முடிவெடுத்தனர். அந்த மாதிரி முடிவை எடுத்தது என்னவோ டோட்டோ-சான்தான். அதாவது இருவரும் உருண்டு வந்து அறையின் நடுவில் மோதிக் கொள்ளும் போது யார் ஓநாய் மாதிரி மூஞ்சியை பயங்கரமாக வைத்துக் கொள்கிறார்களோ அவர்கள்தான் வெற்றி பெற்றதாய் அர்த்தம். ராக்கி ஒரு ஜெர்மன் ஷெப்ஹெர்ட் (shepherd) ஆகையால் ஓநாய் மாதிரி தோற்றமளிப்பது ஒன்றும் அதற்கு கடினமான விஷயமில்லை. அது செய்ய வேண்டியது, காதை துருத்திக் கொண்டு, வாயைத் திறந்து கொண்டு, பல் எல்லாம் வெளியே தெரியும்படி நிற்க வேண்டியது அவ்வளவுதான். அதனால் கண்களைக்கூட பயமுறுத்தும்படி உருட்ட முடிந்தது. ஆனால் டோட்டோ-சானுக்கு அப்படிச் செய்வதில் கொஞ்சம் கஷ்டமிருந்தது. அவள் இரு கைகளையும் தனது தலையின் இரண்டு பக்கமும் காது போல் தோற்றமளிக்குமாறு வைத்துக் கொள்வாள். பிறகு கண்களையும், வாயையும் எவ்வளவு திறக்க முடியுமோ அவ்வளவு தூரம் திறந்து, உறுமிக் கொண்டே ராக்கியை கடிக்கப் போவது போல நடிப்பாள். முதலில் ராக்கி இந்த விளையாட்டை நன்றாகத்தான் விளையாடியது. ஆனால் அது ஒரு நாய்க்குட்டிதானே. இது விளையாட்டு என்பதையே மறந்து, திடீரென அவசர கதியில் டோட்டோ-சானைக் கடித்து விட்டது.

ராக்கி இன்னும் நாய்க்குட்டிதான் என்றாலும், டோட்டோ-சானைப்

போல இரண்டு மடங்கு பெரிசாய் இருந்தது. அதன் பற்கள் மிகவும் கூராகவும் இருந்தன. என்ன நடந்தது என அவள் உணர்வதற்கு முன்னரே, அவளது வலது காது தலையிலிருந்து தொங்கியது. இரத்தம் வெள்ளப் பெருக்கெடுத்து ஓடியது.

அவளது அலறலைக் கேட்டு, அம்மா சமையலறையிலிருந்து அலறி அடித்துக் கொண்டு வந்தாள். டோட்டோ-சான் ராக்கியுடன் தனது வலது காதை இரண்டு கைகளாலும் பிடித்தவாறு அறையின் ஒரு மூலையில் இருந்தாள். அவளது சட்டை இரத்தம் ஊற்றி விட்டாற் போலிருந்தது. 'லிவ்விங் ரூமி'ல் வயலின் பயிற்சி செய்து கொண்டிருந்த அப்பாவும் ஓடோடி வந்தார். ராக்கிக்குத் தான் என்னவோ பெரிய தப்பு பண்ணி விட்டோம் என்பது மட்டும் புரிந்தது. அதன் வால் இரண்டு கால்களுக்கு இடையே ஒடுங்கிப் போய் கிடக்க, டோட்டோ-சானைப் பரிதாபமாகப் பார்த்துக் கொண்டு நின்றது.

டோட்டோ-சானால் நினைக்க முடிந்தது என்னவோ இதுதான்... ராக்கியின் மேல் அப்பாவும், அம்மாவும் எக்கச்சக்கமான கோபம் அடைந்து விட்டால், ஒன்று அதை விரட்டிவிடலாம். இல்லையெனில் அதை எங்காவது கொடுத்துவிடலாம். அப்படிச் செய்தால் அதுதான் அவளைப் பொருத்தவரை ரொம்பவும் சோகமான, பயங்கரமான செயல். ஆகவே அவள் ராக்கியின் அருகில் சாய்ந்து கிடந்து, தனது வலது காதைப் பிடித்துக் கொண்டே, "ராக்கியைத் திட்டாதீர்கள்! ராக்கியைத் திட்டவே திட்டாதீர்கள்" என திரும்பத் திரும்ப கதறிக் கொண்டிருந்தாள்.

அம்மாவும் அப்பாவும் அவள் காதுக்கு என்ன நடந்தது என்பதை அறிந்து கொள்ளவே ஆர்வமாய் இருந்தார்கள். ஆகவே அவள் கையை இழுக்க முயன்றார்கள். டோட்டோ-சான் அப்படிச் செய்ய அனுமதிக் காமல், "அது என்னை காயப்படுத்தவில்லை? அதனால் ராக்கிக்கு எந்த இடையூறும் கொடுக்காதீர்கள். எந்த தொந்தரவும் செய்யாதீர்கள்_" எனக் கதறினாள். டோட்டோ-சான் உண்மையிலேயே வலியை அந்த நேரம் உணரவில்லை. அவளால் நினைக்க முடிந்தது எல்லாம் ராக்கி, ராக்கி, ராக்கி மட்டும்தான்.

ரத்தம் தாரை, தாரையாய் வடிந்தது. முடிவாய் அம்மாவும் அப்பாவும் ராக்கிதான் கடித்திருக்க வேண்டும் என்பதை உணர்ந்து கொண்டார்கள். அவர்கள் ராக்கியை ஒன்றும் செய்ய மாட்டோம் என உறுதியளித்த பின்னர், டோட்டோ-சான் கையை எடுத்தாள். அவள் காது தொங்குவதைப் பார்த்து, அம்மா அலறிவிட்டாள். அப்பா தனது சின்னப் பெண்ணை, அம்மா முன் நடக்க, டாக்டரிடம் தூக்கிச் சென்றார். நல்ல வேளையாக, சரியான நேரத்தில் சிகிச்சையைத் தொடங்கி விட்டதால், முன்னர் இருந்த மாதிரியே டாக்டரால் காதைச் சரியாகப் பொருத்த முடிந்தது. அதற்குப் பிறகுதான் அவளின் பெற்றோர்கள் ஆறுதலாய் உணர்ந்தார்கள். ஆனால் டோட்டோ-சானோ, அம்மாவும், அப்பாவும் உறுதியளித்த மாதிரி ராக்கியைத் திட்டாமல் இருப்பார்களா எனக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தாள்.

டோட்டோ-சான் தலையிலிருந்து கன்னம் வரைக்கும் 'பாண்டேஜ்'

போட்டுக் கொண்டு வீட்டிற்குப் போனாள். அவளைப் பார்த்தால் வெள்ளை எலியைப் போல தோன்றியது. ராக்கியை திட்டக் கூடாது என உறுதி செய்து கொடுத்திருந்தாலும், அப்பா எப்படியாவது ஒரு படிப்பினை புகட்ட வேண்டும் என விரும்பினார். ஆனால் அம்மா "உங்கள் சத்தியத்தை தயவு செய்து காப்பாற்றுங்கள்" என்று சொல்வது போல அப்பாவை ஒரு பார்வை பார்த்தாள். அதனால் அப்பா விருப்பம் இல்லாமல் சும்மா இருந்தார்.

டோட்டோ-சான் வீட்டிற்குள் விரைந்தாள். அவள் எவ்வளவு சீக்கிரத்தில் முடியுமோ அவ்வளவு சீக்கிரத்தில் ராக்கியைப் பார்த்து எல்லாம் சரியாகிவிட்டது, யாராலும் உனக்கு இனி தொந்தரவு இருக்காது எனத் தெரிவிப்பதில் ஆர்வமாய் இருந்தாள். ஆனால் அவளால் ராக்கியை எங்கும் காண முடியவில்லை. முதல் முறையாக அவள் கதறி அழுதாள். டாக்டரிடம்கூட அவள் அழவில்லை. ஏனென்றால் தான் அப்படி அழுதால், ராக்கி மேலுள்ள கோபம் தனது பெற்றோர்களுக்கு அதிகமாகும் எனப் பயந்தாள். ஆனால் இப்போது அவளது கண்ணீருக்கு எதுவுமே தடை போட முடியவில்லை. "ராக்கி! ராக்கி! எங்கே போனாய்?" என்று அழைத்துக் கொண்டே அழுதாள்.

இப்படி பல முறை அழைத்த பின்னர், அவளது கண்ணீர் கறை பிடித்த முகம், அவளுக்கு பழக்கமான அந்த பழுப்பு முதுகு மெல்ல சோபாவின் பின்புறமிருந்து வெளியே வந்தபோது, சிரிப்பாய் மலர்ந்தது. டோட்டோ-சானின் அருகில் சென்று, பாண்டேஜ் ஊடே நீட்டிக் கொண்டிருந்த அவளது நல்ல இடது காதை ராக்கி நக்கியது. டோட்டோ-சான் தனது கரங்களை ராக்கியின் முதுகைச் சுற்றிப் போட்டு அதன் காதுக்குள் முகர்ந்து பார்த்தாள். அம்மாவும், அப்பாவும் ராக்கி டோட்டோ-சான் இருவரது உடலிலும் ஒரே மாதிரி வாசனை வருகிறது என்பார்கள். இருந்தாலும் டோட்டோ-சான் அந்த மணத்தை மிகவும் விரும்பவே செய்தாள்.

ராக்கியும், டோட்டோ-சானும் களைப்பாய் இருந்ததால், தூக்கமாய் உணர்ந்தார்கள்.

கோடைகால முடிவின் நிலவு தோட்டத்தின் மேற்புறம் இருந்து, இனி 'ஓநாய்' விளையாட்டே விரும்பாத 'பாண்டேஜ்' போட்ட அந்த சிறுமியையும், நாயையும் பார்த்தது. அவர்கள் இருவரும் முன்னர் இருந்ததைக் காட்டிலும், இப்போது நெருங்கிய நண்பர்களாகி இருந்தார்கள்.

## விளையாட்டுப் போட்டி நாள்

டோமோயில் விளையாட்டுப் போட்டி நவம்பர் மூன்றாம் நாள் ஒவ்வொரு வருடமும் நடக்கும். தலைமையாசிரியர் ஒரு பெரிய நீண்ட ஆய்வுக்குப் பின்னர்தான், அந்த நாளை முடிவு செய்திருந்தார். இலையுதிர் கால நாளான நவம்பர் மூன்றாம் நாளில் எப்போதெல்லாம் மழை பெய்தது எனக் கணக்கெடுத்தால் அப்படி வரும் நாள் சொற்பமே. பருவநிலை புள்ளிகளைச் சேகரிக்கும் அவரது ஆர்வத்தின் விளைவாக இவ்வாறு தேர்ந் தெடுத்திருக்கலாம். அல்லது சூரியனும், மேகங்களும் அவரது

ஆசையை அந்த நாளில் கவனமாய்க் கேட்டு நிறைவேற்றுவதாய் இருக்கலாம். எது எப்படியோ, மழை, குழந்தைகள் ஆர்வமாய் எதிர்பார்க்கும் போட்டிகளைக் கெடுத்துவிடக் கூடாது என்பதே அவருடைய உள்ளார்ந்த விருப்பம். குழந்தைகள் விளையாட்டுப்போட்டி நாளுக்கு முந்தைய நாளே மைதானத்தை நன்றாக அலங்காரம் செய்து எல்லா வகையான தயாரிப்பையும் முடித்து விடுவார்கள். எப்படி இருந்தபோதிலும், அன்றைக்கு மழை பெய்யாதது எல்லோருக்கும் ஒரு புரியாத புதிராகவே இருந்தது.

எல்லாமே டோமோயில் வித்தியாசமாக செய்யப்படுவது போலவே, விளையாட்டு நாளும் விசித்திரமாய் இருக்கும். மற்ற ஆரம்பப் பள்ளியில் இருப்பது போல இங்கேயும் நடத்தப்படும் போட்டிகள், கயிறு இழுக்கும் போட்டியும், மூன்று கால் ஓட்டம் மட்டுமே ஆகும். மற்ற அனைத்துப் போட்டிகளும், தலைமையாசிரியரால் கண்டு பிடிக்கப்பட்டவை. எந்தவித விசேஷமான அல்லது கடினமான சாதனங்களையும் பயன்படுத்தாமல் இந்த விளையாட்டுகள் அனைத்தும் பழக்கமான, தினமும் பயன்படுத்தும் பள்ளிப் பொருட்களில் இருந்து தயாரிக்கப்பட்டவை.

உதாரணத்திற்கு 'கார்ப்' போட்டி ('கார்ப்' ஒரு சுத்த நீர் மீன்). பெரிய குழாய் வடிவ கொடிகள்—சிறுவர் நாள் விழாவின் போது துருவங்களில் பறக்குமே அந்த மாதிரி கொடிகள்—'கார்ப்' மாதிரி வடிவமைக்கப்பட்டு, வண்ணம் பூசப்பட்டிருக்கும். 'சிக்னலி'ல் இருந்து, குழந்தைகள் 'கார்ப்'பை நோக்கி ஓடி, அதன் வாய் வழியே உள்ளே நுழைந்து, ஊர்ந்து வால் வழியே வந்து, மறுபடியும் ஆரம்பித்த இடத்திற்கே வந்து விட வேண்டும். ஒரே நேரத்தில் மூன்று 'கார்ப்'கள் இருந்தன. ஒன்று சிவப்பு, மற்ற இரண்டும் நீலம். ஆகையால் ஒரே நேரத்தில் மூன்று குழந்தைகள் போட்டியில் கலந்து கொள்ளலாம். இந்தப் போட்டி மிக எளிது போல தோன்றினாலும், உண்மையிலே கடினமானது. 'கார்ப்' உள்ளே இருட்டாக இருக்கும். 'கார்ப்' மிகவும் நீளமாக இருக்கிறபடியால், உள்ளே ஊர்ந்து போகும்போது 'திசை உணர்வு' எளிதாகப் போய்விடும். டோட்டோ-சான் உட்பட பல குழந்தைகள், வாய் வழியாகவே வெளியே வந்து, தாங்கள் 'திசை உணர்வு' தவறி வெளியே வந்ததையும், தவறையும் உணர்ந்து, மறுபடியும் வேகமாக உள்ளே போவார்கள். குழந்தைகள் முன்னேயும், பின்னேயும் உள்ளே ஊர்வதால், உயிரோடுள்ள 'கார்ப்' நெளிவது போல அது தோற்றம் அளிக்கும். அந்தத் தோற்றம் பார்ப்பதற்கு அவ்வளவு வேடிக்கையாக இருக்கும்!

இன்னொரு போட்டி... 'அம்மாவைக் கண்டுபிடிக்கும்' போட்டி 'சிக்னலில்' இருந்து குழந்தைகள் பக்கவாட்டில் தாங்கப்பட்டுள்ள ஏணியை நோக்கி ஓடவேண்டும். ஏணியின் படிகள் ஊடே ஊர்ந்து, ஒரு கூடையிலுள்ள உறையிடப்பட்ட கடிதத்தின் உறையை உடைத்து, கடிதத்தில் எழுதியிருக்கும் வாசகத்தைப் படிக்க வேண்டும். உதாரணத்திற்கு அதில் "சாக்கோ-சானின் அம்மா" என எழுதியிருந்தால், அந்தக் குழந்தை பார்வையாளர்கள் கூட்டத்திற்கு சென்று, சாக்கோ சானின் அம்மாவைக் கண்டுபிடித்து, அவர் கையைப் பிடித்துக் கொண்டு அவர்களுடன் முடிவுக் கோட்டைத் தொடவேண்டும். பூனை மாதிரி லாவகத்துடன்

மிகவும் தளர்வாய் ஏணியில் ஊடுருவிப் போக வேண்டும். இல்லை யென்றால் வயிறு தட்டும். அதற்கு மேலும், குழந்தைக்கு 'சாக்கோ-சானின்' அம்மாவைத் தெரிந்திருக்க வேண்டும். கடிதத்தில் 'செல்வி ஒகுவின் சகோதரி' என்றோ, 'திரு டிசியுவின் அம்மா' என்றோ, 'திருமதி குனிநோரியின் மகன்' என்றோ இருக்கும். அவர்கள் இதற்கு முன் சந்திக்காதவர்களாய் இருந்தால், அந்தக் குழந்தை பார்வையாளர்கள் பகுதிக்குச் சென்று, 'செல்வி ஒகுவின் சகோதரி' என சத்தம் போட்டுக் கூப்பிட வேண்டும். தங்கள் அம்மாவையே அழைக்க பேறு பெற்ற அதிர்ஷ்டசாலி குழந்தைகள் "அம்மா, அம்மா... சீக்கிரம்..." எனக் கூவிக் கொண்டு குதித்துக்கொண்டு வரும். பார்வையாளர்களும் இந்த போட்டியின் போது கவனமாக இருக்க வேண்டும். எப்போது அவர்கள் பெயர் அழைக்கப்படலாம் என்பது அவர்களுக்குத் தெரியாது. தாங்கள் அமர்ந்திருக்கும் பெஞ்சிலிருந்தோ, பாயில் இருந்தோ எழுந்து செல்வதற்கு எப்போதும் அவர்கள் தயாராக இருக்க வேண்டும். அவர்கள் அழைக்கப் பட்டதும், வேகமாக எழுந்து, தனக்காகக் காத்திருக்கும் குழந்தையிடம், எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரத்தில் அடைந்து, அதன் கையைப் பிடித்துக் கொண்டு ஓட வேண்டும். ஒரு குழந்தை வந்து பார்வை யாளர்கள் கூட்டத்தில் நின்று பார்த்தால், எல்லா அம்மாமார்களும் யாரைக் கூப்பிடப் போகிறார்களோ என மூச்சைப் பிடித்துக் கொண்டு நிற்பார்கள். கதையளந்து கொண்டிருக்கவோ, உணவைக் கொறிக்கவோ கொஞ்சங்கூட நேரம் கிடைக்காது. பெரியவர்களும் குழந்தைகளைப் போலவே ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் பங்கெடுத்துக் கொள்ள வேண்டும்.

தலைமையாசிரியரும் மற்ற ஆசிரியர்களும், கயிறு இழுக்கும் போட்டியின் போது, குழந்தைகளின் இரண்டு அணியிலும் சேர்ந்து கொள்வார்கள். கயிறை இழுத்துக் கொண்டு, "ஹாவி-ஹோ, ஹாவி-ஹோ" என சப்தமிடுவார்கள். கயிறை இழுக்க முடியாத உடல் ஊனமுற்ற யசுயாகி-சானைப் போன்ற குழந்தைகள், நடுவில் கயிற்றில் கட்டப்பட்டுள்ள கைக்குட்டையின் மீது கண்ணைப் பதித்து யார் வெற்றி பெற்றார்கள் என்பதை முடிவு செய்வார்கள்.

கடைசியாக மொத்தப் பள்ளியே கலந்து கொள்ளும், தொடர் ஓட்டமும் டோமோயில் வித்தியாசமாக இருக்கும். யாரும் நெடுந்தொலைவு ஓட வேண்டியதில்லை. எல்லோரும் செய்ய வேண்டியது, அசெம்பிளி ஹாலுக்கு போகும் அரைவட்ட கான்கிரீட் படிக்கட்டுகள் மேலும், கீழும் ஓட வேண்டியதுதான். முதல் பார்வையில் இது ரொம்ப எளிமையானது போலத் தோன்றும். அதில் படிக்கட்டுகள் மிகவும் உயரம் இல்லாமலும், நெருக்கமாயும் இருக்கும். யாரும் ஒரே நேரத்தில் ஒரு படிக்கட்டுக்கு மேல் கடக்கக்கூடாது. அதனால் உயரமாயும், பெரிய கால்களையும் உடையவர்களுக்கு இது மிகவும் கஷ்டமாகி விடும். மதிய உணவு நேரத்தின்போது தினமும் தாவிக் குதிக்கும் அந்தப் பழக்கமான படிக் கட்டுகள், விளையாட்டுப்போட்டி நாளின் போது புதிய வேடிக்கையான அம்சமாக மாறி விடுகிறது. குழந்தைகள் படிக்கட்டுகளின் மேலும் கீழும் சந்தோஷமான கூச்சலுடன் விரைந்து கொண்டிருப்பார்கள். தூரத்திலிருந்து

இதைப் பார்க்கும் யாருக்கும், இது ஒரு கலைடாஸ்கோப் போல் தோற்றமளிக்கும். நெருக்கமான, உயரமில்லாத படிக்கட்டுகளும் தொடர்ந்து ஒரு சமதளமும் பிறகு படிக்கட்டுகளும், பிறகு சமதளமுமாய் அந்த அசெம்பிளி ஹால் செல்லும் பாதை அமைந்துள்ளதால், மேலிருந்து எண்ணினால் எட்டு சமதளங்கள்தான் கண்ணில் தெரிவதால், மொத்தத்தில் எட்டு படிக்கட்டுகள்தான் இருப்பது போல் தோன்றும்.

தலைமையாசிரியர் தீர்மானித்து வைத்திருந்த அந்த நாள்தான், டோட்டோ-சானுக்கும், அவளது வகுப்புத் தோழர்களுக்கும் முதல் விளையாட்டுப் போட்டி நாள். போட்டி நாளுக்கு முந்தைய நாள், குழந்தைகள் அலங்காரத்திற்காகச் செய்து வைத்திருந்த, தங்க நட்சத்திரமும், காகிதச் சங்கிலிகளும், 'போனாகிராப்' ஒலிப்பதிவுகள் ஏற்படுத்திய உற்சாகமான மார்ச்சிங் சத்தங்களும் விழாக்கோலம் பூண வைத்தன.

டோட்டோ-சான் கடற்படையினர் பயன்படுத்தும் நீல கால் சட்டையும், வெள்ளை 'பிளவுசு'ம் அணிந்திருந்தாள். ஆனாலும் அவளுக்கு 'அதெலடிக் ப்ளூமர்' அணிவதுதான் பிடிக்கும். அதற்காகப் பலநாள் அவள் ஏங்கிக் கொண்டிருந்தாள். ஒருநாள் பள்ளி முடிந்ததும், தலைமை யாசிரியர் யூரித்மிக்ஸ் வகுப்பை சில 'கிண்டர்கார்டன் டீச்சர்'களை நடத்துமாறு விட்டிருந்தார். அப்போதுதான் சில பெண்கள் அணிந்திருக்கும் 'ப்ளூமர்' டோட்டோ-சானைக் கவர்ந்தது. அந்தப் பெண்கள் காலைத் தரையில் பதித்து எவ்வும்போது ப்ளூமருக்கு கீழே பொதுமிக் கொண்டிருக்கும் சிற்றலையான வளர்ச்சியுற்ற தொடைகள்தான் டோட்டோ-சானுக்கு மிகவும் பிடித்திருந்தது. அவள் வீட்டை ஓடிவந்து அடைந்ததும், தன்னுடைய கால் சட்டையைப் போட்டுக் கொண்டு, தரையில் எவ்விக் குதித்துப் பார்த்தாள். ஆனால் அவளது குழந்தைத்தனமான சின்னத் தொடையில் எந்தவிதமான சிற்றலைகளும் பொதுமவில்லை. பல தடவை முயற்சித்த பின்பு, அந்த பெண்கள் அணிந்திருக்கும் அந்த உடையினால்தான் அப்படி வருகிறது என்ற முடிவுக்கு வந்தாள்... அது என்னவென அம்மாவிடம் விசாரித்தாள். அம்மா 'அதெலடிக் ப்ளூமர்' என்று விளக்கினாள். அவள் அம்மாவிடம் 'விளையாட்டு நாள்' போது தான் அந்த மாதிரி ஒன்று அணிய விரும்புவதாகக் கூறினாள். அவ்வளவு சின்ன அளவிற்கு ப்ளூமர் கிடைக்கவில்லை. அதனால்தான் டோட்டோ-சான் பொதுமிக் கொண்டிருக்கும் சிற்றலைகளை உருவாக்காத அந்தக் கால்சட்டையை அணிய வேண்டிய பரிதாப நிலைக்குத் தள்ளப்பட்டாள்.

விளையாட்டு நாளில் சில ஆச்சரியங்கள் நடந்து விடுகின்றன. சின்னக் கரங்களையும், கால்களையும் கொண்டு பள்ளியிலேயே மிகவும் குள்ளமாய் தோற்றமளிக்கும் தாகாஹாஷிதான் எல்லாவற்றிலும் முதலில் வந்தான். அது நம்பமுடியாதது. மற்றவர்கள் 'கார்ப்'பிற்குள் ஊர்ந்து கொண்டிருக்கும்போது, தாகாஹாஷி தீப்பொறிபோல் வெளி வந்துவிடுவான். மற்றவர்கள் ஏணியில் தலையை வைக்கும் போது, அவன் ஏணி வழியே முழுதும் புகுந்து, பல அடிகள் முன்னேறி ஓடிக் கொண்டிருப்பான். அசெம்பிளி ஹால் படிக்கட்டில் நடக்கும் தொடர்

ஓட்டத்தைப் பொறுத்தவரை, மற்றவர்கள் அபஸ்வரமாய் படிக்கட்டு களுடன் முண்டு கட்டுகையில், தாகாஹாஷி தனது சின்னக் கால்கள் 'பிஸ்டன்' போல் இயங்க, மேலும் கீழும் வேகமாய் ஓடும் திரைப்படத்து மாந்தர்கள் போல் ஓடுவான்.

மாணவர்கள் எல்லாம் சொல்லிக் கொள்ளுவார்கள்... "நாங்கள் எப்படியாவது முயற்சித்து தாகாஹாஷியைத் தோற்கடிப்போம்... "

அவனைத் தோற்கடிக்க உறுதி பூண்டு, குழந்தைகள் தங்கள் சக்தியெல்லாம் திரட்டி, முடிந்த எல்லாவற்றையும் செய்து பார்த்து விட்டார்கள். ஆனால் வெற்றி தாகாஹாஷிக்குதான்.. டோட்டோ-சானும் எவ்வளவோ முயன்றாள்- ஆனால் அவளால் தாகாஹாஷியை வெல்லவே முடிந்ததில்லை. அவர்களால் நேரடிப் போட்டியில் எளிதாக ஓடியே வென்றுவிட முடியும். ஆனால் இந்த மாதிரி சிக்கலான போட்டியில்தான், அவனிடம் தோற்றுப் போனார்கள்.

தாகாஹாஷி பரிசுகளைப் பெற மிகவும் பெருமிதத்துடனும், சந்தோஷத்துடனும் போனான். அவன்தான் எல்லாவற்றிலும் முதலாய் இருப்பதால், பரிசுகளுக்குப் பின்னால் பரிசாய் பெற்றுக் கொண்டிருந்தான். எல்லோரும் பொறாமையுடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

"அடுத்த வருஷம் தாகாஹாஷியைத் தோற்கடிப்பேன்" ஒவ்வொரு குழந்தையும் தங்களுக்குள் சொல்லிக் கொள்ளுவார்கள். ஆனால் ஒவ்வொரு வருடமும் தாகாஹாஷிதான் 'நட்சத்திர அத்தெலட்'டாக மிளிர்வான்.

பரிசுகளில்கூட தலைமையாசிரியரின் தனித்துவம் தெரியும்.. முதல் பரிசு பெரிய்ய முள்ளங்கியாய் இருக்கும். இரண்டாம் பரிசு இரண்டு 'பர்டாக்' வேராக இருக்கும். மூன்றாம் பரிசு ஒரு கொத்து 'ஸ்பினாச்'- இப்படிப்பட்ட பொருட்கள்தான்... ரொம்ப பெரியவளாகிறவரைக்கும் டோட்டோ-சான் காய்கறிகள்தான் விளையாட்டுப் போட்டிகளில் பரிசாகப் கொடுக்கப்படும் என நினைத்துக் கொண்டிருந்தாள்.

அந்தக் காலத்தில் பெரும்பான்மையான பள்ளிகள் நோட்டுப் புத்தகங்கள், பென்சில்கள், அழிப்பான் போன்றவைகளைதான் பரிசுகளாகக் கொடுத்தன. டோமோயி குழந்தைகளுக்கு இதுவெல்லாம் தெரியாது என்றாலும், அவர்கள் காய்கறிகள் பரிசாக கிடைத்ததற்காக ஒன்றும் சந்தோஷமாக இல்லாமல் இல்லை... உதாரணத்திற்கு, 'பர்டாக்' வேரும், சில வெங்காயங்களையும் பரிசாகப் பெற்ற டோட்டோ-சானுக்கு அதை ரயிலில் எடுத்துச் செல்ல தயக்கமாகத்தான் இருந்தது. பல்வேறு வகையான அதிகப்படியான பரிசுகளும் வழங்கப்படுவதால், விளையாட்டுப் போட்டிநாளின் முடிவில் எல்லா டோமோயி குழந்தை களும் ஏதாவது ஒருவகைக் காய்கறிகளைக் கையில் பெற்றிருப்பார்கள். அப்படி இருக்கும்போது, குழந்தைகள் பள்ளியிலிருந்து வீட்டிற்கு காய்கறிகளை எடுத்துச் செல்ல ஏன் தயங்க வேண்டும்? யாராவது, அம்மா கடைக்குப்போய் காய்கறி வாங்கி வரச் சொன்னால் பொருட்படுத்து வார்களா? அப்படி இருக்கும்போது, பள்ளியிலிருந்து வீட்டிற்குக் காய்கறிகள் கொண்டு செல்வதற்குத் தயங்குவது என்பது விந்தையானது அல்லவா?

முட்டைக்கோஸைப் பரிசாக வென்ற ஒரு குண்டுப் பையனுக்கு

அதை வைத்து என்ன செய்வது என்று தெரியவில்லை.

"இதை சுமந்து செல்வதை, மற்றவர்கள் பார்ப்பது, எனக்குப் பிடிக்கவில்லை ஆகவே இதை தூர எறிந்து விடலாம் என எண்ணுகிறேன்."

தலைமையாசிரியர் காரட்டுகளையும், முள்ளங்கிகளையும், மற்ற பொருட்களையும் பரிசுகளாகப் பெற்ற குழந்தைகளிடம் போகும்போது, இந்தக் குறைபாட்டை செவிமடுத்திருக்க வேண்டும்.

"என்ன விஷயம்? இவற்றை நீ விரும்பவில்லையா?" என்று அவர் கேட்டார். பிறகு அவர் தொடர்ந்தார், "உங்கள் அம்மாக்களிடம் இன்று இரவு உணவிற்கு இதை சமைக்கச் சொல்லுங்கள். இவையெல்லாம் நீங்களே உங்களுக்காக வென்ற காய்கறிகள்... நீங்கள் உங்கள் உழைப்பால் உங்கள் குடும்பத்திற்கு உணவு ஏற்பாடு செய்துள்ளீர்கள். அது எப்படி இருக்கும் ...? நிச்சயமாய் சுவையாய் இருக்கும்... நான் வேண்டுமானால் பந்தயம் கட்டுகிறேன்... அது நிச்சயம் சுவையாய் இருக்கும்."

அவர் சொன்னது சரியாகக்கூட இருக்கலாம். உதாரணத்திற்கு டோட்டோ-சான் அவளுடைய வாழ்க்கையிலேயே இரவு உணவிற்காக ஏதாவது தருவது என்பது முதல் தடவையாகும்.

"நான் அம்மாவை 'வாசனையூட்டப்பட்ட பர்டாக்' செய்யச் சொல்வேன்" என்று தலைமையாசிரியரிடம் சொன்னாள். "ஆனால் வெங்காயத்தை வைத்து அம்மாவை என்ன செய்யச் சொல்வது என்பதை நான் இன்னும் முடிவு செய்யவில்லை".

'மெனு'வை யோசித்து வைத்திருந்த மற்ற மாணவர்களும் அதை தலைமையாசிரியரிடம் விளக்கினார்கள்...

"நல்லது- இப்போது எல்லோருக்கும் என்ன செய்ய வேண்டுமென்று ஒரு கருத்து உருவாகிவிட்டது..." கன்னங்கள் சிவப்பேற மிகவும் சந்தோஷமாய் இதை சொல்லிக்கொண்டே அவர் சிரித்தார்... அவர் விளையாட்டுப் போட்டி நிகழ்ச்சிகளில் வென்ற காய்கறிகளைக் குழந்தை களும், அவர்களது குடும்பமும் சாப்பிட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும் என ஒருவேளை நினைத்திருக்கலாம்.

முதல் பரிசினால் 'சாப்பாட்டு மேஜை' முழுவதும் காய்கறிகள் நிரம்பி வழியும் தாகாஹாஷிக்கு தனது உயரம் குறித்தும், தான் இனி வளரவே மாட்டோம் என்ற உண்மையை உணர்ந்தும் தாழ்வு மனப்பான்மை வருவதற்குப் பதில், தன் வெற்றி குறித்துப் பெருமையும், சந்தோஷமும் வரவேண்டும் என்பதற்காக, விளையாட்டுகளைத் தலைமையாசிரியர் வடிவமைத்திருக்கிறார் என்பதில் கிஞ்சிற்றும் சந்தேகமில்லை. தலைமை யாசிரியர் டோமோயில் 'மாதிரிப் போட்டிகளை', தாகாஹாஷி முதலில் வரவேண்டும் என்பதற்காகவே கூட வடிவமைத்திருக்கலாம். யாருக்குத் தான் அந்த உண்மை தெரியும்?

## கவிஞர் இசா

குழந்தைகள் தங்கள் தலைமையாசிரியரை "இசா கோபயாஷி" என அழைக்கவே விரும்பினார்கள். அவர்கள் அவரைக் குறித்து பாசக்

கவிதைகளைக் கீழ்க்கண்டவாறு இயற்றியிருந்தார்கள்...

"இசா கோபயாஷி!
வழுக்கைத் தலையுடன் கூடிய
இசா எங்கள் கிழவர்"

ஏனென்றால், பத்தொன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த, தலைமையாசிரியர் பெரிதும் விரும்பிய 'ஹைகூ' கவிஞர் இசா கோபயாஷியின் குடும்பப் பெயரும், தலைமையாசிரியரின் குடும்பப் பெயரும் (கோபயாஷி) ஒன்றாகவே இருந்தன. அவர் அடிக்கடி இசாவின் ஹைகூவை மேற்கோள் காட்டுவார். அதனால் குழந்தைகள் தங்கள் தலைமையாசிரியர் சோசாகு கோபயாஷி தங்களுக்கு எவ்வளவு நண்பரோ, அந்த அளவுக்கு இசா கோபயாஷியும் நண்பர் என்றுதான் கருதினார்கள்.

தலைமையாசிரியர், இசாவின் ஹைகூ கவிதைகளை மிகவும் விரும்பினார். ஏனென்றால் அவை அவ்வளவு சத்தியமாகவும், மிகவும் சாதாரணப் பொருட்களைப்-பற்றியும் இருந்தன. அப்போது ஆயிரக் கணக்கான ஹைகூ கவிஞர்கள் இருந்த போதிலும், இசா யாரும் பாவனை செய்ய முடியாத தனியொரு உலகத்தைப் படைத்துவிட்டார்... அவரது கவிதைகளின் குழந்தைத்தனமான எளிமையில் தலைமையாசிரியர் மயங்கி விட்டார்- ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும், தனது மாணவர்களுக்கு இசாவின் கவிதைகளைக் கற்பிப்பார். அதனாலேயே அது இப்படி மனப்பாடமாய் ஆகியிருக்கும்.

'இளைத்த தவளையே,
நீ சரணடையாதே!
இசா உன் பக்கத்தில் இருக்கிறேன்.'
சிறகு முளைத்த தவிட்டுக் குருவிகளே!
வழி விடுங்கள், வழி விடுங்கள்,
உயர் குதிரைக்கு வழி விடுங்கள்.
ஈயை விட்டு விடுங்கள்!
தனது கைகளை ஏந்தி, தனது கால்களால் மண்டியிட்டு
உங்கள் கருணையை யாசிக்கிறது!"

தலைமையாசிரியர் இந்தப் பாடலுக்கான இன்னிசைக்கு மெருகூட்ட எல்லோரும் பாடினார்கள்.

அவர்கள் பாடத் திட்டத்தில் ஒரு பகுதி இல்லையென்றாலும், தலைமையாசிரியர் 'ஹைகூ' வகுப்புகளை அடிக்கடி நடத்துவார்.

காமிக்-துண்டுப் பாத்திரமான தெரு சுற்றும் கறுப்பு நாயான நோராகுரோ பற்றி டோட்டோ-சான் இயற்றிய ஹைகூ கவிதைதான், ஹைகூ சம்பந்தமான அவளது கன்னி முயற்சி- அந்த நாய் ஒரு தனியராய் இராணுவத்தில் சேர்ந்து, பல உயர்வு, வீழ்ச்சிக்கு நடுவே பல பதவி உயர்வுகளை சம்பாதிக்கிறது- இக்கதை ஒருபேர் பெற்ற குழந்தைப் பத்திரிக்கையில் வந்து கொண்டிருந்தது.

'கண்டத்தை நோக்கிக் கிளம்பி விட்டது
தெரு நாய் கருப்பு - அது தான்
பட்டாளத்திலிருந்து வெளியே வந்தாயிற்றே!'



வா என்னோடு விளையாடு          சின்ன நாடோடியே



உனக்குத்    தான்    அம்மா    இல்லையே

தலைமையாசிரியர் சொல்லுவார்... "உங்கள் மனதில் இருக்கும் எதையாவது பற்றி நேர்மையாக, நேரடியாக சொல்ல முயற்சி செய்யுங்கள்"

டோட்டோ-சானின் கவிதைகளை சரியான 'ஹைகூ' என்று சொல்ல முடியாது. ஆனால் அவளது குழந்தைப்பருவத்தில் எந்த மாதிரியான விஷயங்கள் எல்லாம் அவளைக் கவர்ந்தன என்பதை அவளது ஹைகூ காண்பித்தது. அவளது ஹைகூ, சாதாரண ஹைகூ அமைப்பு 5-7-5 க்குள் வரவில்லை. அவளுடையது 5-7-7. ஆனால் இசாவின் 'சிறகு முளைத்த தவிட்டுக் குருவியே' என்ற ஜப்பானிய ஹைகூ கூட 5-8-7 தான். ஆகவே டோட்டோ-சான் தான் எழுதிய ஹைகூ சரி என்று நம்பினாள்.

குகோன்புட்சு கோவிலுக்கு 'வாக்' போகும் போதும் சரி; மழை பெய்து வெளியே விளையாட முடியாத போது, அவர்கள் அசெம்பிளி ஹாலில் கூடும்போதும் சரி, டோமோயின் இசா கோபயாஷி குழந்தைகளுக்கு ஹைகூ பற்றிச் சொல்லுவார். அவரும் வாழ்க்கையைப் பற்றியும், இயற்கையைப் பற்றியும் விவரிப்பதற்காக ஹைகூவைப் பயன்படுத்துவார்.

இசாவின் கவிதைகள் சில டோமோயிக்காகவே எழுதப்பட்டது போல தோன்றும்.

'பனிக்கட்டிகள் உருக ஆரம்பித்தன-
திடீரென முழுக்க முழுக்க கிராமமே
குழந்தைகளால் நிரம்பி வழிந்தது!'

## மிகவும் விந்தையானது

டோட்டோ-சான் வாழ்க்கையில் முதல் முதலாய் ஒரு காசைக் கண்டெடுத்தாள். அது அவள் பள்ளியிலிருந்து ரயிலில் பயணம் செய்யும் போது கிடைத்தது. அவள் ஓய்மாச்சி ரயிலில் ஜீயுகோகாவில் ஏறினாள். ரயில் அடுத்த நிலையமான மிபோரிகவோகாவை அடையும்போது ஒரு சரியான வளைவு வரும். ரயில் 'கிரீச்' சத்தத்துடன் ஒரு பக்கம் இலேசாக சரியும். அவள் தனது கால்களைச் சரியாக ஊன்றி, 'ஊப்ஸ்' ஆகாதபடி பார்த்துக் கொள்வாள். அவள் எப்போதும் ரயிலின் கடைசியில் வலது கைப்பக்க கதவருகேதான் நிற்பாள். ஏனென்றால் அவள் இறங்க

வேண்டிய ஸ்டேஷனின் பிளாட்பாரம் வலது பக்கம் இருப்பதால், அவள் அப்படி நிற்பாள்.

அன்றைக்கு ரயில் வளைந்து வழக்கம் போல் 'கிரீச்' சத்தம் கேட்கும்போது, அவளது காலருகே காசு போல ஏதோ இருப்பதைக் கண்டாள். இதே மாதிரி காசு என்று நினைத்து ஏதோ ஒன்றை எடுத்து அது சட்டைப் பொத்தானாக இருப்பதைக் கண்டு இதற்கு முன்னமே அவள் ஒரு முறை ஏமாந்திருக்கிறாள். அதனால் அது என்னவென்று சரியாக முதலிலேயே பார்த்து விட வேண்டுமென நினைத்தாள். ரயில் வளைவு முடிந்து நேர் பாதையில் சென்று கொண்டிருக்கும் போது, தனது தலையை நேராகக் கீழே திருப்பி கவனமாகப் பார்த்தாள். அது நிச்சயமாய் பைசாதான். ஒரு ஐந்து சென் காசு. யாரோ பக்கத்தில் உள்ளவர்கள் இதைத் தவற விட்டிருக்க வேண்டும். அது ரயில் வளையும் போது உருண்டு, உருண்டு இங்கு வந்திருக்க வேண்டும் என அவள் நினைத்தாள். ஆனால் யாரும் டோட்டோ-சானின் பக்கத்தில் நின்றிருக்கவில்லை. அவள் என்னதான் செய்யவேண்டும் எனப் புரியாமல் விழித்தாள். உனக்கு எங்காவது தவற விடப்பட்ட பணம் கிடைத்தால், போலீஸ்கார ரிடம் கொடுக்க வேண்டும் என யாரோ சொன்னது அவள் நினைவுக்கு வந்தது. ஆனால் ரயிலில் எந்தப் போலீசும் இல்லை அல்லவா?

அதற்குக் கொஞ்சம் கழித்து, 'கண்டக்டர் கம்பார்ட்மெண்ட்' திறந்தது. கண்டக்டர் டோட்டோ-சான் இருந்த கம்பார்ட்மெண்டுக்குள் நுழைந்தார். டோட்டோ-சான் தன்னையும் அறியாமல், தனது வலது காலை அந்த ஐந்து சென் காசு மேல் வைத்தாள். கண்டக்டருக்கு அவளைத் தெரியுமாதலால், அவளைப்பார்த்து புன்னகைத்தார்... டோட்டோ-சானால் முழுசாய் மனந்திறந்து சிரிக்க முடியவில்லை. காலின் கீழ் உள்ளது குற்ற உணர்வாய் உறுத்தியது. அவளால் முடிந்தது என்னவோ, ஒரு அசட்டு சிரிப்புதான்; அதை வைத்தே சமாளித்துக் கொண்டாள். அப்போதுதான் அவள் இறங்க வேண்டியதற்கு முந்திய ஸ்டேஷனான ஓகயமாவில் ரயில் நின்றது. அவளுக்கு இடது பக்கம் உள்ள கதவு திறந்தது. நிறைய பயணிகள் எதிர்பாராத விதமாய் உள்ளே நுழைந்ததால், டோட்டோ-சான் பயணிகளின் முழங்கையாலும், உடலாலும் தள்ளப்பட்டாள். டோட்டோ-சான் தனது வலது காலை எடுக்கும் எண்ணமே இல்லாததால், காலைப் பலமாக ஊன்றி நின்றாள். அப்படிச் செய்யும் போது, அவளுக்கு ஒரு எண்ணம் உதயமானது. ரயிலை விட்டு இறங்கியதும், காசை எடுத்துக் கொண்டு போலீஸ்காரரிடம் ஒப்படைத்து விட வேண்டும் என நினைத்தாள். பிறகு மற்றொரு எண்ணம் தோன்றியது. யாராவது பெரியவர்கள், அவள் காலுக்கடியில் இருந்து காசு எடுப்பதைப் பார்த்தால், அவளை திருடி என நினைத்துக் கொள்வார்கள். அந்தக் காலத்தில் ஐந்து சென் காசுக்கு ஒரு சின்ன பாக்கெட் 'எரிந்த சர்க்கரை' அல்லது ஒரு சாக்லேட் கட்டி வாங்கலாம். பெரியவர்களைப் பொறுத்தவரை அது பெரிய தொகை இல்லாவிட்டாலும், டோட்டோ-சானுக்கு அது பெரிய தொகைதான். ஆகையால் என்ன செய்வது என புரியாது வருந்தினாள்...

"இதுதான் சரி" தனக்குத்தானே சொல்லிக் கொண்டாள். "நான் மெல்ல, 'என் காசை தவற விட்டு விட்டேன்... அதை எடுக்க வேண்டும்' என சொல்லி, காசை எடுத்துக் கொள்ள வேண்டும்... பிறகு எல்லோரும் அது என்னுடையதுதான் என நினைத்துக் கொள்வார்கள்... "

ஆனால் உடனே இன்னொரு பிரச்சினை எழுந்தது... "நான் அப்படிச் சொன்னால், எல்லோரும் என்னைப் பார்ப்பார்கள்.. அப்போது யாராவது 'அது என்னுடையது' என்று சொல்லிவிட்டால், என்ன செய்வது?"

இப்படிப் பல திட்டங்களை யோசித்த பின்பு, அவள் இறங்க வேண்டிய நிலையமும் அருகில் வருவதால், 'ஷூலேஸ்' கட்டுவது போல நடித்து முழங்காலிட்டு அமர்ந்து, காசை ரகசியமாக எடுத்துக் கொள்வது சரியான வழி என முடிவெடுத்தாள்... அது கச்சிதமாக நிறைவேறியது. ஐந்து சென் நாணயத்தைக் கையில் பிடித்துக் கொண்டு 'பிளாட்பார்ம்'மில் இறங்கியதும், அவள் வியர்வையால் நனைந்திருந்தாள். முழு சக்தியையும் இழந்தது போல உணர்ந்தாள். போலீஸ் நிலையம் மிகவும் தொலைவில் இருந்ததால், அங்கு போய் காசை ஒப்படைத்தால், வீட்டிற்குப் போக நேரமாகி விடும். அம்மா வருத்தப்படுவாள். ரொம்ப கஷ்டப்பட்டு யோசித்ததில், இப்படித்தான் செய்ய வேண்டும் என அவள் ஸ்டேஷன் படிக்கட்டுகளில் இருந்து இறங்கும் போது தீர்மானித்துக் கொண்டாள்.

"அதை ஒரு ரகசியமான இடத்தில் வைப்பேன். பின்னர் நாளை பள்ளிக்கு எடுத்துச் சென்று மற்றவர்களது அறிவுரையையும் கேட்பேன். நிச்சயமாக இதை அவர்களிடம் காட்டியே ஆக வேண்டும். ஏனென்றால் அவர்களில் யாரும் இதற்கு முன்னர் இப்படி நாணயத்தைக் கண்டெடுத்த தில்லை.."

அவளுக்கு நாணயத்தை எங்கு மறைப்பது எனத் தெரியவில்லை. அதை வீட்டிற்கு எடுத்துச் சென்றால், அம்மா என்னவென்று கேட்பாள். ஆகவே வேறு எங்காவது மறைத்து வைக்க வேண்டும்.

ஸ்டேஷன் அருகில் இருந்த ஒரு புதர் மேல் ஏறினாள். யாரும் அவளை அங்கு காண முடியவில்லை. அந்தப் புதர்மேல் யாரும் ஏற மாட்டார்கள். அதனால் அதுதான் மிகவும் பாதுகாப்பான இடம். ஒரு குச்சியை வைத்து சின்னக் குழி தோண்டினாள். அந்த விலைமதிக்க முடியாத ஐந்து சென் நாணயத்தை அதற்குள் போட்டு, மண்ணினால் மூடினாள். ஒரு ஒழுங்கற்ற வடிவமுள்ள கல்லை எடுத்து அதன் மேல் அடையாளமாக வைத்தாள். பிறகு அவள் எதுவும் பேசவே இல்லை. வீட்டை நோக்கி ஓரே ஓட்டமாய் ஓடினாள்.

இரவு நெடு நேரம் வரைக்கும், டோட்டோ-சான் அம்மாவிடம் அமர்ந்து பள்ளியைப் பற்றி ஏதாவது பேசிக் கொண்டிருப்பாள்... அம்மா "இது படுக்கப் போக வேண்டிய நேரம்" என சொல்லும் வரைக்கும் பேச்சு ஓயாது.. ஆனால் அன்றைய இரவு, எதுவும் சளசளக்காமல் விரைவிலேயே படுக்கைக்குச் சென்று விட்டாள்...

ஏதோ முக்கியமான வேலையை செய்து முடித்தாக வேண்டும் என்பது போல, அடுத்த நாள் காலையிலேயே விழித்து விட்டாள். தனது

ரகசியப் பொக்கிஷத்தை நினைத்ததும், அவள் சந்தோஷத்தில் மலர்ந்தாள்.

வீட்டைவிட்டு சீக்கிரமே புறப்பட்டு, ராக்கியுடன் போட்டிப் போட்டுக் கொண்டு ஓடி வந்து, புதர் மேல் ஏறினாள்.

"இங்கேதான் இருக்கு! இங்கேதான் இருக்கு!"

கல் அடையாளம், அவள் விட்டுச் சென்ற மாதிரி அப்படியே இருந்தது-

"நான் உனக்கு ஒரு அருமையானதைக் காட்டுகிறேன்..." என்று ராக்கியிடம் சொல்லிவிட்டு, கல்லை நீக்கி, கவனமாக அங்கு தோண்டினாள். ஆனால் ஐந்து சென் நாணயம் அதிசயமாய் காணவில்லை- அவள் எப்போதுமே இவ்வளவு ஆச்சரியம் அடைந்ததில்லை. யாரும் அவள் மறைத்து வைக்கும்போது பார்த்தார்களா அல்லது கல் அடையாளம் மாறிவிட்டதா என புரியாமல் வியந்தாள். அவள் அடையாளத்தை சுற்றி எல்லா இடத்திலும் தோண்டிப் பார்த்துவிட்டாள். ஐந்து சென் நாணயம் எங்குமே கிடைக்கவில்லை. அதை டோமோயி நண்பர்களிடம் காட்ட முடியவில்லையே என்பதைக் காட்டிலும், அது எப்படி காணாமல் போனது என்ற விநோதம்தான் அவளை ஏமாற்றத்திற்குள்ளாக்கியது...

அதற்குப் பிறகு அவள் அந்த வழியாய் போகும்போதெல்லாம், அந்த புதரின் மேலேறி, தோண்டிப் பார்ப்பாள்... ஆனால் அவளால் அந்த ஐந்து சென் நாணயத்தைக் கண்டெடுக்கவே முடியவில்லை.

"ஒரு வேளை மூஞ்செலி தூக்கிச் சென்றிருக்குமோ?" என அவள் நினைத்துப் பார்ப்பாள்... அல்லது "நான் இப்படிக் கனவுதான் கண்டேனோ?" அல்லது "நான் மறைப்பதை ஒரு வேளை கடவுள் பார்த்திருப்பார்-" ஆனால் எவ்வளவுதான் இது சம்பந்தமாய் யோசித்துப் பார்த்தாலும், அது புரியாத புதிராய்தான் இருந்தது... இந்தப் புதிரான நிகழ்ச்சியை, அவளால் மறக்கவே முடியவில்லை...

## உங்கள் கைகளால் பேசுவது

ஒரு மதியம், டோட்டோ-சானை விட சிறிது மூத்த இரு பையன்களும், ஒரு பெண்ணும், "கல், காகிதம், கத்திரி" விளையாடுவதற்கு நிற்பது போல, ஜீயுகோகா ஸ்டேஷனில் டிக்கெட் கேட் அருகே நின்று கொண்டிருந்தார்கள். ஆனால் அவர்கள் வழக்கத்திற்கும் அதிகமான சைகைகளைத் தங்கள் விரல்கள் மூலமாய் காட்டியதை டோட்டோ-சான் கவனித்தாள். அது பார்ப்பதற்கு எவ்வளவு வேடிக்கையாக இருக்கிறது! அவள் அவர்கள் அருகில் சென்றாள்... அதனால் இப்போது நன்றாகக் காண முடிந்தது... அவர்கள் சத்தம் ஏற்படுத்தாமல், சைகைகளாலேயே தங்களுக்குள் பேசிக் கொண்டிருந்தார்கள். ஒருவர் கைகளாலேயே நிறைய சைகைகளை காட்டுகிறார்... இதை கவனித்த இன்னொருவர் உடனே ஏராளமான வேறு வகையான சைகைகளைக் காட்டுகிறார். மூன்றாவது நபர் ஒரு சில சைகைகளே காட்டுகிறார். உடனே மூவரும் சிரிப்பிற்குள் மூழ்குகிறார்கள். ஆனால் பெரியளவு சத்தம் ஏற்படாதவாறு பார்த்துக் கொள்ளுகிறார்கள். அவர்கள் மூவரும் தங்களுக்குள் சந்தோஷமாய்

அனுபவித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் மூவரையும் கொஞ்ச நேரம் கவனித்த டோட்டோ-சான், அவர்கள் கைகளாலேயே பேசுகிறார்கள் என்ற முடிவுக்கு வந்தாள்.

"என்னாலும் கைகளால் பேச முடியவேண்டும் என நான் விரும்புகிறேன்" என பொறாமையுடன் அவள் நினைத்துக் கொண்டாள். அவள் அவர்களிடம் போய்ச் சேர்ந்து கொள்ளகூட விரும்பினாள். ஆனால் அதற்கு எப்படி கை-சைகைகளினால் கேட்பது என அவளுக்குத் தெரியவில்லை. மேலும் அவர்கள் டோமோயி பள்ளி மாணவர்கள் அல்லாதலால், அப்படிக் கேட்பது சரியாக இராது.. அதனால் அவர்கள் டோக்கியோ ரயில்வே பிளாட்பாரத்தைச் சென்றடையும் வரை, அவர்களைக் கவனித்துக் கொண்டே இருந்தாள்...

"ஒரு நாள் நானும் சைகைகளினால் எப்படி மற்றவர்களிடம் பேசுவது என்பதைக் கற்றுக் கொள்ளப் போகிறேன்.." என முடிவெடுத்துக் கொண்டாள்.

ஆனால் டோட்டோ-சான் இன்னும் செவிட்டு மக்களைப் பற்றி அறிந்திருக்கவில்லை. அல்லது அந்தக் குழந்தைகள் அவள் தினமும் பள்ளிக்குச் செல்லும் ரயில் கடைசியாக நிற்கும் ஸ்டேஷனான ஓய்மாச்சியில் உள்ள முனிசிபல் செவிட்டு மற்றும் ஊமைகள் பள்ளியின் மாணாக்கர்கள் என்பதையும் அறிந்திருக்கவில்லை.

டோட்டோ-சான் அவர்கள் தங்களது மிளிரும் கண்களால் மற்றவர்களது கை விரல்களின் சைகைகளை அவதானிக்கும் பாங்கில் ஏதோ அழகு பொதிந்து இருப்பதாய் கருதினாள். ஒரு நாள் அவர்களையும் தனது நண்பர்களாக்கிக் கொள்ள வேண்டுமென எண்ணினாள்.

## நாற்பத்தேழு ரானின்

திரு.கோபயாஷியின் கல்விமுறை விசேஷத் தன்மை வாய்ந்ததாய் இருந்தாலும், அவரது பெரும்பான்மையான கருத்துகளில் ஐரோப்பிய மற்றும் மேற்கத்திய பாதிப்புகள் இருக்கும். அதை டோமோயின் யூரித்மிக்ஸ், மதிய உணவு வழக்கம், பள்ளி 'வாக்', 'துடுப்பிடு, துடுப்பிடு, படகிற்குத் துடுப்பிடு' என்ற மெட்டில் உள்ள மதிய உணவுப்பாடல் என எல்லா வற்றிலும் காணலாம்.

தலைமையாசிரியரின் வலது கை—மற்ற பள்ளி என்றால் உதவி முதல்வர் என அழைக்கப்படுவார்—திரு. மருயாமா, பல வகைகளில் திரு. கோபயாஷிக்கு நேர் எதிராக இருந்தார். மருயாமா என்றால் 'வட்டக்குன்று' எனப் பொருள். பெயரைப் போலவே அவரது முன்னந்தலை ஒரு முடிகூட இல்லாமல் வட்டமாக இருந்தது. ஆனால் பின்னால் காது அளவிற்கு வெள்ளை முடிகள் பட்டி கட்டியது போல இருக்கும். அவர் வட்டமான கண்ணாடியை அணிந்திருப்பார். அவர் கன்னங்கள் பழுத்து சிவப்பாய் இருக்கும். அவர் திரு. கோபயாஷி போலல்லாமல் முழுவதும் வித்தியாசமாய் இருந்ததோடு மட்டும் அல்லாமல், அவர் காவியத்துவம் வாய்ந்த சீன மாதிரி பாடல்களை ஆழ்ந்த குரலில் அருமையாக இசைப்

பவராயும் இருந்தார்.

டிசம்பர் பதினான்காம் தேதி காலையில், குழந்தைகள் அசெம்பிளி ஹாலில் குழுமியதும் திரு. மருயாமா கீழ்க்கண்டதை அறிவித்தார்.

"கிட்டத்தட்ட இருநூற்றம்பது வருடங்களுக்கு முன்னர் ரத்த சபதம் ஏற்று, தனது எதிரிகளை நாற்பத்தேழு ரானின் கொன்று குவித்த நாள் இதுதான். ஆகையால் நாம் சென்காகுஜீ கோயிலுக்கு நடந்தே போகப் போகிறோம்... உங்கள் பெற்றோர்களுக்கு ஏற்கெனவே இது பற்றி சொல்லியாகிவிட்டது-"

தலைமையாசிரியர் திரு. மருயாமாவின் திட்டத்தை எதிர்க்கவில்லை. திரு. கோபயாஷி என்ன நினைத்தார் என்றால், இது குழந்தைகளது பெற்றோர்களுக்குத் தெரியாது என்று. ஆனால் குழந்தைகளின் பெற்றோர்கள், தலைமையாசிரியர் இதை எதிர்க்கவில்லையென்றாலும், இதற்கு அவர் அனுமதித்திருக்க வேண்டும் என்று அறிந்திருந்தார்கள். எப்படியோ நாற்பத்தேழு ரானின் சமாதியைக் காணப் போகும் டோமோயி குழந்தைகளின் எதிர்பார்ப்பு ஆர்வத்தைத் தூண்டுவதாக இருந்தது.

அவர்கள் புறப்படுவதற்கு முன்னர், திரு. மருயாமா புகழ்வாய்ந்த அந்த நாற்பத்தேழு பேரின் கதையையும் குழந்தைகளுக்குச் சொன்னார். அசனோ ஆண்டவரின் வீரமிக்க நம்பிக்கைக்குரிய மனிதர்கள் பெரும் தீங்கிழைக்கப்பட்டுக் கொல்லப்பட்ட தமது ஆசானின் கீர்த்தியை நிலை நிறுத்த இரண்டு வருடம் எப்படி சதியாலோசனை நடத்தினார்கள் என்பதை விளக்கினார். இவர்கள் நாற்பத்தேழு பேரைத் தவிர, இன்னொரு வீரம் செறிந்த ரிகினி அமேனோயா என்ற வியாபாரியும் இருந்தான். அந்த ரிகினி அமேனோயாதான் அவர்களுக்கு ஆயுதம் தந்து உதவினான். அவன் சோகுன் அதிகாரிகளால் கைது செய்யப்பட்ட போதுகூட மன்னிப்புக் கேட்கவோ அல்லது ரகசியங்களை வெளியிடவோ இல்லை. அதற்கு பதில் அவன் "ரிகினி அமேனோயா ஆகிய நான் ஒரு மனிதன்" என்று மட்டும் சொன்னான். குழந்தைகளுக்குப் பெரிய அளவு ஒன்றும் கதை புரியவில்லை என்றாலும் வகுப்பைத் தவற விடப்போவதற்காகவும், குகோன்புட்சு கோயிலையும் விட தூர உள்ள இடத்திற்கு 'வாக்' வந்து, 'பிக்னிக் மதிய உணவு' அருந்துவது குறித்தும் குதூகலித்துக் கொண்டிருந்தார்கள்.

தலைமையாசிரியரையும், மற்ற ஆசிரியர்களையும் விடுத்து, திரு. மருயாமா தலைமையில் பள்ளியின் ஐம்பது குழந்தைகளும் கிளம்ப ஆரம்பித்தார்கள். இங்கேயும் அங்கேயும் குழந்தைகளின் சந்தோஷக் கூச்சலாய், "ரிகினி அமேனோயா ஆகிய நான் ஒரு மனிதன்" என்ற வார்த்தை ஒலிக்க ஆரம்பித்தது. சிறுமிகள் கூட சந்தோஷக் கூச்சலிட்டுப் போவோர், வருவோர் தங்களைப் பார்த்து சிரிக்கும்படி செய்தார்கள். சென்காகுஜீக்கு அங்கிருந்து ஏழு மைல் இருந்தது. இருந்த போதிலும் அங்கு போகும் மோட்டார் வாகனங்களோ மிகவும் அரிது. டிசம்பர் வானம் நீலம் பாரித்து இருந்தது. குழந்தைகளுக்கோ அவர்கள் எழுப்பும் "ரிகினி அமேனோயா ஆகிய நான் ஒரு மனிதன்" என்ற வெடி வாசகம் அவர்கள் கடக்க வேண்டிய தூரம் அதிகம் இல்லாதபடி ஆக்கிவிட்டது.

அவர்கள் சென்காகுஜீயை அடைந்தவுடன், திரு. மருயாமா ஒவ்வொரு குழந்தைக்கும், ஒரு ஊதுபத்தியும், கொஞ்சம் பூக்களும் தந்தார். அந்த கோயில் குகோன்புட்சு கோயிலைவிடச் சிறியதாகத்தான் இருந்தது. ஆனால் ஒரு வரிசையில் ஏராளமான கல்லறைகள் இருந்தன. இந்த இடம் நாற்பத்தேழு ரானின் நினைவான புனித இடம் என்ற எண்ணமே, டோட்டோ-சானைப் பவித்ரமாய் உணர வைத்தது. அவள் ஊதுபத்தியையும், பூக்களையும் அதற்கே அர்ப்பணித்தாள். பின்னர் திரு. மருயாமா மாதிரியே தலையை வணங்கி அமைதியாய் இருந்தாள். ஒரு நிசப்தம் எங்கும் பரவியிருந்தது. இவ்வளவு அமைதியாக இருப்பது என்பது டோமோயி குழந்தை களுக்கு வழக்கத்தில் இல்லாத ஒன்று. சமாதி முன்னுள்ள ஊதுபத்தியில் இருந்து கிளம்பிய புகை மேலெழுந்து, வானத்தில் மிக நீண்ட நேரத்திற்கு ஓவியங்களைப் படைத்துக் கொண்டிருந்தது.

அதற்குப் பிறகு, ஊதுபத்தியின் மணம் எப்போதுமே குழந்தைகளுக்கு திரு. மருயாமாவையும், ரிகினி அமேனோயாவையும் நினைவூட்டும். மேலும் அந்த ஊதுபத்தியின் மணம் அமைதியின் நறுமணமாய் அவர்களுக்கு ஆனது.

குழந்தைகள் நாற்பத்தேழு ரானின் பற்றிப் புரிந்து கொள்ளாமல்



கூடப் போயிருந்திருக்கலாம். ஆனாலும் அவர்களைப் பற்றி இவ்வளவு ஆர்வத்துடனும் வேகத்துடனும் சொன்ன திரு. மருயாமா மீது குழந்தைகளுக்கு திரு. கோபயாஷி மேல் உள்ளது போலவே ஒரு மரியாதையும், பாசமும் ஏற்பட்டது—ஆனால் ஒரு வித்தியாசமான முறையில். டோட்டோ-சான் அவரது கண்ணாடியின் தடித்த லென்ஸ் வழியாக உற்று நோக்கும் அவரது சிறிய கண்களை மிகவும் விரும்பினாள்; மேலும் இவ்வளவு பெரிய உடம்பிற்குச் சிறிதும் ஒத்துப் போகாத அவரது மெல்லிய குரலையும் மிகவும் விரும்பினாள்.

## மாசோ-சான்

ஸ்டேஷனிலிருந்தும், ஸ்டேஷனுக்கும் டோட்டோ-சான் செல்லும்போது, கொரியன்கள் வாழும் ஒரு குடியிருப்பு வீட்டைக் கடந்து செல்ல வேண்டியிருந்தது. டோட்டோ-சானுக்கு அவர்கள் கொரியன்கள் எனத் தெரிந்திருக்க வாய்ப்பில்லை. அவர்களைப் பற்றி அவளுக்குத் தெரிந்தது எல்லாம், அங்கு ஒரு பெண்மணி இருக்கிறாள் என்றும், அவள் தனது தலைமுடியை நடுவில் இரண்டாகப் பிரித்துக் கட்டி கொண்டை வைத்திருப்பாள் என்றும், குண்டான அவள் படகு போல் முன் வளைந்த ஒரு வெள்ளை ரப்பர் ஷூவை அணிந்திருப்பாள் என்றும் அறிந்திருந்தாள். அந்தப் பெண்மணி நீள 'ஸ்கர்ட்'டுடன் கூடிய ஆடையை அணிந்திருந்தாள். அதன் 'ரிப்பன்' அவளது சின்ன 'ப்ளவுசின்' முன்புறம் வளைத்துக் கட்டப்பட்டிருந்தது. அவள் எப்போதும் பரபரப்புடன் தனது மகனைத் தேடிக்கொண்டு, 'மாசோ-சான்' என்றழைப்பாள். பின்னர் தொடர்ந்து தனது மகனை அழைத்துக் கொண்டே இருப்பாள். எல்லோரும் அழைப்பது போல,'மசவா-சான்' என அழைப்பதற்குப் பதில், இரண்டாவது எழுத்திற்கு அழுத்தம் கொடுத்து, 'சானை' உச்ச கட்டையில் அவள் அழுத்தி அழைப்பது டோட்டோ-சானுக்கு வருத்தம் தோய்ந்த குரலாய் ஒலிக்கும்.

அந்தக் குடியிருப்பு ஓய்மாச்சி ரயில் தடம் செல்லும் அந்தச் சின்ன கரையில் அப்படியே பின்னால் இருந்தது. டோட்டோ-சானுக்கு 'மசவா-சான்' யார் என்று தெரியும். டோட்டோ-சானை விட கொஞ்சம் பெரியவன். அவன் எந்தப் பள்ளிக்குச் செல்கிறான் எனத் தெரியாவிட்டாலும், அவன் இரண்டாம் கிரேடு படிப்பவனாக இருக்க வேண்டும். அவனது தலை முடிகள் எப்போதும் கலைந்து கிடக்கும். அவனுடன் எந்த நேரமும் ஒரு நாய் சுற்றிக் கொண்டிருக்கும். ஒரு நாள் டோட்டோ-சான் ரயில் தடக்கரை வழியாய் வீட்டிற்கு நடந்து சென்று கொண்டிருக்கும்போது மசவா--சான் ரயில் தடக்கரையின் மேல் கால்களை விரித்துக் கொண்டு, கைகளை இடுப்பில் வைத்துக் கொண்டு, வெறி பிடித்தாற்போல் நின்று கொண்டிருந்தான்.

"கொரியன்" என அவன் டோட்டோ-சானைப் பார்த்துக் கத்தினான்.

அவன் குரலில் புண்படுத்தும் நோக்கமும், வெறுப்பும் மண்டிக் கிடந்தது. டோட்டோ-சான் ரொம்பவும் புண்பட்டு போனாள். அவள் அவனுக்கு எதுவுமே செய்ததில்லை. ஏன் அவனுடன் பேசியதுகூட

இல்லை. ஆகவே அவன் மேலேயிருந்து வன்மமாய் மொழிந்த போது திடுக்கிட்டுப் பார்த்தாள்.

அவள் வீட்டிற்கு வந்ததும் இது பற்றி அம்மாவிடம் சொன்னாள். "மசவா-சான் என்னைக் கொரியன் என்று அழைத்தான்" என்று அவள் சொன்னாள். அம்மா உடனே அவள் வாயைக் கைகளால் பொத்தினாள். அவள் கண்கள் கண்ணீரால் நிரம்பியிருந்தன. என்னவோ மோசமாக நடந்திருக்கிறது என நினைத்து டோட்டோ-சான் பதறிப்போனாள். அம்மா இன்னும் தனது கண்களைத் துடைப்பதை நிறுத்தவில்லை. அவளது மூக்கின் நுனி கன்றிப் போய் சிவந்திருந்தது. "பரிதாபமான குழந்தை!" என அம்மா அனுதாபப்பட்டாள். "எல்லோரும் அவனைக் 'கொரியன், கொரியன்' என அடிக்கடி அழைத்து இம்சை செய்திருக்க வேண்டும். அதனால் அதை அவன் 'மோசமான வார்த்தை' என நினைத்துக் கொண்டிருக்கிறான். அவன் இன்னும் சிறுவனாய் இருப்பதால் அப்படிச் சொல்வதற்கு என்ன அர்த்தம் என்பது அவனுக்குப் புரிந் திருக்காது. யாராவது ஒருவனை 'நீ முட்டாள்' என்று சொல்வதற்கு, 'பாகா' என்று சொல்கிறார்களே, அப்படியொரு வார்த்தை என நினைத் திருந்திருப்பான். தன்னை நோக்கி, 'கொரியன்' என்ற பதம் அதிகமாக பிரயோகப்படுத்தப்படுவதைக் கண்டு, தானும் அந்த மாதிரியான 'மோசமான வார்த்தை'யை யாரையாவது நோக்கி பிரயோகப்படுத்த வேண்டும் என நினைத்திருக்கிறான். அதனால்தான் அவன் உன்னை 'கொரியன்' என அழைத்திருக்கிறான். மக்கள் ஏன் இப்படிக் கொடுமையாக நடந்து அவனை வெறுப்பேற்றுகிறார்களோ ?"

அம்மாவின் கண்கள் காய்ந்ததும், மெல்லிய குரலில் டோட்டோ-சானிடம் சொன்னாள், "நீ ஒரு ஜப்பானிச்சி. மசவா-சான் கொரியா என்ற நாட்டில் இருந்து இங்கு வந்திருக்கிறான். ஆனாலும் அவனும் உன்னை மாதிரி ஒரு குழந்தைதான். என்னருமை டோட்டோ-சான், நீ எப்போதும் மக்களுக்குள் பல வகைகள் இருப்பதாக நினைக்காதே... 'இவன் ஜப்பானியன்... அல்லது இவன் கொரியன்' என்று எண்ணாதே. மசவா-சானுடன் மென்மையாக நடந்து கொள். அவன் கொரியன் ஆனதால், அவன் மென்மையானவன் அல்லன் என்று மற்றவர்கள் நினைப்பது மிகவும் துக்ககரமானது."

இதைப் புரிந்து கொள்வதற்கு டோட்டோ-சானுக்குக் கடினமாக இருந்தது. இருந்தாலும் அவள் புரிந்து கொண்டது என்னவோ மசவா-சான் என்ற சிறுவனிடம் எந்தவிதக் காரணமும் இல்லாமல் மக்கள் மோசமாக பேசுகிறார்கள் என்பது மட்டும்தான். அதனால்தான் அவன் அம்மா எப்போதும் ஆர்வத்துடன் அவனைத் தேடிக் கொண்டிருக்கிறாளோ, என டோட்டோ-சான் நினைத்தாள். அடுத்த நாள் காலை அந்த ரயில் கரைத்தடம் வழியாக அவள் கடந்து கொண்டிருந்த போது, அந்த அம்மாவின் கீச்சுக் குரலில் "மாசோ-சான்" என ஒலித்தது. அவன் எங்கே போயிருப்பான் என வியந்தாள். அவள் தனது மனதைத் திடப்படுத்திக் கொண்டாள். அவள் கொரியச்சி இல்லை என்றாலும், அவன் அவளை அப்படி அழைத்ததால் இப்படித்தான் பதில் சொல்ல வேண்டும். "நாம்

எல்லோரும் குழந்தைகள்! நாம் எல்லோரும் ஒன்று!!" பிறகு அவனுடன் நட்புறவு கொள்ள வேண்டும்...

மசவா-சானின் அம்மாவின் குரல், ஆவலும் அவதியும் கலந்து தனக்கேயுரிய இயல்புடன், காற்றுடன் நெடுநேரம் தங்கியிருக்கும்- அந்த வழியே கடக்கும் ரயில் சத்தத்தால் விழுங்கப்படும் வரைக்கும் அந்த குரல் அதிர்ந்து கொண்டிருக்கும்.

"மாசோ-சாாாாான்"

நீங்களும் அந்தத் துக்ககரமான, கண்ணீர் நிரம்பிய குரலைக் கேட்டால் பிறகு மறக்கவே மாட்டீர்கள்...

## சடைப்பின்னல்கள்

அப்போது, டோட்டோ-சானுக்கு இரண்டு பெரிய லட்சியங்கள் இருந்தன. ஒன்று 'அத்லெடிக் ப்ளூமர்' அணிவது. மற்றது தனது முடிக்கு சடைப்பின்னல் பின்னிக் கொள்ளுவது. பெரிய பள்ளிப் பிள்ளைகளின் நீண்ட சடையை ரயிலில் செல்லும்போது கவனித்துவிட்டு, தனது முடிக்கும் அந்த மாதிரியே செய்ய விரும்பினாள். தனது வகுப்பில் உள்ள மற்ற குழந்தைகள் எல்லாம், தனது முடிகளைக் குட்டையாக வெட்டி 'பாங்ஸ்' வைத்திருக்கும்போது, டோட்டோ-சான் முடியை நீட்டமாக வளர்த்து, பிரித்து, 'ரிப்பன்' வைத்துக் கட்டியிருப்பாள். அம்மாவுக்கும் இது பிடித்திருந்தது. மேலும் முடியை வளர்க்க வேண்டும். அப்போதுதான் சடை வைக்க முடியும் என நினைத்தாள்.

கடைசியாய் ஒருநாள் அம்மாவை, பின்னல் போட்டு இரண்டு சடை பின்ன வைத்தாள். பின்னலின் முடிவில் ரப்பர் வளையத்தாலும், மெல்லிய ரிப்பன்களாலும் கட்டினாள். கடைசியில் தன்னையும் பெரிய வகுப்புப் பிள்ளை போல உணர்ந்தாள். தன்னை அவள் கண்ணாடியில் நோக்கியபோது, ரயிலில் போகும் பெண்களுக்கு இருப்பது போலல்லாமல் தன்னுடைய சடை சிறுத்தும், குட்டையாகவும், எலிவாலைப் போலவும் இருப்பதாக உணர்ந்தாள். இருந்தாலும் ராக்கியிடம் ஓடிச் சென்று சடை பின்னலைத் தூக்கி அது பார்க்கும்படி பெருமையாய் காட்டினாள். அது இரண்டொரு முறை பார்த்து 'திரு திரு'வென விழித்துக் கொண்டிருந்தது.

"உனது முடிக்கும் பின்னல் போட நான் விரும்புகிறேன்" என்று அதனிடம் சொன்னாள்.

அவள் ரயிலைப் பிடிக்கும்போதுகூட, தனது தலையை அசையாமல் அப்படியே வைத்துக் கொண்டாள். ஏனென்றால் சடை அவிழ்ந்துவிடக் கூடாதாம். 'எவ்வளவு அழகாக இருக்கிறது!' என நினைத்துக் கொண்டாள். இதை யாராவது ரயிலில் பார்த்தால் 'எவ்வளவு அழகாக இருக்கிறது' என சொல்லுவார்கள் என அவள் எதிர்பார்த்தாள். ஆனாலும் யாரும் அப்படி சொல்லவில்லை.

ஆனால் பள்ளிக்குச் சென்றதும், மியோ-சான், சாக்கோ-சான், கிய்கோ ஆவ்கி எல்லோரும் ஒன்றாக ஆச்சரியப்பட்டார்கள். "ஓஓஊஊஊ... பின்னல்!" டோட்டோ-சான் எக்கச்சக்கமாய் மகிழ்ந்து போனாள்.

அதைப்போலதான் மற்றப் பெண்களும் உணர்ந்தார்கள்.

ஆனால் எந்தப் பையனும் இதனால் கவரப்பட்டதாய்த் தெரியவில்லை. ஆனால் மதிய உணவிற்குப் பின், திடீரென 'ஓஇ' என்ற பையன் சத்தம் போட்டுச் சொன்னான். "வாவ்... டோட்டோ-சான் புது தலை வேலைப்பாட்டுடன் வந்துள்ளாள்."

டோட்டோ-சானுக்கு ஒரு பையன் இதைக் கவனித்து விட்டான் என்பது சிலிர்ப்பாக இருந்தது. "இது பின்னல் சடை" எனப் பெருமையாகச் சொன்னாள்.

அவன் அருகில் வந்ததும், சடை இரண்டையும் கையால் பிடித்துக் கொண்டு, "நான் மிகவும் களைப்பாய் இருக்கிறேன். அதனால் இந்த சடையில் கொஞ்ச நேரம் தொங்கிக் கொள்ளுகிறேன். ஹோய், இது ரயிலில் தொங்கும் கைப்பிடியை விட மென்மையாய் உள்ளது" என்றான். ஆனால் தொந்தரவு அத்துடன் நிற்கவில்லை.

"ஓஇ" எலும்பு போலிருந்த டோட்டோ-சானைவிட இரண்டு மடங்கு பெரியவனாக இருந்தான். உண்மையிலேயே வகுப்பில் அவன்தான் ரொம்பவும் பெரிசாவும், குண்டாவும் இருந்த பையன். அதனால் அவன் சடையை இழுத்த இழுப்பில், அப்படியே 'தொப்பென' கீழே விழுந்தாள். விளையாட்டுப் போட்டி நாளில் கயிறு இழுக்கும் போட்டியில், 'ஹைவோ-ஹோ, ஹைவோ-ஹோ' என சத்தம் போட்டு இழுப்பது போல, அவன் அவள் சடையைப் பிடித்துத் தூக்க முயலும்போது, டோட்டோ-சான் அழுகையில் கண்ணீருக்குள் முழுகினாள்.

டோட்டோ-சானைப் பொருத்தவரை, சடைப்பின்னல் பெரிய பெண்களின் அடையாளச் சின்னம். ஆகவே சடைப்பின்னல் போட்டிருப்பதால், எல்லோரும் அவளிடம் மிகவும் பணிவன்புடன் நடந்து கொள்வார்கள் என அவள் எதிர்பார்த்தாள். அழுதுகொண்டே, அவள் தலைமையாசிரியர் அலுவலகத்தை நோக்கி ஓடினாள். அவள் அழுது கொண்டே கதவைத் தட்டுவதைக் கேட்ட தலைமையாசிரியர், கதவைத் திறந்து, அவளது தலையின் அளவிற்கு தன் தலையை சரித்து, அவளைப் பார்த்தார்.

"என்னம்மா நடந்தது?" என அவர் கேட்டார்.

இன்னும் தனது சடைப் பின்னல்கள் ஒழுங்காய் இருக்கிறதா என்பதைத் தானே பரிசோதித்துக் கொண்ட பின்பு, "ஓஇ இவற்றை 'ஹைவோ-ஹோ, ஹைவோ-ஹோ' என்று சொல்லி இழுத்தான்" என்றாள்.

தலைமையாசிரியர் அவளது முடியைப் பார்த்தார். அவளது கண்ணீர் வடியும் முகத்திற்கு அப்படியே முரண்பாடாய் அவளது சடைப்பின்னல் சந்தோஷமாய் நடனமாடுவது போலத் தோன்றியது. அவர் தனது நாற்காலியில் அமர்ந்து, டோட்டோ-சானும் தன்னுடைய முகத்தைப் பார்க்கும்படி அமர வைத்தார். வழக்கம் போல, தனது தொலைந்து போன பற்களைப் பற்றிய கவலையே இல்லாமல், அவர் சிரித்தார்.

"அழாதே!" அவர் சொன்னார். "உனது முடி மிகவும் பிரமாதமாய் உள்ளது"

"உங்களுக்குப் பிடிக்கிறதா?" வெட்கத்துடன், கண்ணீர் கறை படிந்த

முகத்தைத் தூக்கி கேட்டாள்.

"பிடிக்கிறதான்னு கேள்வியே கேட்கக் கூடாது. அவ்வளவு பிடிக்குது."

டோட்டோ-சான் அழுகையை நிறுத்திவிட்டு, தனது நாற்காலியில் இருந்து எழுந்தாள். "நான் இனி அழவே மாட்டேன். 'ஓஇ' இனி 'ஹாவோ-ஹோ' என்றாலும் கூட..."

தலைமையாசிரியர் மீண்டும் சிரிப்புடன் இதைத் தலையை அசைத்து ஆமோதித்தார். டோட்டோ-சானும் சிரித்தாள். இந்த சிரிப்பு முகம்தான் அவள் பின்னல் சடைக்கு எடுப்பாய் இருந்தது. தலைமையாசிரியருக்குத் தலைவணங்கி வணக்கம் செலுத்திவிட்டு, திரும்பவும் ஓடி, மற்ற குழந்தைகளுடன் சேர்ந்து விளையாடினாள்.

அவள் கிட்டத்தட்ட அழுததையே மறந்து விட்டாள். அப்போதுதான் 'ஓஇ' தலையைச் சொறிந்து கொண்டு, அவள் முன்னால் நின்றான்.

"நான் உன் சடையை இழுத்ததற்காக வருந்துகிறேன்..." அவன் சத்தமான, தட்டையான குரலில் சொன்னான். "தலைமையாசிரியர் இதற்காக என்னைத் திட்டினார். அவர் பெண்களிடம் நீ மென்மையாக நடந்து கொள்ள வேண்டும் என்றார். பெண்களிடம் நுட்பமாய் நடந்து கொள்ள வேண்டும் என்றும், அவர்களை நன்றாகக் கவனித்துக் கொள்ள வேண்டுமெனவும் அவர் அறிவுறுத்தினார்."

டோட்டோ-சான் அப்படியே ஆச்சரியத்தில் ஆழ்ந்தாள். இதற்கு முன் யாரும் பெண்களிடம் மென்மையாக நடந்து கொள்ள வேண்டும் எனச் சொல்லி அவள் கேட்டதே இல்லை. பையன்கள்தான் எப்போதுமே முக்கியமானவர்கள். நிறைய குழந்தைகள் இருக்கும் அவளுக்குத் தெரிந்த குடும்பங்களில் எல்லாம், மதிய உணவின்போதும், சிற்றுண்டியின்போதும் உணவு முதலில் பையன்களுக்குத்தான் பறிமாறப்படும். இதற்குச் சின்னப் பெண்கள் ஏதாவது பேசினால், உடனே அவர்களது அம்மாமார்கள் சொல்லுவார்கள். "சின்னப் பெண்கள் பார்க்கத்தான் செய்ய வேண்டும்-கேட்கக் கூடாது... "

இப்படி எல்லாம் இருக்கும்போது, 'ஓஇ'யிடம் தலைமையாசிரியர், பெண்களை நன்றாகப் பார்த்துக்கொள்ள வேண்டும் என்கிறார். இது டோட்டோ-சானுக்கு மிகவும் விநோதமாகத் தோன்றியது. இது எவ்வளவு அருமையானது என அவள் வியந்தாள். அப்படிப் பெண்களைப் பார்த்துக் கொள்வது என்றால் அதுவும் இனிமையானதுதானே...

'ஓஇ'யைப் பொருத்தவரை, இது ஒரு அதிர்ச்சி. பெண்களிடம் மென்மையாகவும், நுட்பமாகவும் இருக்க வேண்டுமாம்! மேலும் 'ஓஇ'யைப் பொருத்தமட்டில், அதுதான் முதலும், கடைசியுமாய் தலைமையாசிரியரிடம் திட்டு வாங்குவது. ஆகவே, அவன் அந்த நாளை மறந்திருக்கவே மாட்டான்.

## 'தேங்க்யூ'

புத்தாண்டு விடுமுறை நெருங்கி விட்டது. கோடை விடுமுறையைப் போல, குழந்தைகள் பள்ளியில் கூடமாட்டார்கள். தங்கள் முழு நேரத்தையும்,

தங்கள் குடும்பத்துடனே கழிப்பார்கள்.

"நான் எனது புத்தாண்டை 'ஹியுக'வில் இருக்கும் எனது தாத்தாவுடன் கழிக்கப் போகிறேன்" மிட்டிகா எல்லோரிடமும் சொல்லுவாள். டாய்-சான் விஞ்ஞான பரிசோதனை செய்வதில் விருப்பம் கொண்டவன். ஆகையால், "நான் என்னுடைய மூத்த அண்ணனுடன் ஒரு பௌதிக பரிசோதனைச் சாலையைப் பார்க்கப் போகிறேன்" என்பான். அதை எதிர்பார்த்து அவன் காத்திருந்தான். "நல்லது. நாம் சந்திப்போம்." என்று ஒவ்வொருவரும் தங்களது திட்டங்களை மற்றவர்களுக்கு சொல்லிப் பிரிந்தார்கள்.

டோட்டோ-சான் அம்மாவுடனும், அப்பாவுடனும், பனிச்சறுக்கு விளையாடச் சென்றாள். அப்பாவின் இசைக்குழுவில் நடத்துனராயும், 'செல்லிஸ்'டாகவும் இருந்த அப்பாவின் நண்பர் ஹிடோ சைட்டோவுக்கு ஷிகா பீடபூமியில் ஒரு அழகிய வீடு இருந்தது. ஒவ்வொரு குளிர்காலத்திலும், அவர்கள் அவருடன் தங்குவது வழக்கம். டோட்டோ-சான் கிண்டர் கார்டன் படிக்கும்போதே எப்படிப் பனிச்சறுக்குவது என்பதைக் கற்க ஆரம்பித்திருந்தாள்.

குதிரை இழுக்கும் 'ஸ்லெய்க்' வாகனத்தில் நாமிருக்கும் இடத்திலிருந்து பனிச்சறுக்கும் இடத்திற்குச் செல்ல வேண்டும். பனிச்சறுக்கு ஊர்தியாலோ வேறு பொருட்களினாலோ சிறிதும் உடையாத, அங்கும் இங்கும் சில மரங்களைக் கொண்ட, ஒரு தூய வெள்ளைப் பனிப் பரப்புதான் பனிச்சறுக்கு இடம். சைட்டோ மாதிரி வீடு இல்லாதவர்கள் போவதற்கு, அங்கு ஜப்பானிய தங்குமிடம் ஒன்றும், மேற்கத்திய பாணி ஹோட்டல் ஒன்றும்தான் உள்ளது என அம்மா சொன்னாள். இருந்தாலும் பல வெளிநாட்டினர்கள் வந்த வண்ணம் இருந்தார்கள்.

டோட்டோ-சானுக்கு, இந்த வருடம் போன வருடத்திற்கும் வித்தியாசமாய் இருந்தது. ஆனால் இப்போது அவள் தொடக்கப் பள்ளியின் முதல் கிரேடு மாணவி. மேலும் அவளுக்கு ஒரு ஆங்கில வார்த்தையும் தெரியும். அப்பா 'தேங்க் யூ'வை எப்படிச் சொல்ல வேண்டும் என அவளுக்குப் படிப்பித்திருந்தார்.

அவள் பனிச் சறுக்கும் போது, அவள் அருகில் சறுக்கிச் செல்லும் வெளிநாட்டினர்கள் எப்போதும் ஏதாவது சொல்லுவார்கள். அவர்கள் ஒருவேளை, "அவள் மிகவும் அழகு இல்லையா?" அல்லது அது போன்ற வேறு ஏதாவதாக ஒன்றை சொல்லியிருக்கலாம். ஆனால் டோட்டோ-சானுக்கு இவையெல்லாம் புரியாது. இந்த வருடம் வரை இவற்றிற்கெல்லாம் அவளால் எந்த பதிலும் அளிக்க முடிந்ததில்லை. ஆனால் இப்போது தலையை ஆட்டிக் கொண்டு, 'தேங்க்யூ' என்று சொல்லி விடலாம்.

இப்படிச் சொன்னதும் வெளிநாட்டினர்கள் இன்னும் சிரித்து, தங்களுக்குள் ஏதோ பேசிக் கொள்வார்கள். சில நேரங்களில் சில பெண்கள் குனிந்து தங்கள் கன்னத்தை டோட்டோ-சானின் கன்னத்துடன் ஒற்றுவார்கள். சில ஆண்கள் அவளைத் தழுவிக் கொள்வார்கள். 'தேங்க்யூ' என்ற ஒரு வார்த்தையினால் எவ்வளவு பேருடன் நண்பர்களாக முடிகிறது என்பதே வேடிக்கைதான் என டோட்டோ-சான் எண்ணிக்கொண்டாள்.

ஒருநாள் ஒரு இனிய மனிதர் டோட்டோ-சானிடம் வந்து

சமிக்ஞையாலேயே "எனக்கு முன்னால் பனிச் சறுக்கியில் அமர்ந்து வர உனக்கு விருப்பமா?" எனக் கேட்டார். அப்பா அவளால் அப்படி முடியும் என்று கூறினார்.

டோட்டோ-சான், "தேங்க்யூ" என பதிலளித்தாள். அவர் டோட்டோ-சானின் கால்களை இழுத்து, தனது பனிச் சறுக்கியின் கால்புறம் டோட்டோ-சானை அமரச் செய்தார். பின்னர் இருவரது பனிச் சறுக்கி களையும் இணைத்து, டோட்டோ-சானும் சேர்ந்து ஷிகா பீடபூமியின் மென்மையும், நீளமுமான வழியில் வழுக்கிச் சென்றார். அவர்கள் காற்று போல சென்றார்கள். அப்போது காற்று காதைக் கிழித்துக் கொண்டு பின்னால் சென்றது. 'விசில்' சத்தத்தை உருவாக்கியது. டோட்டோ-சான் அவரது முழங்காலை இறுக்கமாய் தழுவிக் கொண்டாள். தான் முன்னே தவறி விழாமல் இருப்பதற்கான எல்லா கவனத்தையும் எடுத்துக் கொண்டாள். இது கொஞ்சம் பயங்கரமான விளையாட்டு என்றாலும், மிகவும் சந்தோஷமானது. அவர்கள் முடிவிற்கு வந்து நின்றதும், இதைக் கவனித்தவர்கள் எல்லோரும் கைதட்டி பாராட்டினார்கள். அந்த மனிதரது பனிச்சறுக்கியில் இருந்து விடுபட்டதும், தன்னைக் கவனித்து கைதட்டிய வர்களை நோக்கி தலை வணங்கி 'தேங்க்யூ' என்றாள். அவர்கள் மேலும் கைதட்டினார்கள்.

ரொம்ப நாளைக்குப் பிறகுதான் அவளுக்கு அந்த விஷயமே தெரிந்தது. அவளைச் பனிச்சறுக்கக் கூட்டிச் சென்ற அந்த மனிதர் பெயர் ஸ்நெய்டர்- வெள்ளி ப்பனிச்சறுக்குக் கோல்களைப் பனிச்சறுக்கப் பயன் படுத்தும் அவர் உலகப் புகழ்பெற்ற ஒரு பனிச்சறுக்கு வீரர். அவர்கள் அந்தச் சறுக்கில், சறுக்கி முடித்ததும், எல்லோரும் கைதட்டிக் கொண்டிருந்தார்கள். அவரும் அவளுக்குப் பின்னால் அவளது கைகளைத் தூக்கி கூட்டத்தினருக்கு வணக்கம் செலுத்தி, 'தேங்க்யூ' என்றார். அது அவளையும் முக்கியமான நபராக மதித்து காரியம் ஆற்றுவது போல இருந்தது. டோட்டோ-சான் அதில் நெகிழ்ந்து போனாள். ஆம், அவர் அவளைக் குழந்தையாகவே நடத்தவில்லை. உண்மையான பெண்மணி போலவே நடத்தினார். அவர் வணக்கம் செய்யக் குனிந்தபோதே, டோட்டோ-சானின் மனத்தில் தன்னுணர்வாலேயே, 'இவர்தான் நாகரிகமான மென்மையான மனிதர்' என்பது தெரிந்தது. அவருக்குப் பின்னால் படர்ந்திருந்த அந்த பனி-வெள்ளை இயற்கைக் காட்சி முடிவில்லாமல் போய் கொண்டிருப்பது போலத் தோன்றியது.

## புத்தகசாலை ரயில்வண்டி

மாரிக்கால விடுமுறை முடிந்து குழந்தைகள் பள்ளிக்குத் திரும்பியதும், அவர்கள் புதிய அற்புதமான ஒன்றைக் கண்டார்கள். சந்தோஷக் கூச்சல் களால் தங்கள் கண்டுபிடிப்பைக் கொண்டாடினார்கள். அவர்களது வகுப்புகள் உள்ள ரயில் வண்டிக்கு எதிர்புறமாய், அசெம்பிளி ஹாலின் மலர்ப் படுகைக்கு ஒட்டினாற்போல், ஒரு புதிய ரயில் வண்டி நின்று கொண்டிருந்தது. அவர்கள் விடுமுறையில் இருந்த காலத்தில், அது புத்தக

சாலையாகி இருந்தது! அதற்காக ரியோ-சான், அவர்கள் பள்ளிக் காவலாளி, கடுமையாக உழைத்திருக்க வேண்டும். எல்லோருடைய மரியாதைக்கும் உரிய அவரால்தான் இவ்வளவு கடுமையான வேலைகளைச் செய்ய முடியும். அவர் ரயில் வண்டியில் ஏராளமான, 'ஷெல்பு'களாக மாட்டியிருந்தார். 'ஷெல்பு'கள் அனைத்தும் எல்லா வகையான, எல்லா நிறத்திலுமான புத்தக வரிசைகளால் நிரம்பி வழிந்தன. அங்கே உட்கார்ந்து கொண்டு படிப்பதற்கு வசதியாக நாற்காலியும் மேஜையும்கூட போடப்பட்டிருந்தது.

"இது உங்கள் புத்தகசாலை" தலைமையாசிரியர் சொன்னார். "இதிலுள்ள எந்தப் புத்தகத்தை வேண்டுமானாலும், யார் வேண்டுமானாலும் படிக்கலாம். சில புத்தகங்கள் சில குறிப்பிட்ட கிரேடு மாணவர்களுக்குத்தான் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது என்பது போன்ற பயமெல்லாம் வேண்டாம். உங்களுக்குப் பிடித்த எந்த நேரம் வேண்டுமானாலும் இங்கு வரலாம். உங்களுக்கு ஏதாவது ஒரு புத்தகம் தேவைப்பட்டால், வீட்டுக்குக் கூட எடுத்துச் செல்லலாம். ஆனால் அதைப் படித்து முடித்த பின், புத்தகசாலைக்குக் கண்டிப்பாய் திருப்பிக் கொடுத்து விட வேண்டும். மற்றவர்கள் படித்து ரசிக்கக் கூடும் என்று நீங்கள் நினைக்கிற புத்தகம், உங்கள் வீட்டில் இருந்தால், நீங்கள் அதையும் புத்தகசாலைக்குக் கொடுத்தால், நான் மிகவும் சந்தோஷம் அடைவேன். எப்படியும், உங்களால் எவ்வளவு முடியுமோ அவ்வளவு, தயவு செய்து படியுங்கள்."

"இன்றைக்கு, முதல் வகுப்பு புத்தகசாலையில்தான்" குழந்தைகள் ஒருமனதாய் கத்தினார்கள்.

"இதுதான் உங்கள் விருப்பமா?" சந்தோஷக் குதியாட்டம் போட்டுக் கொண்டிருந்த குழந்தைகளைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே தலைமையாசிரியர் கேட்டார். "சரி... சரி... உங்கள் விருப்பம் அதுவானால், ஏன் அப்படியே இருக்கக் கூடாது."

டோமோயின் மாணவக்கூட்டமே—மொத்த ஐம்பது மாணவர்களும் புத்தகசாலை ரயில் வண்டியை மொய்த்து விட்டார்கள். மிகவும் கிளர்ச்சியுடன், தாங்கள் விரும்பிய புத்தகங்களை எடுத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டார்கள். ஆனால் பாதிப் பேருக்கு உட்கார இருக்கை இல்லாததால், நிற்க வேண்டியதாகிவிட்டது. அது கூட்ட நெரிசலான ரயிலில், பயணிகள் நின்று கொண்டு படிப்பதைப் போன்ற தோற்றத்தைக் கொடுத்தது. இது உண்மையிலேயே பார்ப்பதற்கு ஒரு வேடிக்கையான காட்சிதான்!

குழந்தைகள் மகிழ்ச்சி மிகுதியில் இருந்தார்கள். டோட்டோ-சானால் அப்போது சரியாக வாசிக்க முடியாததால், அவள் உவகை அளிக்கக் கூடிய படங்கள் நிறைந்த புத்தகங்களைத் தேர்வு செய்தாள். எல்லோரும் கையில் ஒரு புத்தகத்துடன் அதன் பக்கங்களில் கண்களை ஓட விட்டதும், அங்கு திடீரென அமைதி நிலவியது. ஆனால் அந்த அமைதி அதிக நேரம் நீடிக்கவில்லை. அந்த அமைதி சில குழப்பமிக்க சத்தங்களால் உடைபட்டது. சிலர் சில பகுதிகளைச் சத்தம் போட்டுப் படித்துக் கொண்டிருந்தார்கள். சிலர் தங்களுக்குப் புரியாதவைகளுக்கு மற்றவர்களிடம் விளக்கம் கேட்டுக்

கொண்டிருந்தனர். சிரிப்பலைகள் ரயில் முழுவதும் முட்ட முட்ட நிரம்பி வழிந்தது. ஒரு குழந்தை, 'பாடும் படங்கள்' என்ற புத்தகத்தை அப்போதுதான் ஆரம்பித்தது. அந்த புத்தகத்திலுள்ள 'பாடும் பாடலை' கணீரென்ற குரலில் பாடிக்கொண்டே, அந்தக் குழந்தை அதன்படி படம் வரைய ஆரம்பித்தது.

ஒரு வட்டமும் புள்ளியும்; ஒரு வட்டமும் புள்ளியும்;

மூக்கிற்கு குறுக்கு வெட்டுகள்; மறுபடியும் வட்டமும் புள்ளியும்; மூன்று முடிகள், மூன்று முடிகள், மூன்று முடிகள்- பிறகு ஒவ்! கண்ணிமைக்கும் பொழுதுக்குள், ஒரு கொழுத்த 'ஹாவ்ஸ்பிராவ்'.

முகம் பெரிய வட்டமாய் 'ஒவ்' சொல்லும் போது வரைய வேண்டும். மூன்று அரைவட்டங்களையும், 'கண்ணிமைக்கும் பொழுதுக்குள்' பாடும் போது வரைய வேண்டும். எல்லா கோடுகளையும் பாடலில் சொன்ன மாதிரி வரைந்து விட்டால், முடிவு பழைய 'பாஷனில்' ஜப்பானிய சிகை அலங்காரம் செய்த ஒரு கொழுத்த பெண்மணி.

டோமோயில், குழந்தைகள் தங்கள் பாடங்களில் தாங்கள் விரும்பும்



முறையில் பயில அனுமதிக்கப்பட்டிருந்தார்கள். ஆதலால் மற்றவர்கள் செயல்களினால் யாராவது பாதிக்கப்பட்டால், அது மிகவும் மோசமாகி விடும். அவர்கள் தங்களைச் சுற்றி என்ன நடந்தாலும் பாதிக்கப்படாமல், தங்கள் வேலையில் கவனம் செலுத்தப் பயிற்றுவிக்கப்பட்டிருந்தார்கள். அதனால் 'ஹாவ்ஸ்பிராவ்' வரைந்து கொண்டே பாடும் குழந்தையிடம் யாரும் கவனம் செலுத்தவில்லை. ஒருவர், இருவர் வேண்டுமானால் அந்தக் குழந்தையுடன் சேர்ந்திருக்கலாம். ஆனால் மற்றவர்கள் தங்கள் புத்தகத்திலேயே புதைந்துவிட்டார்கள்.

டோட்டோ-சானின் புத்தகம் ஒரு பழங்காலத்துக் கதை போலத் தோன்றியது. இது ஒரு பணக்காரரது மகளைப் பற்றியது. அவள் 'உஸ், உஸ்' என்று பெருமூச்சு விட்டதால், அவளுக்கு மாப்பிள்ளையே அமைய வில்லை. கடைசியில் அவளது பெற்றோர்கள் சமாளித்து அவளுக்கு ஒரு கணவனைக் கண்டு பிடித்தார்கள். ஆனால் திருமண இரவின்போது அவள் மிகவும் கிளர்ச்சியுற்றதில், எப்போதையும்விட ஒரு பெருமூச்சு விட்டதில் வந்த காற்று அவளது மணமகனை ஏழரை முறை படுக்கை அறையைச் சுற்றிச் சுழற்றி, நினைவிழக்கும் மாதிரி அடித்து வீழ்த்தியது. அறையைச் சுற்றி பறப்பது போல உள்ள அந்த படம் பார்ப்பதற்கு மிகவும் கேளிக்கையூட்டுவதாக இருந்தது. அதற்குப் பிறகு, எப்போதுமே அந்தப்

புத்தகத்திற்குக் கிராக்கி இருந்தது.

பள்ளி மாணவர்கள் அனைவரும் 'சார்டின்' மீன்களைப் போல ரயிலுக்குள் அடைந்து கொண்டு, சன்னல் வழியாய் வழிந்து கொண்டிருக்கும் காலைச்சூரிய வெளிச்சத்தில் புத்தகங்களை ஆர்வத்துடன் கண்ணாலேயே தின்று விடுவார்கள். இது தலைமையாசிரியரின் இதயத்தை சந்தோஷப்படுத்தும் காட்சியாக இருந்திருக்கும்.

குழந்தைகள் நாள் முழுவதையும் புத்தகசாலை ரயிலிலேயே கழித்தார்கள்.

பிறகு, மழையினால் வெளியே நடமாட முடியாத நேரங்களில், அதேபோல வேறு ஏதாவது நேரங்களில், அந்த புத்தகசாலைதான் அவர்கள் கூடும் இடமாகி விட்டது.

"இங்கேயே புத்தகசாலை அருகே ஒரு கழிவறையைக் கட்டி விடுவதுதான் பரவாயில்லை என நான் நினைக்கிறேன்" என்று ஒருநாள் தலைமையாசிரியர் சொன்னார்.

இது ஏனெனில், அவர்கள் அந்த அளவு புத்தகத்தில் ஆழ்ந்து விடுவதால், கடைசி நிமிடத்தில் வயிற்றைப் பிடித்துக் கொண்டு உடலை முக்கிக் கொண்டு, அசெம்பிளி ஹாலுக்கும் பின்னால் இருக்கும் கழிவறைக்கு ஒரு பாய்ச்சல் பாய்ந்து செல்ல வேண்டியிருநதது. மீண்டும் கழிவறையிலிருந்து ஓடி வந்து, புத்தகத்தை விட்ட இடத்திலிருந்து படிக்க ஆரம்பித்ததையும் தலைமையாசிரியர் கவனித்தார். குழந்தைகள் வித்தியாசமான சூழலில் தம்மைக் கட்டுப்படுத்திக் கொளவதை அவர் விரும்பவில்லை.

## வாலினால் வந்தது

ஒரு நாள் மாலை, பள்ளி நேரம் முடிந்ததும் டோட்டோ-சான் வீட்டிற்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கும்போது 'ஓஇ' ஓடிவந்து "தலைமையாசிரியர் யாருடனோ சண்டையிட்டுக் கொண்டிருக்கிறார்" என்று காதில் கிசுகிசுத்தான்.

"எங்கே?", எனக் கேட்டாள் டோட்டோ-சான்.

தலைமையாசிரியர் கோபப்பட்டதாகவோ, சண்டையிட்டதாகவோ அவள் இதுவரை கேட்டதே இல்லை. இதைச் சொல்வதற்கு ஓஇ ஓடி வந்தவிதம் கூட திகைப்படையச் செய்தது. அவனுக்கும் வியப்புதான்.

அவனது அழகான கண்கள் விரிய, மூக்குப் புடைக்க "சமையல் அறையில்' என ஓஇ பதிலளித்தான்.

"சீக்கிரம் வா, போகலாம்", டோட்டோ-சான் ஓஇயின் கையைப் பிடித்துக் கொண்டு தலைமையாசிரியர் வீட்டை நோக்கி ஓடினாள். அது கூட்ட அறையை ஒட்டி இருந்தது. பள்ளி மைதானத்தின் பின்புறப் பாதைக்கு வலப்புறம் சமையல் அறை இருந்தது. டோட்டோ-சான் முன்பு ஒரு முறை சாக்கடைக் குழியில் விழுந்தபோது அவ்வழியாகத்தான் உடலைக் கழுவுவதற்காக அவளைத் தூக்கிச் சென்றார்கள். மேலும் அது தலைமையாசிரியரின் சமையல் அறை. அங்கிருந்துதான் 'கடலிலிருந்து

கொஞ்சம், மலையிலிருந்து கொஞ்சம்' உணவு வேளையின்போது வரும்.

அவ்விரு குழந்தைகளும் ஓடி வந்து கால் நுனியில் நின்று கவனித்த போது மூடிய கதவின் பின்புறம் இருந்து குரல் மட்டும் கேட்டது.

“சிறிது கூட சிந்தித்துப் பார்க்காமல், தாகாஹாஷிக்கு வால் இருந்தது என்று சொல்லுமளவிற்கு உனக்கு என்ன வந்தது”.

தலைமையாசிரியரின் கண்டனத்திற்கு உள்ளானது தங்கள் ஹோம் ரூம் டீச்சர்தான் என்பதைப் புரிந்து கொண்டார்கள்.

“நான் அதை மிகப் பெரிதாக நினைக்கவில்லை”, டீச்சரின் பதிலும் கேட்டது, “நான் சாதாரணமாக அவனைப் பார்த்தேன். அவன் மிகக் குள்ளமாகத் தெரிந்தான். அதனால் கூறினேன்” என்றாள்.

“இதன் கடுமை உங்களுக்குத் தெரியாது, நான் எவ்வளவு அக்கறையுடன் அவனைக் கவனித்து வருகிறேன் என்பதை நீங்கள் புரிந்து கொள்ளவேயில்லை?” என்றார்.

டோட்டோ-சான் அன்று காலையில் தன் வகுப்பில் நடந்தவற்றை நினைத்துப் பார்த்தாள். “மனித இனத்திற்கு முதன் முதலில் உண்மையிலேயே வால் இருந்தது”, என டீச்சர் கூறியது மாணவர்களுக்கு சிரிப்பூட்டக்கூடியதாக இருந்தது. டீச்சர் கூறியது உயிர்களின் பரிணாம வளர்ச்சி என்ற பாடத்தின் முன்னுரை என்பது வளர்ந்தவர்களுக்குத் தெரியும். இப்புதிய செய்தி மாணவர்களை மிகவும் ஈர்த்தது. மேலும், மனித இனத்திற்கு வால் இருந்து மறைந்ததற்கு அடையாளமாக முதுகெலும்பின் கீழே உள்வால் எலும்பு இன்னும் உள்ளது என்று டீச்சர் கூறியதும் மாணவர்கள் தங்களின் உள்வால் எலும்பு எங்கே உள்ளது எனத் தேட ஆரம்பித்துவிட்டனர். ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டதால் வகுப்பில் முழுவதும் ஒரே கூச்சலும் குழப்பமுமாக மாறியது. மாணவர்களுக்குச் சிரிப்பூட்ட வேண்டுமென்பதற்காக வகுப்பாசிரியை இறுதியாக மாணவர்களைப் பார்த்து, “இங்கு சிலருக்கு இன்னும் வால் இருக்கிறது என நினைக்கிறேன்... உனக்கு எப்படி தாகாஹாஷி?” எனக் கேட்டார்.

தாகாஹாஷி உடனே எழுந்து தலையை குலுக்கிக் கொண்டு அழுத்தமாக உயிரற்ற தொனியில், உண்மையென நினைத்துக் கொண்டு “என்னிடம் வால் இல்லையே”, என்று கூறினான்.

டோட்டோ-சான், தற்போது தலைமையாசிரியர், அதைப்பற்றித்தான் பேசிக் கொண்டிருக்கிறார் என்பதைப் புரிந்து கொண்டாள். தற்போது அவரது குரலில் கோபத்தை விட வருத்தம் அதிகம் தொனித்தது.

“அவனுக்கு வால் இருக்கிறதா என்று கேட்டதை தாகாஹாஷி எப்படி உணர்ந்திருப்பான் என்பதை அறிய வேண்டுமானால், உங்களுக்கு இதுபோல் நேர்ந்திருந்தால் என்ன செய்வீர்கள் என நினைத்துப் பாருங்கள்” என்றார். இக்குழந்தைகளால் தங்கள் ஆசிரியையின் பதிலைக் கேட்க முடியவில்லை.

டோட்டோ-சானுக்குத் தலைமையாசிரியர் வாலைப்பற்றி ஏன் இவ்வளவு கோபமாக இருக்கிறார் என்பதைப் புரிந்து கொள்ள முடியவில்லை. அவளுக்கு வால் இருக்கிறதா எனத் தலைமையாசிரியர் கேட்க வேண்டுமென அவள் விரும்பினாள்.

ஒருவேளை அவளிடம் குறைபாடு ஏதும் இல்லாததால் அவள் அந்தக் கேள்வியில் குறைபாடு ஏதும் இல்லை என நினைத்திருக்கலாம். ஆனால் தாகாஹாஷி தான் இனி வளர முடியாது என்பதை அறிந்த குட்டையானவன். அதனால்தான் தலைமையாசிரியர் விளையாட்டு தினவிழா நிகழ்ச்சிகளை தாகாஹாஷி வெல்லுமாறு அமைத்திருந்தாரோ என்னவோ? நீச்சல் குளத்தில் குழந்தைகளை உடையின்றிக் குளிக்க வைப்பதின் மூலம் தாகாஹாஷி போன்றோர் தன்னுணர்வை மறந்து தன்னம்பிக்கை பெறுவார்கள் என்றும் அவர் நினைத்திருக்கலாம். உடற் குறையுடன் இருக்கும் குழந்தைகளுக்கு அவர், அவரால் முடிந்த அனைத்தும் செய்தார். தாகாஹாஷி, யாசுயாகி-சான் போன்றோர் தாங்கள் மற்ற குழந்தைகளிலிருந்து வேறுபட்டவர்கள் என்ற உணர்வோ, தாழ்வு மனப்பான்மையோ இன்றி இருந்தனர். அதனால்தான் குட்டையாக உள்ள தாகாஹாஷியிடம் உனக்கு வால் இருக்கிறதா எனக் கேட்டதற்குத் தலைமையாசிரியர் அவ்வளவு கோபப்பட்டுள்ளார். அப்போது தலைமையாசிரியர் வழக்கம்போல் பின்னால் இருந்து வகுப்புகளைப் பார்வையிட்டுக் கொண்டு இருந்துள்ளார். டோட்டோ-சானால் டீச்சர் அழுவதைக் கேட்க முடிந்தது. "நான் மிகப் பெரிய தவறு செய்துவிட்டேன். தாகாஹாஷி என்னை மன்னிக்க வேண்டுமானால் நான் என்ன செய்ய வேண்டும்", என்று விம்மி அழுது கொண்டிருந்தார் டீச்சர்.

தலைமையாசிரியர் ஒன்றும் சொல்லவில்லை. டோட்டோ-சானால் கண்ணாடிக் கதவின் வழியாக அவரைப் பார்க்க இயலவில்லை. ஆனால் அவள் அவரோடு இருக்க விரும்பினாள். நடந்ததை எல்லாம் அவளால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் முன்பு எப்போதையும்விட தலைமையாசிரியர் அவர்களின் நெருங்கிய நண்பனாகத் தோன்றினார். ஓஇயும் அவ்வாறுதான் நினைத்திருக்க வேண்டும்.

தலைமையாசிரியர், தனது ஹோம் ரூம் டீச்சரை மற்ற ஆசிரியர்கள் உள்ள, ஆசிரியர்கள் அறையில் கண்டிக்காது தனியாக சமையல் அறைக்கு அழைத்துக் கண்டித்ததை டோட்டோ-சானால் ஒருபோதும் மறக்க முடியாது. அவளுக்கு அந்த வயதில் புரிந்து கொள்ள முடியவில்லை என்றாலும் தலைமையாசிரியர் 'ஆசிரியர்' என்ற சொல்லுக்கான முழு அர்த்தத்துடன் நடந்து கொண்டதை உணர்ந்தாள். அவருடைய குரலும், சொல்லும் அவளது மனதில் நீக்க முடியாதவாறு படிந்தது.

வசந்தகாலம் தொடங்கவிருந்தது. டோட்டோ-சானுக்கு டோமோயில் அது இரண்டாவது வசந்தகாலம். புதுக் கல்வியாண்டின் தொடக்கமாகவும் இருந்தது.

## டோமோயில் அவளின் இரண்டாம் ஆண்டு

பள்ளி மைதானத்திலிருந்த எல்லா மரங்களிலும் இளம் தளிர்கள் வெடித்துத் துளிர்த்தன. பாத்திகளில் மலர்ச் செடிகள் மலர்ந்து மணம் வீசின. பூக்கள் மலர்ந்து டோமோயி மாணவர்களை, "நீங்கள் எப்படி இருக்கிறீர்கள்", என விசாரித்து வரவேற்பதுபோல் இருந்தது. செவ்வந்திப்

பூக்களும், செண்டுப் பூக்களும், கேந்திப் பூக்களும் பாத்திகளில் நிறைந்திருந்தன. செர்ரி மொட்டுக்கள் மலர்ந்து மணம் பரப்பத் தயாராகத் தென்றலில் ஆடிக் கொண்டிருந்தன.

நீச்சல் குளத்திற்கு அருகே கால் கழுவுவதற்காக வைக்கப்பட்டிருந்த தண்ணீர்த் தொட்டியில் தங்க மீன்களுடன், கறுப்பு மீன் குஞ்சுகளும் மகிழ்ச்சியாக நீந்திக் கொண்டிருந்தன.

அது வசந்த காலம் என்பதை யாரும் சொல்லத் தேவையில்லை. சுற்றுச் சூழல் எல்லாமே பார்க்கப் புத்தம் புதியதாகவும், பளபளப்பாகவும், உயிரோட்டத்துடனும் இருந்தது. அதுதான் வசந்தம் என்பது எல்லோருக்கும் தெரியும்.

டோட்டோ-சான் அம்மாவுடன் டோமோயி ஹாகுன்னில் நுழைந்து சரியாக ஓராண்டு நிறைவு பெற்றிருந்தது. அவள் வளரும் பெயர்ப் பலகையைப் பார்த்து ஆச்சரியப்பட்டதையும், இரயில் பெட்டி வகுப்புகளை நோக்கி ஓடியதையும், மேலும் கீழும் குதித்ததையும், தலைமையாசிரியர் சோசாகு கோபயாஷி நண்பரானதையும் வியப்புடன் நினைவு கூர்ந்தாள். இப்பொழுது டோட்டோ-சானுக்கும் அவளது நண்பர்களுக்கும் கிடைத்துள்ள "இரண்டாம் வகுப்பு மாணவர்கள்" என்ற தகுதி பெருமிதம் அளித்தது. புதிய முதல் வகுப்பு மாணவர்கள் வந்து இவர்கள் சென்ற ஆண்டு பள்ளியை வியந்து பார்த்ததுபோல் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

சென்ற ஆண்டு டோட்டோ-சானுக்கு, நினைவில் தங்கிய நிகழ்ச்சிகள் நிறைந்த ஆண்டாக இருந்தது. ஒவ்வொரு நாள் காலையையும் ஆர்வமுடன் எதிர்பார்த்த ஆண்டாக இருந்தது. அவள் இன்னமும் வீதி இசைஞர்களை விரும்பினாள். ஆனால் அவள் தன்னைச் சுற்றியுள்ள பல விஷயங்களை விரும்ப தற்போது கற்றிருந்தாள். தொந்தரவு செய்ததற்காக ஒரு பள்ளியிலிருந்து நீக்கப்பட்ட அவள் டோமோயின் சொத்தாக, மதிப்புள்ள மாணவியாக மாறி இருந்தாள்.

டோமோயின் கல்வி முறையில் சில பெற்றோர்கள் அவநம்பிக்கை கொண்டிருந்தனர். டோட்டோ-சானின் அம்மா, அப்பாவைப் போல் தாங்கள் சரியான பள்ளியைத் தேர்ந்தெடுத்து குழந்தைகளைச் சேர்த்திருக்கிறோம் என வியப்புடன் பெருமை கொள்ளும் பெற்றோர்களும் உண்டு திரு. கோபயாஷியின் கல்விமுறை மேம்போக்கானது, ஆழமற்றது, சந்தேகத்திற்குரியது என அவர்கள் பார்த்தவைகளை வைத்து நினைத்த சில பெற்றோர்கள், தங்கள் குழந்தைகளை டோமோயில் இருந்து விலக்கி வேறு ஏதாவது பள்ளிகளில் சேர்த்துவிட முயன்றனர். ஆனால் அம்மாணவர்கள் யாரும் டோமோயியை விட்டுச் செல்ல விரும்பவில்லை. எனவே அழுதனர். அதிர்ஷ்டவசமாக டோட்டோ-சானின் வகுப்பிலிருந்து யாரும் வேறு பள்ளிக்குச் செல்லவில்லை. ஆனால் டோட்டோ-சானைவிட ஒரு வகுப்பு கூடுதலாகப் படித்த ஒரு பையன் அப்பள்ளியை விட்டுச் செல்ல நேர்ந்தபோது தன் மனக் கசப்பை வெளியிட தலைமையாசிரியரின் முதுகில் புளிமூட்டை ஏறிக் கொண்டு கண்களில் கண்ணீர் வழிய கைகால்களை உதைத்து அடம் பிடித்தான். அவன் சென்று மறையும்வரை

கால்கள் தள்ளாடி ஒன்றோடொன்று பின்னிக் கொள்ள பள்ளியைப் பிரிய மனமின்றிச் சென்றான். தலைமையாசிரியர் கண்கள் சிவக்க அழுதேவிட்டார். அவன் போனதால், அவர் திரும்பத் திரும்ப, நெடுநேரம் பள்ளியைச் சுற்றி அலைந்து கொண்டே இருந்தார்.

ஆனால் இது போன்ற துயர நிகழ்ச்சிகள் அதிகம் இல்லை. தற்போது டோட்டோ-சான் இரண்டாம் வகுப்பில் தினம் தினம் புதிய விந்தைகளையும், பெரு மகிழ்ச்சியையும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் பள்ளிக்கு வருவது அன்றாட வழக்கமாகியிருந்தது.

## அன்னப்பறவை ஏரி

ஹிபியா அரங்கத்தில் நடைபெற்ற ‘அன்னப்பறவை’ கூட்டு நடனத்தைப் பார்க்க ஒருநாள் டோட்டோ-சான் அழைத்துச் செல்லப்பட்டாள். அவள் அப்பா தனியாக வயலின் வாசித்தார். மிகச் சிறந்த குழு நிகழ்ச்சிகளைப் நடத்திக் கொண்டிருந்தது. கூட்டு நடன நிகழ்ச்சிகளைப் பார்க்க அவள் சென்றிருப்பது இதுதான் முதல் தடவை. அரசி அன்னப் பறவை மின்னும் கிரீடத்தைத் தலையில் அணிந்து காற்றில் தாவித்தாவி நடனமாடியது உண்மையான அன்னத்தைப் போன்றே இருந்தது. அல்லது டோட்டோ-சானின் பார்வைக்கு அவ்வாறு தோன்றியது. மற்ற அன்னங்களை வெறுத்தொதுக்கிவிட்டு அரசி அன்னத்தின் மீது இளவரசன் காதல் கொண்டான். இறுதியில் இருவரும் மிக அழகாக நடனமாடினார்கள். இசை கூட டோட்டோ-சானை மிகவும் ஈர்த்தது. அவள் வீட்டிற்குத் திரும்பிய பின்னரும் அவளால் அந்நிகழ்ச்சியை நினைத்துப் பார்க்காமல் இருக்க இயலவில்லை.

மறுநாள் காலையில் எழுந்ததும் டோட்டோ-சான் நேராகச் சமைய லறையில் இருந்த அம்மாவிடம் சென்றாள். அவள் தன் தலையைக்கூட சரி செய்து கொள்ளாமல் அறிவித்தாள். “நான் இனியும் உளவாளியாக இருக்க விரும்பவில்லை; வீதி இசைஞராகவோ, ரயில்வே டிக்கெட் பரிசோதகராகவோ இருக்க விரும்பவில்லை; நான் நடனமாதுவாக ஆகி அன்னப்பறவை ஏரி நடனம் ஆட விரும்புகிறேன்.”

“ஓ...!” என்ற அம்மாவுக்கு அது ஆச்சரியமாகப்படவில்லை. டோட்டோ-சான் கூட்டு இசை நடனத்தைக் காண்பது அதுதான் முதல் தடவை. ஆனால் அவள் தலைமையாசிரியரிடமிருந்து அழகாக நடன மாடக் கூடிய அமெரிக்க மங்கை இசதோராடங்கன் நடனத்தைப் பற்றி ஏராளமாகக் கேள்விப்பட்டிருந்தாள். கோபயாஷியைப் போல், டால்குரோஸ் இசையின் தாக்கம் இசதோராடங்கனிடமும் இருந்தது. டோட்டோ-சான் இசதோராடங்கனைப் பார்க்காவிட்டாலும், தலைமை யாசிரியர் அவளிடம் மிகப் புகழ்ந்து பேசியுள்ளதால் அவள் இசதோரா டங்கனைத் தெரிந்துள்ளதாகவே நினைத்துக் கொண்டாள். எனவே, நடனம் ஆடச் சிறப்பான திறமை ஏதும் தேவையில்லை என்றே டோட்டோ- சான் நினைத்துக் கொண்டாள்.

டோமோயிற்கு வந்து இசை உடலிசைவுப் பயிற்சியைக் கற்றுத்

தருபவர், திரு. கோபயாஷியின் நண்பர், அருகில் நடனக் கலை அரங்கை வைத்திருந்தார். அவரது கலை அரங்கில், பள்ளி நேரத்திற்குப் பின் டோட்டோ-சான் நடனம் கற்றுக் கொள்ள அம்மா ஏற்பாடு செய்திருந்தாள்.

அம்மா எப்பொழுதுமே டோட்டோ-சானிடம் 'இதைச் செய்' அல்லது 'அதைச் செய்' என்று கூறுவது கிடையாது. டோட்டோ-சான் எதையாவது செய்ய விரும்பினால், அதைப்பற்றி கேள்விகள் கேட்டுத் துளைக்காமல் அவள் விரும்புவதை நிறைவேற்றுவதற்கான ஏற்பாடுகளைச் செய்து விடுவாள்.

டோட்டோ-சான் நடனக் கலையரங்கில் நடனம் பயில ஆரம்பித்தாள். தான் அன்னப்பறவை நடனம் ஆடக்கூடிய நாளை விரைவில் எதிர்பார்த்தாள். ஆனால் நடன ஆசிரியர் தனக்கென அமைத்திருந்த தனி முறையில் பயிற்சியை அளித்தார். டோமோயில் பயிலும் இசை உடலிசைவுப் பயிற்சியுடன் மாணவர்கள் பியானோ அல்லது இசைப் பெட்டியில் இசைக்கப் பழக வேண்டுமெனவும், "மலைமேல் ஒளி விளக்காய்", "என் ஆன்மாவைச் சுத்தம் செய், ஓ- மலைமேல் ஒளிவிளக்கே" என்ற பாடல்களை பியூஜிமலை மேல் ஏறுவோர் பஜனை பாடுவது போல், மீண்டும் மீண்டும் சொல்லிப் பழக வேண்டுமென்றும் விரும்பினார்.

திடீரென ஆசிரியர், "காட்சிகொடு" என்பார். மாணவர்கள் தங்கள் மனத்திற்குள் ஏதாவது ஒரு முத்திரையைக் கற்பனை செய்து கொண்டு நடன முத்திரையுடன் அப்படியே அசையாது நிற்க வேண்டும். ஆசிரியரும் உணர்ச்சி வசப்பட்டு, "ஆச்" எனக் குரல் எழுப்பிக் கொண்டே அவரும் அசையாது காட்சியில் நிற்பார். அப்படிப்பட்ட காட்சி வானத்தைப் பார்த்துக் கொண்டு நிற்பது போலவோ, அல்லது ஒருவன் துயரத்தில் வேதனைப்படுவது போலவோ, அல்லது இரண்டு கைகளாலும் தலையைப் பிடித்துக் கொண்டு இருப்பது போலவோ அமையும்.

ஆனால் டோட்டோ-சான் தன் மனதில் நினைத்திருந்த காட்சியோ, அன்னப்பறவை தன் தலையில் பளபளக்கும் மகுடத்துடன், மடிப்புகள் நிறைந்த வெள்ளை ஆடை அணிந்து கொண்டு நடனமாடுவது போன்ற காட்சியாகும். "ஆச்" என்பதையோ, "மலை மேல் ஒளி விளக்காய்" என்பதையோ அல்ல.

ஒரு நாள் டோட்டோ-சான் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு நடன ஆசிரியரிடம் சென்றாள். அவர் ஆணாக இருந்தாலும் அவருக்கு அழகாக பாப் வெட்டப்பட்ட சுருட்டை முடி இருந்தது. டோட்டோ-சான் தன் கைகளை உயர்த்தி இறகுகளைப் போல் அசைத்துக் கொண்டே அவரிடம் சென்றாள். "நாம் நடனத்தில் இதுபோல் ஏதேனும் செய்யப் போகிறோமா?" எனக் கேட்டாள்.

நடன ஆசிரியர் வட்டமான கண்களையும், கழுகு போன்ற வளைந்த மூக்கும் உள்ள அழகானவர். "நாம் அந்த மாதிரி நடனங்களை இங்கே செய்யப்போவதில்லை," என்றார்.

அதன் பிறகு டோட்டோ-சான் அந்தக் கலையரங்கிற்குச் செல்வதை நிறுத்தி விட்டாள். நடனக் காலணிகளை அணியாமல் வெறும் பாதத்துடன் அவள் மனதில் நினைத்திருந்த காட்சியைப் போல் காற்றில்

நழுவி நழுவி நடனமாடவே அவள் விரும்பினாள். அவள் அந்தச் சிறிய பளபளக்கும் மகுடத்தை தலையில் அணிந்து கொள்ளவும் விரும்பினாள்.

"அன்னப்பறவை நடனம் அழகானது" "நீ விரும்புவது போல் உன்னை நடனமாட வைக்கவும் விரும்புகிறேன்", என்றார், ஒரு ஆசிரியர். பிற்காலத்தில்தான் டோட்டோ-சான் அவரின் பெயர் பாகுஇஷி எனத் தெரிந்து கொண்டாள். அவர் சுதந்திரமாக நடனத்தைக் கற்றுக் கொடுப்பவர் மட்டுமல்லாமல், அந்தக் பகுதிக்கு ஜியுகோகா (சுதந்திரக் குன்று) என்று பெயர் வைத்ததும் அவர்தான் என்பதைத் தெரிந்து கொண்டாள். ஐம்பது வயதான அந்த மனிதர் டோட்டோ-சானுக்குச் சுதந்திரமாக நடனமாடவும் கற்றுத் தந்தார்.

## விவசாய ஆசிரியர்

"இன்று இவர்தான் உங்கள் ஆசிரியர். இவர் உங்களுக்கு எல்லாவற்றையும் செய்து காட்டுவார்" என தலைமையாசிரியர் புதிய ஆசிரியரை அறிமுகம் செய்து வைத்தார். டோட்டோ-சான் அவரை நன்றாகப் பார்த்தாள். அவர் ஆசிரியர் போலவே உடை அணிந்திருக்கவில்லை. அவர் தனது உள் சட்டைக்கு மேல் சிறு கோடுகள் போட்ட பருத்தியினால் ஆன மேற்சட்டை அணிந்திருந்தார். கழுத்தில் 'டை' கட்டுவதற்குப் பதிலாக ஒரு துண்டு அவர் கழுத்தைச் சுற்றிப் போடப்பட்டிருந்தது. அவர் காற்சட்டையைப் பொருத்தவரை குறுகியதாக பல இடங்களில் ஒட்டுப் போடப்பட்ட பருத்தி ஆடையாக இருந்தது. காலணிக்குப் பதிலாக இரப்பரால் செய்யப்பட்ட காலுறைகளை அணிந்திருந்தார். அவர் தலையில் ஓர் வைக்கோற்தொப்பி சீர்குலைந்த நிலையில் இருந்தது.

குழந்தைகள் குகோன்புட்சு கோயிலுக்கு அருகில் இருந்த குளத்தினருகே குழுமியிருந்தனர்.

டோட்டோ-சானுக்கு அவரை முன்பு எங்கோ பார்த்திருந்தது போல் தோன்றியது. "எங்கே பார்த்தோம்", என அவள் வியப்புடன் எண்ணினாள். அவரது பெல்ட்டாகப் பயன்படுத்தியுள்ள இடுப்பு நாடாவில் இருந்து தொங்கும் குறுகிய குழாய்கூட எங்கோ பார்த்தது போல் இருந்தது.

"இந்த நீரோடையின் அருகில் வயலில் வேலை பார்க்கும் விவசாயி அல்லவா நீங்கள்?" அவள் மகிழ்ச்சியுடனும் வியப்புடனும் கேட்டாள்.

"ஆமாம்" அப்புதிய ஆசிரியர் முகத்தில் சுருக்கங்கள் விழ பற்கள் தெரிய சிரித்துக் கொண்டே ஒப்புக் கொண்டார். "நீங்கள் குகோன்புட்சுவிற்கு நடந்து செல்லும் ஒவ்வொரு முறையும் எனது இடத்தைக் கடந்துதான் சென்றுள்ளீர்கள். அதோ! கடுகுச் செடிகள் பூத்துக் குலுங்குகின்றதே, அதுதான் எனது வயல்."

"வாவ்! நீங்களா இன்று எங்களுக்கு சொல்லித்தரப் போகிறீர்கள்", குழந்தைகள் மகிழ்ச்சியில் கூச்சலிட்டனர். "நான் ஆசிரியர் இல்லை. விவசாயிதான். உங்கள் தலைமையாசிரியர் இன்று உங்களுக்குச் சொல்லித் தருமாறு கேட்டுக் கொண்டார். அவ்வளவுதான்" என்றார் அவர்.

"ஆம்! அவர்தான் இன்று உங்கள் விவசாய ஆசிரியர்", அவருக்குப் பக்கத்தில் இருந்த தலைமையாசிரியர் மீண்டும் கூறினார். "இவர் இன்று

உங்களுக்கு வயலில் நாற்று நடுவது எப்படி என்பது பற்றிக் கற்றுத்தர அன்புடன் இசைந்துள்ளார். ரொட்டி சுடுபவர் எப்படிப் பக்குவமாக ரொட்டி சுடுவது என்று சொல்லித் தருகிறரோ, அதுபோல் இதுவும் முக்கியமானது", எனக்கூறிய தலைமையாசிரியர் அவரைப் பார்த்து, "இப்பொழுது முதல் நாம் தொடங்கலாம். குழந்தைகளுக்குப் பயிரிடுவது பற்றிக் கூறுங்கள்" என்றார்.

சாதாரணப் பள்ளிகளில் மாணவர்களுக்கு ஒருவர் எதைக் கற்றுத்தர வேண்டுமானாலும் அவருக்கு ஆசிரியர் தகுதி இருக்க வேண்டும். ஆனால் திரு. கோபயாஷி அதைப் பற்றி எல்லாம் கவலைப்படவில்லை. அவர் நினைத்ததெல்லாம் குழந்தைகள் எதையும் நேரிடையாகப் பார்த்துக் கற்றுக்கொள்ள வேண்டுமென்பதுதான்.

"இங்கிருந்து நாம் தொடங்கலாம்" விவசாய ஆசிரியர் தன் பணியை ஆரம்பித்தார்.

அவர்கள் கூடியிருந்த அந்த அழகான, அமைதியான, இனிமையான இடம் குகோன்புட்சு குளத்தருகே மரங்கள் நிழல் தரும் பகுதியில் இருந்தது. தலைமையாசிரியர், குழந்தைகளின் மண்வெட்டி, களைக்கொத்தி போன்ற விவசாயக் கருவிகளை வைப்பதற்காக அங்கு ஒரு இரயில் பெட்டியை நிறுத்தி இருந்தார். அவர்கள் பயிரிடப் போகும் இடத்தின் நடுவே அது அமைதியாக நின்று கொண்டிருந்தது.

"மண்வெட்டி, களைக் கொத்திகளை எடுத்துக் கொள்ளுங்கள். நாம் களை எடுப்பதிலிருந்து தொடங்கலாம்", என்றார் விவசாய ஆசிரியர். அவர் குழந்தைகளுக்குக் களைகளைப் பற்றி விரிவாகக் கூறினார். அவை எவ்வளவு கடினமானவை; சில களைகள் எப்படி வேகமாக வளர்ந்து பயிர்களுக்குச் சூரிய வெளிச்சம் கிடைக்காமல் மறைக்கின்றன; களை எப்படி மோசமான பூச்சிகளுக்கு நல்ல மறைவிடமாகப் பயன்படுகிறது; களைகள் எப்படி வயலில் உள்ள உரத்தையெல்லாம் எடுத்துக் கொண்டு பயிர்களுக்கு இடையூறாக உள்ளன; என ஒன்றன்பின் ஒன்றாக விளக்கினார். அவர் வாய் சொல்லிக் கொண்டிருக்கும்போது அவர் கைகள், களையெடுப்பதை நிறுத்தவே இல்லை. குழந்தைகளும் சில வேலைகளைச் செய்தனர்.

பின்னர் அவர் மாணவர்களுக்கு எவ்வாறு உழுவது, எவ்வாறு பாத்திகள் பிடிப்பது, எவ்வாறு உரம் இடுவது என்று பயிர்கள் செழிக்க என்னென்ன செய்ய வேண்டுமோ அதையெல்லாம் செய்து காட்டினார்.

ஒரு சிறு பாம்பு, தன் தலையை நீட்டி பெரிய பையன்களில் ஒருவனான டா-சானின் கையைக் கடித்துவிட்டது. அதைக் கண்ட அவர், "இங்குள்ள பாம்புகள் விஷமற்றவை, நீங்கள் அதற்குத் தொல்லை தரவில்லையெனில் அவை உங்களுக்குத் தொல்லை தராது", என்றார்.

வயலில் எப்படி நாற்று நடுவது என்று கற்றுத்தரும் போதே அவர் பூச்சிகள், பறவைகள், பட்டாம்பூச்சிகள் ஆகியவை பற்றியும், கால நிலை பற்றியும் ஆர்வமூட்டும் பல செய்திகளைக் கூறினார். அவரது காய்ப்பேறிய வலுவான கரங்கள், அவர் குழந்தைகளுக்குக் கற்றுத்தரும் அனைத்தும் அவரது அனுபவத்தின் மூலம் கற்றவை என்பதைப் பறைசாற்றின.

அந்த ஆசிரியரின் உதவியுடன், குழந்தைகள் வியர்வை சொட்டச் சொட்ட, நாற்று நடும் பணியை நிறைவு செய்தனர். சில வளைந்த சால்களைத் தவிர, பெரும்பாலும் அந்த வயல் பார்ப்பதற்கு பிற வயல்களைப் போலவே இருந்தது.

அன்று முதல் அந்த விவசாயிக்கு மாணவர்கள் மிகுந்த மதிப்பளித்தனர். அவரைத் தூரத்தில் காணும் போதே "ஹே, அதோ! நமது விவசாய ஆசிரியர்" என மாணவர்கள் மகிழ்ச்சிக் கூச்சலிடுவர். அவரிடம் ஏதேனும் உரங்கள் மிஞ்சினால் அவர் அதைக் குழந்தைகளின் வயலுக்குக் கொண்டு வந்து போடுவார். அதனால் செடிகளும் நன்கு வளர்ந்தன. ஒவ்வொரு நாளும் ஏதாவதொரு மாணவன் அல்லது மாணவி அந்த வயலுக்குச் சென்று வந்து பயிர்கள் எப்படி உள்ளன எனத் தலைமை யாசிரியருக்கும் மற்ற மாணவர்களுக்கும் சொல்லுவது வழக்கமாகி விட்டது.

குழந்தைகள் விதைகளையும், அவை எவ்வாறு தம்மைப் பரப்பிக் கொள்கின்றன என்பதையும் நேரிடையாக அறிந்து மகிழ்ந்தனர். இரண்டு அல்லது மூன்று பேர் கூடும் போதெல்லாம் அவர்களின் பேச்சு வயல்களைப் பற்றியும், பயிர்களைப் பற்றியும் திரும்பிவிடும்.

அப்போது உலகின் பல்வேறு பகுதியில் மிக மோசமான நிகழ்ச்சிகள் நடக்க ஆரம்பித்திருந்தன. ஆனால் குழந்தைகள் அவர்களின் சிறிய வயல்களைப்பற்றிப் பேசிக் கொண்டே அமைதியில் திளைத்திருந்தனர்.

## திறந்தவெளிச் சமையல்

ஒருநாள் பள்ளி முடிந்ததும், டோட்டோ-சான் யாரிடமும் பேசாமல் போய் வருகிறேன் என்று கூடக் கூறாமல் ஜியுகோகா இரயில் நிலையத்தை நோக்கிச் சென்றாள். செல்லும் பொழுது அவள் வாய் "இடிக் கணவாய் வெளிச் சமையல்", "இடிக் கணவாய் வெளிச் சமையல்", என முணுமுணுத்துக்கொண்டே இருந்தது.

ராகுகோ படக்கதையில் வரும் பெயர்களைவிட இது மிகவும் சிரமமான வார்த்தைதான். அதில் அவள் கவனம் செலுத்தி திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டே இருந்தாள். "ஜுகேமு ஜுகேமு" என்பது போல் நீண்ட பெயர்கள் எதையேனும் கூறினால் கூட அவள் நினைத் திருக்கும் வார்த்தை மறந்துவிடும் என்பதால் வேறு எதிலும் கவனம் செலுத்தாமல் தான் கூறியதையே மீண்டும் மீண்டும் முணுமுணுத்தாள். நல்ல வேளையாக யாரும் அவள் கூறுவது என்ன என்று கூடக் கேட்கவில்லை.

அவள் இறங்க வேண்டிய இடம் வந்ததும் அவளுக்குத் தெரிந்த அங்கு பணியாற்றும் ஒருவர் "ஹலோ, திரும்பி வந்துவிட்டாயா?" எனக் கேட்டார். அவள் பதில் அளிப்பதற்காக ஒரு நிமிடம் நின்றாள். ஆனால், பேசினால் குழம்பிவிடும் என்பதால் கையை மட்டும் அசைத்து விட்டு வீட்டிற்கு ஓடிச்சென்றாள்.

அவள் வீட்டின் முகப்பு வாசலை அடைந்ததும் உரத்த குரலில்

குரலில் "இடிக் கணவாய் வெளிச் சமையல்" எனக் கத்தினாள். ஜூடோ விளையாட்டின் சொற்றொடர் அல்லது நாற்பத்தி ஏழு ரானின் கூறிய சொல்லாய் இருக்கலாம் என அம்மா நினைத்தாள்.

ஜியுகோகா இரயில் நிலையத்திலிருந்து மூன்று நிறுத்தங்கள் தாண்டி புகழ்பெற்ற தோடோரோகி கெய்கோகு அல்லது இடிக்கணவாய் இருந்தது. அந்த இடம் பழைய டோக்கியோவில் புகழ்வாய்ந்த இடமாக இருந்தது. அந்த இடம் நீர்வீழ்ச்சியும், நீரோடையும், அழகான மரங்களும் உள்ள இடமாகும். வெளிச் சமையல் என்பது, குழந்தைகள் அந்த இடத்திற்குச் சென்று அவர்களே திறந்த வெளியில் சமைத்து, கூடி உண்ண வேண்டும் என்பதுதான்.

"இடிக்கணவாய் வெளிச் சமையல்"— உச்சரிப்பதற்கு எவ்வளவு சிரமமான சொல். ஆனால், தலைமையாசிரியர் குழந்தைகளின் ஆர்வத்தை அறிந்து எவ்வளவு எளிதாகக் கற்றுக்கொள்ள வைத்துவிட்டார்! குழந்தைகளுக்கு ஆர்வம் இருந்தால் எதையும் எளிதாகக் கற்றுக் கொள்வார்கள் என்பதை நிரூபித்துவிட்டாரே! என்று அம்மா வியந்தாள்.

அச்சிரமமான சொல்லிலிருந்து ஒவ்வொரு பொருளாக டோட்டோ-சான் அம்மாவுக்கு விவரித்தாள். "அடுத்துவரும் வெள்ளிக்கிழமை காலையில் அனைத்துக் குழந்தைகளும் பள்ளியில் கூடவேண்டும்; அவர்கள் சூப் வைப்பதற்கான பாத்திரமும், சோறு சமைப்பதற்கான பாத்திரமும் எடுத்துச் செல்ல வேண்டும்; ஒவ்வொருவரும் ஒரு கிண்ணம் நிறைய அரிசி எடுத்து வரவேண்டும். ஒரு கிண்ணம் அரிசி, சமைத்தபின் இரண்டு கிண்ணம் நிறைய இருக்கும் என தலைமையாசிரியர் கூறியுள்ளார். அவர்கள் பன்றி இறைச்சியில் சூப் செய்ய முடிவு செய்திருப்பதால் வெண்பன்றி இறைச்சி கொஞ்சமும் சில காய்கறிகளும் எடுத்துச் செல்ல வேண்டும். மேலும் அவர்கள் விரும்பினால் மாலையில் தின்பதற்காக தின்பண்டமும் எடுத்துச் செல்லலாம்," என ஒவ்வொன்றாக விவரித்தாள்.

அடுத்த சில நாட்கள் டோட்டோ-சான் அம்மாவிடம் ஒட்டிக் கொண்டாள். அம்மா சமையல் அறையில் எவ்வாறு கத்தியைப் பயன்படுத்துகிறார்கள்; சூடான பாத்திரங்களை எவ்வாறு தூக்குகிறார்கள்; அரிசியை எப்படிப் போடுகிறார்கள் என உடனிருந்து உன்னிப்பாகக் கவனித்தாள். அம்மா "ஓ! இது மிகச் சூடாக இருக்கிறதே!" என அடிக்கடி கூறுவது டோட்டோ-சானுக்கு மிகவும் பிடித்திருந்தது. மேலும் சூடான மூடி எதையும் அம்மா தூக்கிவிட்டால் உடனே "ஸ்... ஆ..." எனக் கூறிக் கொண்டே கட்டை விரலையும், ஆள்காட்டி விரலையும் காது நுனியில் தேய்ப்பதையும் கவனித்தாள். "ஏனென்றால் காது நுனிகள் குளிர்ச்சியாக இருக்கும்", என்று அம்மா விளக்கினாள்.

அம்மாவின் சமையல் முறை அவள் மனதில் ஆழப்பதிந்தது. தான் சமையலில் நிபுணத்துவம் பெற்றதாக நினைத்துக் கொண்டாள். 'இடிக் கணவாய் வெளிச்சமையலின்போது நான் கூட இப்படியெல்லாம் செய்வேன்', என அவள் கூறிக்கொண்டாள்.

அவள் எதிர்பார்த்த அந்த வெள்ளிக்கிழமையும் வந்துவிட்டது. அவர்கள் இரயிலை விட்டிறங்கி இடிக் கணவாய்க்குச் சென்றதும்

தலைமையாசிரியர் குழந்தைகளைச் சரிபார்த்தார். மரங்களின் ஊடே புகுந்து வந்த சூரிய ஒளிச் சிதறலில் அவ்வினிய குழந்தைகளின் முகங்கள் மின்னின. பொங்கிப் பாயும் நீரோடையின் பின்னணியில் புடைத்த தோள் பைகளுடன் குழந்தைகள் தலைமையாசிரியர் என்ன சொல்லப் போகிறார் என ஆவலுடன் எதிர்நோக்கி நின்றார்கள். இனிய அருவியின் ஓசை, காற்றில் நிறைந்து அவர்களின் காதுகளில் இனித்தது.

"முதலில் நாம் குழுக்களாகப் பிரிந்து, ஆசிரியர்கள் எடுத்து வந்துள்ள செங்கற்களைக் கொண்டு அடுப்பு அமைக்கலாமா?" தலைமையாசிரியர் கேட்டார். "பின்னர் உங்களில் சிலர் அரிசியை நீரோடையில் உள்ள தண்ணீரில் களைந்து சமைக்கத் தயார் செய்து அடுப்பில் வைக்கலாம். பின்னர் நாம் பன்றி இறைச்சி சூப் தயார் செய்யத் தொடங்கலாம். இப்பொழுது நாம் ஆரம்பிக்கலாமா?" என்றார் அவர்.

குழந்தைகள் தங்களுக்குள் 'கல், தாள், கத்திரி' எனக் கூறி குழுக்களாகப் பிரிந்து கொண்டனர். அவர்கள் மொத்தம் 50 பேர்களே இருந்ததால் ஆறு குழுக்களாகப் பிரிந்து கொண்டனர்.

தரையில் குழிதோண்டி அதில் செங்கற்களைப் புதைத்து அடுப்பு அமைத்தனர். அதன் குறுக்கே இரும்புக் கம்பிகளை வைத்து உணவு, சூப்



பாத்திரங்கள் வைப்பதற்கு வசதியாக வைத்துக் கொண்டனர். இவ்வேலை நடந்து கொண்டிருக்கும் போதே சிலர் காடுகளுக்குள் சென்று விறகு சேகரித்தனர். சிலர் அரிசியை ஓடை நீரில் கழுவி எடுத்து வரச் சென்றனர். வேலைகளை அவர்களே தங்களுக்குள் பகிர்ந்து கொண்டனர். டோட்டோ-சான் காய்களை வெட்டவும், சூப் தயார் செய்யவும் பொறுப்பெடுத்துக் கொண்டாள். டோட்டோ-சானைவிட இரண்டு வயது மூத்த பையன் ஒருவனும் சூப் தயாரிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருந்தான். அவன் காய்களை மிகப் பெரியதாகவோ அல்லது மிகச் சிறியதாகவோ வெட்டி குழப்பம் செய்து கொண்டிருந்தான். இருப்பினும் அவன், பணியில் ஆழ்ந்து வேகமாகச் செய்தான். அவன் மூக்கு நுனியில் வேர்வை மின்னியது.

டோட்டோ-சான் அம்மாவின் முறையைப் பயன்படுத்தி கத்தரி, உருளைக்கிழங்கு, வெங்காயம், பர்டாக் கிழங்குகள், குழந்தைகள் கொண்டு வந்த இன்னும் பிற காய்களையும் நுட்பத்துடன், நேர்த்தியாக சரியான அளவில் துண்டு துண்டுகளாக்கிக் கொண்டிருந்தாள். அவளாகவே சில கத்தரி, வெள்ளரிக்காய் ஆகியவற்றை மிகச் சிறிது சிறிதாக வெட்டி உப்பில் புரட்டி ஊறுகாய் தயார் செய்தாள்.

தங்களுக்கு ஒதுக்கப்பட்ட வேலையைச் சரியாக செய்யத் தெரியாது திணறிய சில பெரிய மாணவர்களுக்குக் கூட அவள் ஆலோசனைகள் வழங்கினாள். டோட்டோ-சான் உண்மையிலேயே தான் அன்னையைப் போல் ஆகிவிட்டதாக நினைத்துக் கொண்டாள். அவள் தயாரித்த ஊறுகாய் அனைவரையும் கவர்ந்தது.

"ஓ... இப்பொழுதுதான் நான் சிறிது முயற்சி செய்தேன். என்னால் இனியும் இதுபோல் நன்றாகச் செய்ய முடியும்" என அவள் பெருமையுடன் கூறிக் கொண்டாள்.

பன்றி இறைச்சி சூப் நன்றாகக் கொதித்து மணம் பரப்பியபோது ஒவ்வொருவரும் தங்கள் கருத்தைக் கூறிக்கொண்டனர். ஒவ்வொரு குழுவும் "வாவ்!" "ஹாய்!" என மகிழ்ச்சிக் கூச்சலிட்டனர். இவர்களின் மகிழ்ச்சிக் கூச்சலில் அங்கிருந்த பறவை இனங்களும் கலந்து கொண்டன. இதற்கிடையில் அனைவரின் ஆர்வத்தையும் தூண்டும் உணவு மணம் ஒவ்வொரு பாத்திரத்திலிருந்தும் வந்து கொண்டிருந்தது.

அதுவரை எந்தக் குழந்தையும் உணவு தயாரிப்பதை இவ்வளவு உன்னிப்பாகக் கவனித்தது கிடையாது. அடுப்பில் எரியும் நெருப்பைக்கூட அவர்களுக்குக் கட்டுப்படுத்தத் தெரியாது. உணவு மேஜையில் என்ன வைக்கப்பெறுகிறதோ அதை மட்டும் உண்டு பழக்கப்பட்டவர்கள். தற்போது சமைப்பதில் உள்ள மகிழ்ச்சியை நேரடியாக அனுபவித்ததோடு, உணவு வகைகள், என்னென்ன பொருட்கள் கலந்து தயாரிக்கப்படுகின்றன என்பதையும் கற்றுக் கொண்டார்கள். இது அவர்களுக்கு மிகவும் புதுமையான மகிழ்ச்சி அனுபவமாக அமைந்தது.

ஒவ்வொரு குழுவின் பணியும் முடிவுக்கு வந்து, அடுப்பு அணைக்கப் பட வேண்டிய நிலையில் இருந்தது. தலைமையாசிரியர் குழந்தைகளின் உதவியுடன் அனைவரும் வட்டமாக அமர்வதற்காக புல் தரையைச் சீர்

செய்து கொண்டிருந்தார்.

ஒவ்வொரு குழுவின் முன்பும் ஒரு சோற்றுப் பாத்திரமும், சூப் பாத்திரமும் வைக்கப்பட்டது. ஆனால் டோட்டோ-சான் தன் குழுவின் சூப் பாத்திரத்தை எடுத்துச் செல்ல அனுமதிக்கவில்லை. அவளுக்கு தன் பணி நிறைவுற்றதாகத் தோன்றவில்லை. அவளை அறியாமலேயே சூப் பாத்திரத்தின் மூடியைத் தன் கைகளால் திறந்தாள். "ஓ... இது மிகச் சூடாக இருக்கிறதே!" என்று கூறிக்கொண்டே தன் அன்னை செய்தது போல், தன் இரு கை விரல்களையும் காது மடலில் தேய்த்துக் கொண்டாள். அதன் பின்னரே மனநிறைவோடு தன் குழுவின் சூப் பாத்திரத்தை எடுத்துச் செல்ல அனுமதித்தாள். உலகில் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதை அறியாமல் குழந்தைகள் மகிழ்ச்சியில் திளைத்திருந்தனர். மற்றவர்களுக்குப் பிடித்திருந்ததோ, என்னவோ! ஆனால், டோட்டோ-சானுக்கு இந்நிகழ்ச்சிகள் முழு மனநிறைவை அளித்தன.

ஒவ்வொருவரின் கவனமும் தங்களுக்கு முன் இருந்த சோற்றுப் பாத்திரத்தின் மீதும், சூப்பிலிருந்து எழும் ஆவியின் மீதும் இருந்தது. அவர்களுக்குப் பசி எடுத்தது. அவர்கள் முன்னே, முதன்முதலில் அவர்களாலேயே தயாரிக்கப்பட்ட உணவு மணத்துக் கொண்டிருந்தது.

குழந்தைகள் வழக்கம்போல், "மெல்லு... மெல்லு... அதை நன்றாக மெல்லு... நீ உண்ணும் எல்லாவற்றையும் மெல்லு" என்று பாடலைப் பாடி முடித்ததும் அனைவரும் ஒரே குரலில் "இடாதாகிமாசு" (நான் நன்றியுடன் பகிர்ந்து கொள்கிறேன்) எனக் கூறினர். அதற்குப் பின் அந்த வனத்தில் அருவியின் ஓசையைத் தவிர வேறு எந்த சத்தமும் கேட்கவில்லை.

## நீ உண்மையிலேயே நல்ல பெண்

"நீ உண்மையிலேயே நல்ல பெண்; உனக்குத் தெரியுமா?" இதைத்தான் தலைமையாசிரியர் டோட்டோ-சானை ஒவ்வொரு முறை பார்க்கும் போதும் கூறுவார். இதை ஒவ்வொரு முறை கேட்கும்போதும் டோட்டோ-சான் சிரித்துக் கொண்டே தலையை ஆட்டி, "ஆம்! நான் நல்ல பெண்தான்" என்பாள். அவள் அதை நம்பினாள்.

உண்மையில் டோட்டோ-சான் பல வழிகளில் நல்ல சிறுமியாக இருந்தாள். அவள் பலரிடமும் அன்பாக நடந்து கொண்டாள். குறிப்பாக தனது உடல் ஊனமுற்ற நண்பர்களிடம் பண்புடன் நடந்து கொண்டாள். அவள் அவர்களைப் பல நேரங்களில் பாதுகாத்துள்ளாள். பிற பள்ளியைச் சார்ந்தவர்கள் கொடூரமாக ஏதேனும் பேசினால் அல்லது நடந்து கொண்டால் அவள் அதை எதிர்த்து சண்டையிட்டிருக்கிறாள். சில நேரங்களில் அது அழுகையில் கூட முடிந்திருக்கிறது. அவள் காயமடைந்த கால்நடைகள், மிருகங்களிடத்தில்கூட அன்பாக இருந்து உதவிகள் செய்திருக்கிறாள். இருப்பினும் புதுமையாக ஏதேனும் கண்டால் அதனிடத்தில் அவள் செலுத்தும் கவனமும், அவள் தன் மகிழ்ச்சியை வெளியிடும் விதமும், அவளது ஆசிரியர்களுக்குத் தொடர்ந்து தொந்தரவாகவே இருந்துள்ளது.

அவள் காலையில் கூட்ட அறைக்குச் செல்லும்போது தன் தொங்கும் சடைகளைத் தன் இரு புஜங்களின் பின்புறம் ஒட்டி வைத்தது போல் வைத்துக் கொள்வாள். இதுபோல் அவள் ஏதாவது செய்வதுண்டு. ஒருமுறை வகுப்பைப் பெருக்கிச் சுத்தம் செய்யும் பணி அவளுக்கு வந்தது. அவளது கூர்மையான கண் கீழே இருந்த தள்ளு கதவைப் பார்த்துவிட்டது. அவள் பெருக்கிய குப்பையெல்லாம் அதைத் திறந்து அதன் வழியே உள்ளே தள்ளினாள். அவள் வகுப்பறை உண்மையிலேயே இரயிலாக இருந்தபோது, கீழே இருக்கும் இயந்திரங்களைப் பார்வையிடுவதற்காக அந்தத் தள்ளு கதவு அமைக்கப்பட்டிருந்தது. ஆனால், அவளால் அக்கதவை மீண்டும் மூட இயலவில்லை. அது ஒவ்வொருவருக்கும் பல தொந்தரவுகளை அளித்தது.

மற்றுமொரு முறை அங்கிருந்த ஒரு மாணவன் அவளிடம் "இறைச்சியை எப்படி கொக்கியில் தொங்க விடுவார்கள் தெரியுமா?" எனக் கேட்டான். அவ்வளவுதான்! உடனே அவள் ஓடிச் சென்று உடற் பயிற்சி செய்யும் ஓர் உயரமான குறுக்குக் கம்பியிலிருந்து ஒரு கையால் தொங்க ஆரம்பித்துவிட்டாள். நீண்ட நேரம் அதிலேயே அப்படியே அசையாமல் தொங்கிக் கொண்டிருந்தாள். அதைப் பார்த்த ஓர் ஆசிரியர் அவளிடம் "அங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" எனக் கேட்டார். "இன்று நான்தான் இறைச்சித்துண்டு", என அங்கிருந்தே கத்தி பதில் அளித்தாள். அவள் பிடி தளர்ந்து அப்படியே தொப்பெனக் கீழே விழுந்தாள். அவளது மார்பு தரையில் மோதியதால் அன்று முழுவதும் அவளால் பேச முடியவில்லை. ஒருமுறை அவள் சாக்கடைக் குழியினுள் வீழுந்தபோதும் இப்படித்தான் ஆனது.

அவள் இப்படித்தான் ஏதாவது செய்து தன்னையே காயப்படுத்திக் கொள்வாள். ஆனால் தலைமையாசிரியர் இச்செய்திகளையெல்லாம் ஒரு போதும் அவள் அம்மா, அப்பாவுக்கு அனுப்பியது இல்லை. மற்ற மாணவர்களிடமும் அவ்வாறுதான் நடந்து கொள்வார். அவருக்கும் மாணவர்களுக்கும் உள்ள பிரச்சினைகளை அவர்களே தீர்த்துக் கொள்வார்கள். மாணவர்கள் கூறும் காரணங்களைக்கூட அவர் பொறுமை யுடன் கேட்பார். குழந்தைகள் உண்மையிலேயே ஏதேனும் தவறு செய்துவிட்டால், அது தவறுதான் என்பதை ஒப்புக் கொள்ள வைத்த பின், "இப்போது நீ மன்னிப்புக் கேட்க வேண்டும்", என்பார்.

டோட்டோ-சானைப் பொருத்தவரை அவளைப் பற்றி மற்ற மாணவர்களின் பெற்றோர்கள், பிற ஆசிரியர்கள் கூறும் புகார்கள் நிச்சயம் தலைமையாசிரியரின் காதுகளை எட்டியிருக்கும். அதனால்தான் தலைமையாசிரியர் அவளைப் பார்க்கும் வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம், "நீ உண்மையிலேயே நல்ல பெண்; உனக்குத் தெரியுமா?" எனக் கேட்பார். பெரியவர்கள் யாரேனும் அவர் 'உண்மையிலேயே' என்ற சொல்லை உச்சரிக்கும் விதத்தைக் கேட்டிருந்தால், அவர் கூறுவதின் முக்கியத்துவத்தை அறிந்திருப்பார்கள்.

டோட்டோ-சான் எதைப் புரிந்து கொள்ள வேண்டுமெனத் தலைமை யாசிரியர் விரும்பியிருப்பார் என்றால், அது இவ்வாறுதான் இருந்திருக்கும்.

'சிலர் நீ பல விஷயங்களில் நல்ல பெண் இல்லை என நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்; ஆனால் உனது உண்மையான பண்பு மோசமானது அல்ல. அவை மிகவும் நல்லவை என்பது எனக்குத் தெரியும்.'

அவர் உண்மையிலேயே எதைச் சொல்ல விரும்பினார் என்பதை டோட்டோ-சான் அறிந்து கொள்வதற்குப் பலப்பல ஆண்டுகளுக்கு முன்பே அவர் தன் கருத்தை எவ்வளவு, எளிய முறையில் அவள் மனதில் பதிய வைத்துள்ளார்; வியக்க வேண்டிய ஒன்றுதான்!

இருந்தபோதிலும், அவர் கூறியதின் உண்மையான பொருளை அவள் புரிந்து கொள்ள இயலாத நிலையிலும் தலைமையாசிரியர் 'நீ நல்ல பெண்', என்ற நம்பிக்கையை அவள் மனதில் ஆழமாகப் பதிய வைத்திருந்தார். சில துடுக்குத்தனமாக செயல்களில் அவள் ஈடுபடும் போதெல்லாம் தலைமையாசிரியரின் குரல் அவளது அடிமனத்தில் எதிரொலித்துக் கொண்டிருக்கும். அவள் பலமுறை தனக்குத்தானே கூட அவ்வாறு கூறிக் கொள்வாள். அவள் செய்தவைகளைப் பற்றி 'நல்ல செயல்' என அவளே பாராட்டிக் கொள்வதும் உண்டு.

அவள் டோமோயில் பயின்றவரை திரு.கோபயாஷி அடிக்கடி கூறிய இந்த முக்கிய வார்த்தைகள் வாழ்க்கை முழுவதும் அவளைச் செம்மைப்படுத்தியது.

"டோட்டோ-சான் நீ உண்மையிலேயே நல்ல பெண். உனக்குத் தெரியுமா?"

## அவனது மணப்பெண்

டோட்டோ-சான் மிகவும் வருந்த நேர்ந்த நிகழ்ச்சி அது.

அவள் அப்போது மூன்றாம் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தாள். அவளுக்கு டாய்-சானை மிகவும் பிடித்திருந்தது. அவன் ஆங்கிலம் படித்துக் கொண்டிருந்தான். அவன்தான் அவளுக்கு நரி என்பதற்கான ஆங்கில வார்த்தையைக் கற்றுத் தந்திருந்தான்.

"டோட்டோ-சான் உனக்கு கிட்சுனே (நரி) என்பதற்கான ஆங்கில வார்த்தை தெரியுமா? அதுதான் "ஃபாக்ஸ்" என அவன் கூறினான்.

"ஃபாக்ஸ்..." டோட்டோ-சான் வியந்தாள். அன்று முழுவதும் இப்புதிய சொல்லின் ஓசை அவள் காதில் ஒலித்துக் கொண்டே இருந்தது. அது முதல் அவள் காலையில் வகுப்பிற்கு வந்ததும் தன் சிறு கத்தியால் டாய்-சானின் பென்சில்களை அழகாகச் சீவி வைப்பாள். தன் சொந்தப் பென்சில்களைப் பற்றிக்கூட கவலைப்பட மாட்டாள். அதைத் தன் பல்லால் கடித்துக்கூட சரி செய்து கொள்வாள்.

இவள் டாய்-சானிடம் இவ்வளவு அன்பாக இருந்தாலும் கூட அவன் முரட்டுத்தனமாக நடந்து கொள்வான். அந்நிகழ்ச்சி உணவு இடை வேளையின் போது நடைபெற்றது. டோட்டோ-சான் கூட்ட அறைக்குப் பின்னால் மறக்க முடியாத அந்தக் கழிவறைக் குழிக்குப் பக்கத்தில், சுற்றிக் கொண்டிருந்தாள்.

"டோட்டோ-சான்".

டாய்-சானின் குரல் கேட்டு திடுக்கிட்டு அவள் நின்றாள். மூச்சுவிட

சிறிது நேரம் எடுத்துக் கொண்டு அவன் கூறினான், 'நான் வளர்ந்து பெரியவன் ஆனதும், உன்னைத் திருமணம் செய்துகொள்ளப் போவதில்லை. நீ எவ்வளவுதான் கேட்டாலும் நான் அதைப் பொருட் படுத்த மாட்டேன்", எனக் கூறிவிட்டு தரையைப் பார்த்துக் கொண்டே நடந்து சென்றான்.

டோட்டோ-சான் திகைப்புடன் அவனும், அவனது பெரிய தலையும் மறையும்வரை அப்படியே பார்த்துக் கொண்டு நின்றாள். அவனது பெரிய தலை முழுவதும் மூளையுள்ளதாக அவள் புகழ்ந்திருக்கிறாள். அவனது தலை அவ்ன் உடலுக்குப் பொருத்தமற்ற வகையில் மிகப் பெரியதாக இருந்ததால் "பெருந்தலையன்", எனக் குழந்தைகள் அழைப்பதுண்டு.

டோட்டோ-சான் தன் இரு கைகளையும் சட்டைப்பையில் நுழைத்துக் கொண்டு யோசிக்க ஆரம்பித்தாள். அவனைத் தொல்லைப்படுத்தும் வகையில் தான் ஏதேனும் செய்ததாக நினைவுக்கு வரவில்லை. நம்பிக்கை இழந்த நிலையில் அவளது வகுப்புத் தோழி மியோ-சானிடம் அவள் இது பற்றி விவாதித்தாள்.

டோட்டோ-சான் கூறியவைகளைக் கேட்டபின், மியோ-சான் தனது கருத்தை வெளியிட்டாள். "ஏன் இருக்கக் கூடாது? இன்று நீ சூமோ குத்துச் சண்டையில் அவனை வளையத்திற்கு வெளியே குத்தித் தள்ளிவிட்டாய். அவன் வளையத்திற்கு வெளியே விழுந்ததில் ஆச்சரியம் ஏதுமில்லை. ஏனென்றால் அவன் தலை அவ்வளவு கனமானது. ஆனால் அவன் இன்னும் உன் மீது பிரியமாகத்தான் இருக்கிறான்", என்றாள்.

டோட்டோ-சானின் மனம் உண்மையிலேயே வருந்தியது. அவள் மிகவும் விரும்பிய ஒருவனை, தினமும் அன்புடன் பென்சிலை சீவி வைக்க அனுமதித்தவனை, குத்துச் சண்டையில் முறியடிக்க வேண்டு மென்ற வெறி எவ்வாறு வந்தது? ஆனால் இந்த சிந்தனை தாமதமாகவே வந்துள்ளது. இனி அவள் அவனது மணப்பெண்ணாய் இருக்கப் போவதில்லை.



ஆனாலும் டோட்டோ-சான் முடிவு செய்தாள். "எப்பொழுதும்போல் இனியும் நான் அவனது பென்சிலைத் தினமும் சீவி வைப்பேன். ஏனென்றால் நான் அவனை நேசிக்கிறேன்."

## பாழடைந்த பழைய பள்ளி

அப்பொழுது ஆரம்பப் பள்ளி மாணவர்களிடையே எதுகை மோனையுடன் பாடப்பெறும் ஒரு சிறு பாடல் உண்டு. அவளது முந்தைய பள்ளியில் அதைப் பாடியுள்ளார்கள். குழந்தைகள் பள்ளிவிட்டு வீட்டிற்குச் செல்லும்போது, பள்ளியைவிட்டு வெளியில் வந்ததும் தலையை மட்டும் திருப்பிப் பள்ளியைப் பார்த்து

"அகமட்சு பள்ளி, பாழடைந்த பழைய பள்ளி
என்றாலும் உள்ளே, அதுதான் மிகச்சிறந்த பள்ளி" எனப்பாடுவார்கள்.

பிற பள்ளிகளில் பயிலும் மாணவர்கள் அவ்வழியே செல்ல நேர்ந்தால், அவர்கள் அப்பள்ளியைச் சுட்டிக்காட்டி,

"அகமட்சு பள்ளி அற்புதமான பள்ளி
இருந்தாலும் உள்ளே, பாழடைந்த பழைய பள்ளி"
எனப் பாடி, முரட்டுத்தனமாகக் குரல் எழுப்பிச் செல்வர்.

இப்பாடலின் முதல் வரி அப்பள்ளியின் கட்டிடம் பாழடைந்ததா அல்லது அற்புதமானதா? என்பதைக் கூறுகிறது. ஆனால், இரண்டாம் வரிதான் மிக முக்கியமானது. பள்ளியின் உள்ளே என்ன நடக்கிறது என்பதைச் சொல்கிறது. எனவே, முதல் வரியில் 'உனது பள்ளி வெளியே பாழடைந்த நிலையில் உள்ளது' எனக் கூறுவதை யாரும் பொருட்படுத்த மாட்டார்கள். உள்ளே எப்படி உள்ளது என்பதுதான் முக்கியம். இது போன்ற பாடலை எப்பொழுதும் ஐந்து அல்லது ஆறு மாணவர்கள் கூட்டாகத்தான் பாடுவார்கள்.

ஒரு நாள் மாலை பள்ளி நேரத்திற்குப்பின் 'டோமோயி' மாணவர்கள் வழக்கம்போல் மைதானத்தில் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் மைதானத்தை விட்டு வெளியேறுவதற்கான கடைசி மணி அடிக்கும்வரை அவர்கள் விரும்புவதுபோல் என்ன வேண்டுமானாலும் செய்வர். தலைமையாசிரியர், குழந்தைகள் விரும்புவதைச் சுதந்திரமாகச் செய்வதற்கு நேரம் ஒதுக்க வேண்டியது அவசியம் என நினைத்தார். எனவே, பள்ளி நேரத்திற்குப்பின் ஒதுக்கப்படும் நேரம் பிற பள்ளிகளைவிட டோமோயில் அதிக நேரம் இருந்தது.

அன்று சிலர் பந்து விளையாடிக்கொண்டிருந்தார்கள். சிலர் இரும்புக் குழாய்களிலும், மணற் பெட்டிகளிலும் விளையாடிக் கொண்டிருந்தனர். சிலர் மலர்ப் பாத்திகளைப் பராமரிக்கும் பணியில் ஈடுபட்டிருந்தனர். சில பெரிய மாணவிகள் படிக்கட்டில் உட்கார்ந்து அரட்டை அடித்துக் கொண்டிருந்தனர். சிலர் மரத்தில் ஏறி அமர்ந்திருந்தனர். ஒவ்வொருவரும் என்ன விரும்பினார்களோ அதைச் செய்து கொண்டிருந்தார்கள். அவர்களில் மிகச்சிலர் டாய்-சானைப் போன்றோர், வகுப்பறையில் இருந்து இயற்பியல் சோதனைகளைச் செய்து கொண்டிருந்தனர். குடுவையிலும், சோதனைக்

குழாயிலும் திரவங்களைக் காய்ச்சி பரிசோதனை செய்து கொண்டிருந்தனர். சிலர் நூலகத்தில் படித்துக் கொண்டிருந்தனர். மிருகங்களை விரும்பும் 'அமதேரா' அங்கு சுற்றித் திரிந்த ஒரு பூனையைப் பிடித்து, அதை மலர்த்தி வைத்து அதன் காதுகளின் உள்ளே ஆராய்ந்து கொண்டிருந்தான். அவரவர்கள் விரும்பும் வழியில் நேரத்தை மகிழ்வுடன் அனுபவித்துக் கொண்டிருந்தார்கள்.

திடீரென பள்ளிக்கு வெளியே சத்தமான ஒரு பாடல் கேட்டது.

"டோமோயி பள்ளி ஒரு பாழடைந்த பழைய பள்ளி

உள்ளும்கூட அது ஒரு பாழடைந்த பழைய பள்ளி"

"என்ன கொடுமை?" டோட்டோ-சான் நினைத்தாள். இப்பாடல் வாசலில் இருந்து கேட்டிருக்க வேண்டும். நல்லது. அது வாசலே அல்ல. இலைகள் துளிர்த்து நிற்கும் இரு கம்பங்கள். ஆனால் எப்படி இருப்பினும் அவளால் அக்குரலை நன்கு கேட்க முடிந்தது. அது மிகக் கொடுமை. அவர்களின் பள்ளியை உள்ளும் புறமும் பாழடைந்தது எனக்கூறுவதா? அவள் கொதித்தாள். மற்றவர்களும் கடும் சினம் கொண்டு வாசலை நோக்கி ஓடினர். "பாழடைந்த பழைய பள்ளி", அழுத்தமாகக் கூறிக் கொண்டும், அருவருக்கத்தக்க குரல் எழுப்பிக் கொண்டும், வேறு பள்ளியைச் சார்ந்த சில மாணவர்கள் ஓடிக் கொண்டிருந்தனர்.

டோட்டோ-சான் சீற்றத்துடன் அவர்களைத் துரத்திச் சென்றாள். அவள் மட்டுமே அவர்களுக்குப்பின் ஓடினாள். ஆனால் அவர்கள் வேகமாகச் சென்று பக்கத்திலிருந்த தெருவினுள் புகுந்து கண் இமைக்கும் நேரத்தில் மறைந்தனர்.

டோட்டோ-சான் ஆற்றாமையுடன் பள்ளிக்குத் திரும்பினாள். திரும்பி நடந்து வரும்போதே அவள் வாய் பாடியது.

"டோமோயி அற்புதமான பள்ளி"

மேலும் சில அடிகள் நடந்ததும் அவள் அடுத்த அடியைப்பாடினாள்.

"உள்ளும் புறமும் அது அற்புதமான பள்ளி"

அவள் அதை விரும்பினாள். அது அவளுக்கு மகிழ்ச்சியை அளித்தது. எனவே, அவள் பள்ளியின் அருகே வந்ததும், தன்னை மற்றொரு பள்ளியிலிருந்து வந்தவளாக நினைத்துக் கொண்டு உரத்த குரலில் பாடினாள். புதர் வேலியினூடே எல்லோரும் கேட்கும் வகையில் அவள் குரல் ஒலித்தது.

"டோமோயி பள்ளி ஓர் அற்புதமான பள்ளி

உள்ளும் புறமும் அது ஓர் அற்புதமான பள்ளி"

மைதானத்தில் விளையாடிக் கொண்டிருந்தவர்களால் யார் என முதலில் கண்டுபிடிக்க முடியவில்லை. பின்னர் அது டோட்டோ-சானின் குரல் என உணர்ந்தபோது அவர்களும் வெளியே வந்து அவளுடன் சேர்ந்து கொண்டனர். கடைசியில் அவர்கள் ஒருவர் தோள் மேல் ஒருவர் கை போட்டுக்கொண்டு பள்ளியைச் சுற்றிச் சுற்றி வந்து ஒன்றாகப் பாடினர். அவர்கள் அப்போது அதைப் புரிந்து கொள்ள இயலவில்லையென்றாலும் அப்பாடல் அவர்களின் உதடுகளைவிட உள்ளத்திலிருந்து வெளி வந்தது. அவர்கள் பள்ளியைச் சுற்றச் சுற்ற அவர்களின் உணர்ச்சிகள்

மேலும் மேலும் அதிகரித்தது.

"டோமோயி பள்ளி ஓர் அற்புதமான பள்ளி
உள்ளும் புறமும் அது ஓர் அற்புதமான பள்ளி"

இவர்கள் பாடுவதை அலுவலகத்தில் அமர்ந்து கேட்டுக் கொண்டிருந்த தலைமையாசிரியர் எவ்வளவு மகிழ்ந்திருப்பார் என்பதை அக்குழந்தைகள் அறிந்திருக்க மாட்டார்கள்.

இவ்வாறு நடப்பது எல்லாக் கல்வியாளர்களுக்கும் மகிழ்ச்சி தரக் கூடியதுதான். ஆனால் உண்மையிலேயே நல்ல ஆரம்பக் கல்வியைப் பற்றி சிந்திப்பவர்களுக்கு, அவர்கள் தினமும் சந்தித்து வரும் தொடர்ச்சியான வேதனைகளுக்கு நடுவே இதுபோன்ற நிகழ்ச்சி எவ்வளவு மகிழ்வை அளித்திருக்கும்! அதுவும் எதையுமே வழக்கத்திற்கு மாறாகச் செய்யும் டோமோயி பள்ளிக்கு கூடுதல் மகிழ்வை அல்லவா தந்திருக்கும். அந்தப் பள்ளியும், பாரம்பரியக் கல்வியை விரும்புவோர்களின் விமர்சனத்திலிருந்து தப்பவில்லை. இப்படிப்பட்ட சூழலில் மாணவர்கள் தலைமையாசிரியருக்கு அளித்த அற்புதமான பரிசு அப்பாடல்.

"டோமோயி பள்ளி ஓர் அற்புதமான பள்ளி,
உள்ளும் புறமும் அது ஓர் அற்புதமான பள்ளி"

அன்று அப்பள்ளியின் கடைசி மணி வழக்கத்திற்கு மாறாக தாமதமாகவே ஒலித்தது.

## வண்ண நாடா

ஒரு நாள் உணவு இடைவேளையின்போது, குழந்தைகள் தங்கள் உணவை முடித்தபின், டோட்டோ-சான் கூட்ட அறையைத் தாண்டி குதித்து ஓடிக் கொண்டிருந்தாள். அப்பொழுது தலைமை ஆசிரியரைச் சந்திக்க நேர்ந்தது. அவள் தலைமையாசிரியரைச் சந்தித்தாள் எனக்கூறுவது வித்தியாசமான தாகத்தான் இருக்கும். ஏனெனில் அவர் உணவு வேளை முழுவதும் மாணவர்களோடுதான் இருப்பார். ஆனால் அவள் அவரைச் சந்தித்தாள். ஏனெனில் அவர் எதிர் திசையிலிருந்து வந்து கொண்டிருந்தார்.

"ஓ... நீ இங்குதான் இருக்கிறாயா?" என்ற தலைமையாசிரியர் "நான் உன்னிடம் சில விவரங்கள் கேட்க விரும்புகிறேன்" என்றார்.

"என்ன அது?" டோட்டோ-சான் வினவினாள். தலைமையாசிரியர் விபரம் கேட்டு அதை அளிப்பதில் அவளுக்கு மகிழ்விருந்தது.

அவள் தலையில் வைத்திருந்த வளையைப் பார்த்து "இந்த வண்ண நாடாவை எங்கே வாங்கினாய்?" எனக் கேட்டார்.

அதைக் கேட்டதும் டோட்டோ-சானின் முகத்தில் மகிழ்ச்சி தோன்ற வில்லை. ஏனெனில் அவள் அதை நேற்றும் அணிந்திருந்தாள். தலைமை யாசிரியர் அறிய விரும்பும் ஏதோ ஒன்று அவளிடம் இருப்பதாக நினைத்தாள். தலைமையாசிரியர் அவளது தலையிலுள்ள வளையை நன்கு கவனிக்குமளவிற்கு அவரருகில் சென்றாள்.

"இது எனது அத்தையின் பழைய பள்ளிச் சீருடையில் இருந்தது", எனப் பெருமையுடன் சொன்னாள். "நான் இதை அவர்கள் ஒரு

இழுப்பறையினுள் வைக்கும்போது கவனித்துவிட்டேன். அதனால் அதை எனக்குத் தந்து விட்டார்கள். நான் எதையும் கூர்ந்து கவனிக்கக் கூடியவள் என்று அத்தை கூறினார்கள்", என்றாள்.

"அப்படியா?"—என்ற தலைமையாசிரியர் சிந்தனையில் ஆழ்ந்தார்.

டோட்டோ-சானுக்கு அந்த வண்ண நாடாவைத் தலையில் வைத்திருப்பது பெருமையாக இருந்தது. அவள் அத்தையை எப்படிப் பார்க்கச் சென்றாள் என்பது பற்றியும், அத்தை ஆடைகளை வெளியில் எடுத்தது பற்றியும் விளக்கினாள். அவர்களின் ஆடைகளின் நடுவே பழைய பாணியில் நீண்ட பழுப்பு நிறக் குறும்பாவாடை, அவர்கள் பள்ளிச் சிறுமியாய் இருந்தபோது அணிந்தது. அவர்கள் அதைத்தனியே வைத்தபோது அதன்மீது அழகான ஒன்றை டோட்டோ-சான் கண்டாள்.

"என்ன, அது?" என்றாள்.

டோட்டோ-சானின் கேள்வியால், அவள் அத்தை தயங்கி நின்றாள். அந்தக் குறும்பாவாடையின் இடுப்புப் பட்டையில் அழகான இந்த வண்ண நாடா இருந்தது.

"பின்புறம் இருந்து பார்க்க, இது உனக்கு மிக அழகாக இருக்கும்", அத்தை சொன்னாள். "அந்த நாளில் ஒவ்வொருவரும் கையினால் செய்த சிறிய தொங்கு இழைகளையோ, பெரிய வளையத்தில் கட்டிய அகலமான வண்ண நாடாவையோ வைத்துக் கொள்ள விரும்பினார்கள்".

டோட்டோ-சான் அந்த வண்ண நாடாவைப் பார்த்து எப்படிப் பெருமூச்சு விட்டாள் என்பதையும், அதை வைத்துக்கொள்ள எப்படி விரும்புகிறாள் என்பதையும் அறிந்த அத்தை, "நான் மீண்டும் இதை அணியப் போவதில்லை. எனவே, நான் இதை உனக்குத் தருகிறேன்", என்றாள். அவள் கத்தரியை எடுத்து அந்த உடையுடன் இணைத்திருந்த நூல்களை வெட்டிவிட்டு டோட்டோ-சானுக்கு அளித்தாள். இதுதான் அவள் அதை எவ்வாறு பெற்றாள் என்பதன் விளக்கம். அது உண்மையிலேயே அழகான வண்ண நாடா. அது அகலமாக, நல்ல பட்டுத் துணியால் செய்யப்பட்டிருந்தது. ரோஜாப்பூக்களும், வண்ண நூல் வேலைப்பாடுகளும் அதன்மீது நெசவு செய்யப்பட்டிருந்தன. கட்டிய பின்னும் அது அகலமாகவும் விரைப்பாகவும் இருந்தது. டோட்டோ-சானின் தலையளவிற்கு வளையங்கள் இருந்தன.

அத்தை அது வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்த துணியால் செய்யப்பட்டது எனக் கூறியிருந்தாள்.

டோட்டோ-சான் பேசிக் கொண்டிருக்கும்போதே, அவளின் வண்ணநாடா காற்றில் உராய்ந்து எழுப்பும் ஒலியைத் தலைமையாசிரியர் கேட்க வேண்டுமென்பதற்காக, தலையை வேகமாக ஆட்டி ஆட்டிப் பேசிக் கொண்டிருந்தாள். அவர் அவள் கூறிய கதையைக் கேட்டதும் சிறிது அமைதி இழந்து காணப்பட்டார்.

"அவ்வளவுதானே" அவர் சொன்னார், "நேற்று மியோ-சான் நீ அணிந்திருப்பது போன்ற வண்ணநாடா வேண்டுமெனக் கேட்டாள். ஆகையால் நான் நேற்று ஜியுகோகாவில் உள்ள அனைத்துக் கடைகளுக்கும் சென்று கேட்டுவிட்டேன். ஆனால் அவர்களிடம் இது போன்று எதுவும்

இல்லை. ஏனெனில் இது இறக்குமதி செய்யப்பட்டது இல்லையா?" என்றார்.

அவரது முகம் தலைமையாசிரியர் என்பதைவிட தனது மகளால் தொந்தரவுக்கு உட்படுத்தப்பட்ட ஒரு தந்தையின் முகம்போல் இருந்தது.

"டோட்டோ-சான், இந்த வண்ண நாடாவை நீ பள்ளிக்கு அணிந்து வராதிருந்தால், நான் மிகவும் நன்றியுடையவனாயிருப்பேன். மியோசான் இதுபோன்ற ஒன்று வேண்டுமென ஓயாது தொல்லை கொடுக்கிறாள். எனவே, நீ நான் சொன்னதுபோல் செய்வாயா?" எனக் கேட்டார்.

டோட்டோ-சான் கைகளைக் கட்டிக்கொண்டு அவர் கூறியதைப் பற்றி சிந்தித்தாள்.

"சரி, நான் இனிமேல் இதை அணிந்துகொண்டு இங்கு வரமாட்டேன்" என உடனே பதிலளித்தாள்.

"மிக்க நன்றி", என்றார் தலைமையாசிரியர்.

டோட்டோ-சானுக்கு வருத்தமாகத்தான் இருந்தது. ஆனால் தலைமையாசிரியர் தொல்லைக்குட்பட்டிருந்தார். எனவே, அவள் ஒத்துக் கொண்டாள். மற்றுமொரு காரணம், ஒரு வளர்ந்த மனிதரை, அதுவும் அவள் அன்பிற்குரிய தலைமையாசிரியரை வண்ண நாடாவிற்காக ஒவ்வொரு கடையாக ஏறி இறங்க வைத்தது அவளுக்கு மிகுந்த வருத்தத்தை அளித்தது. அதுதான் டோமோயின் பாடம். ஒவ்வொருவரும் மற்றவர்களின் பிரச்சினைகளைப் புரிந்துகொண்டு உதவ முயல்வதற்கு வயது வித்தியாசம் தேவையில்லை என்பதுதான். இது இயற்கையாக நடைமுறைக்கு வந்திருந்தது.

அடுத்த நாள் காலை அம்மா, டோட்டோ-சான் பள்ளிக்குச் சென்றபின், சுத்தம் செய்வதற்காக அவள் அறைக்குச் சென்றபோது அவளுக்கு மிகவும் பிடித்த பொம்மைக் கரடியின் கழுத்தில் அந்த அழகான வண்ண நாடா இருப்பதைக் கண்டாள். அம்மாவுக்கு ஆச்சரிய மாக இருந்தது. டோட்டோ-சான் எதற்காக இந்த வண்ண நாடாவைத் தலையில் அணிவதை விட்டுவிட்டாள்? அன்னைக்கு இது எதிர்பாராத நிகழ்வாகத் தோன்றியது. அந்த பழுப்புநிற பொம்மைக் கரடி மன உளைச்சலுடன் அந்த அழகான வண்ண நாடாவை அணிந்திருப்பதாக திடீரென அம்மாவுக்கு நினைத்துப் பார்க்கத் தோன்றியது.

## ஊனமுற்றோர்க்கு ஆறுதல்

டோட்டோ-சான் தன் வாழ்வில் முதன்முறையாக ஊனமுற்றவர்களைக் காண மருத்துவமனைக்குச் சென்றாள். அவளுக்கு முன்பின் அறிமுகமில்லாத முப்பது ஆரம்பப் பள்ளி மாணவ, மாணவியருடன் அவள் சென்றிருந்தாள். ஆரம்பப் பள்ளி மாணவர்களுக்கென புதிதாக நாடு முழுவதும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த திட்டத்தின் கீழ் அவள் சென்றிருந்தாள். அத்திட்டத்தின்படி ஒவ்வொரு பள்ளியும் இரண்டு அல்லது மூன்று குழந்தைகளை அனுப்ப வேண்டும். டோமோயி போன்ற சிறிய பள்ளிகள் ஒருவரை அனுப்பும். ஏதேனும் ஒரு பள்ளியின் ஆசிரியர்

அக்குழுவை மருத்துவமனைக்கு அழைத்துச் செல்வார். டோட்டோ-சான், டோமோயி சார்பில் அக்குழுவுடன் வந்திருந்தாள்.

அக்குழுவிற்குப் பொறுப்பான ஆசிரியை ஒல்லியாக, கண்ணாடி அணிந்த பெண்மணியாக இருந்தார். அவ்வாசிரியை ஏறத்தாழ பதினைந்து காயமடைந்த போர் வீரர்கள் இருந்த அறைக்கு மாணவர்களை அழைத்துச் சென்றாள். ஊனமுற்ற வீரர்கள் வெள்ளை உடையில் இருந்தனர். சிலர் படுக்கையில் இருந்தனர். சிலர் நடந்து கொண்டிருந்தனர். டோட்டோ-சான் காயமடைந்த போர் வீரர்கள் எப்படி இருப்பார்களோ எனப் பயந்து கொண்டிருந்தாள். ஆனால், தலையில் கட்டுக்களுடன் சிலர் இருந்தாலும் அவர்கள் சிறுவர்களைப் பார்த்ததும் புன்னகையுடன் கைகளை ஆட்டி வரவேற்றனர். அவர்கள் அன்புடன் காணப்பட்டதால் அவள் கவலை தீர்ந்தது.

அந்த ஆசிரியை குழந்தைகளை அந்த அறையின் நடுவில் கூட்டமாக நிற்க வைத்து, போர்வீரர்களைப் பார்த்துப் பேச ஆரம்பித்தார்.

ஆசிரியை, "நாங்கள் உங்களைக் காண வந்திருக்கிறோம்", என்று சொன்னதும் குழந்தைகள் குனிந்து வணக்கம் தெரிவித்தனர். ஆசிரியை மேலும் கூறினார், "இன்று மே மாதம் ஐந்தாம் நாள்—சிறுவர் தினம் என்பதால் 'குட்டி மீன் கொடி' என்ற பாடலைப் பாடப் போகிறோம்" என்றார். ஆசிரியை இசையமைப்பாளரைப்போல் கையை உயர்த்தி "சரி தயார், மூன்று, நான்கு" எனக் கூவவும், குழந்தைகள் ஒருவரை ஒருவர் அறியாதிருந்தாலும் முழு மனதுடன் ஒரே குரலில் பாடினார்.

"மேற்கூரைக் கடலின் மேலே... மேகக் கடலின் மேலே..."

டோட்டோ-சானுக்கு இந்தப் பாடல் தெரியவில்லை. டோமோயில் இது போன்ற பாடல்கள் சொல்லித் தரப்படுவதில்லை. அன்பான முகத்துடன் அமர்ந்திருந்த ஒரு போர்வீரரின் படுக்கைமீது ஓர் ஓரத்தில் டோட்டோ-சான் அமர்ந்து கொண்டாள். மனத்திற்குச் சிரமமாக உணர்ந் தாலும் அவர்கள் பாடுவதை அமைதியாகக் கவனித்துக் கொண்டிருந்தாள். அந்தப் பாடல் முடிந்ததும் ஆசிரியை தெளிவாக அறிவித்தார். இப்பொழுது நாம் "பொம்மைகள் திருவிழா என்ற பாடலைப் பாடப்போகிறோம்". டோட்டோ-சானைத் தவிர மற்ற எல்லோரும் அப்பாடலை அழகாகப் பாடினார்கள்.

"வாருங்கள் நாம் தீபமேற்றுவோம்
ஒவ்வொரு தீபமாக தொடர்ந்து ஏற்றுவோம்..."

டோட்டோ-சானுக்கு அமைதியாக இருப்பதைத் தவிர வேறெதுவும் செய்யத் தோன்றவில்லை.

எல்லோரும் பாடி முடிந்ததும் வீரர்கள் அனைவரும் கைதட்டினர். அடுத்து "குட்டைக் குதிரையும் ஆடும்" பாடலாமா...? மூன்று, நான்கு... எனக் கூறியதும் அனைவரும் பாட ஆரம்பித்தனர். டோட்டோ-சானுக்கு அந்தப் பாடலும் தெரியவில்லை. குழந்தைகள் பாடி முடித்ததும் டோட்டோ-சான் அமர்ந்திருந்த கட்டிலில் இருந்த வீரர் அவள் தலையை அன்புடன் தடவி "நீ பாடவில்லையே" எனக் கேட்டார்.

டோட்டோ-சானின் மனம் வருந்தியது. காயமுற்றவர்களைக் காண

வந்தும், அவர்கள் மகிழும்படி தான் ஒரு பாடல்கூட பாடவில்லையே என நினைத்தாள். உடனே படுக்கையைவிட்டு எழுந்து சில அடி தூரத்தில் நின்றாள். "சரி இப்பொழுது நான் எனக்குத் தெரிந்த ஒரு பாடலைப் பாடுகிறேன்", எனத் தைரியமாக அறிவித்தாள்.

நாம் திட்டமிடாத ஏதோ ஒன்று நடக்கப் போகிறது என ஆசிரியை நினைத்து "நீ என்ன பாடப் போகிறாய்?" எனக்கேட்டார்.

டோட்டோ-சான் ஏற்கெனவே ஆழ்ந்த மூச்சை இழுத்துப்பாட ஆரம்பித்துவிட்டதால் பொறுத்திருந்து பார்ப்போம் என ஆசிரியை முடிவு செய்தார்.

டோட்டோ-சான், டோமோயி சார்பில் வந்திருந்ததால் நன்கு தெரிந்த டோமோயின் பாடலைப் பாடுவதென முடிவு செய்தாள். மூச்சை நன்றாக இழுத்துக் கொண்டு அவள் ஆரம்பித்தாள்.

"மெல்லு மெல்லு... அதை நன்றாக மெல்லு;

நீ உண்ணும் எல்லாவற்றையும் மெல்லு"

சில குழந்தைகள் சிரித்தனர். மற்றவர்கள் பக்கத்திலிருந்தவர்களைக் கேட்டனர் "என்ன பாடல்... இது என்ன பாடல்". ஆசிரியை தாளமிடத் தொடங்கினார். ஆனால் தாளம் சரியாகத் தெரியாமல் கை அந்தரத்தில் நின்றது. அது டோட்டோ-சானுக்கு மன நெருடலை அளித்தது. இருப்பினும் அவளால் முடிந்த அளவு அற்புதமாகப்பாடினாள்.

"மெல்லு அதை, மெல்லு அதை,

மெல்லு அதை, மெல்லு அதை,

உனது சாதம், மீன் இறைச்சி எல்லாவற்றையும் மெல்லு"

அவள் பாடி முடித்ததும், குனிந்து அனைவருக்கும் வணக்கம் தெரிவித்தாள். அவள் நிமிர்ந்து பார்த்தபோது வீரர்களின் விழிகளில் இருந்து கண்ணீர் வழிந்து கொண்டிருப்பதைக் கண்டு அதிர்ச்சியுற்றாள். தான் ஏதோ வேண்டாத ஒன்றைச் செய்துவிட்டோமோ என எண்ணினாள். அவள் அப்பாவைவிட வயதில் முதிர்ந்த ஒரு வீரர் அவள் தலையில் அன்புடன் தட்டிக் கொடுத்து "நன்றி... நன்றி... மிக்க நன்றி..." என்றார்.

அவர் அவளது தலையைத் தட்டிக் கொடுத்துக் கொண்டிருந்தாலும் அவரால் அழுவதை நிறுத்த முடியவில்லை. ஆசிரியை அவரைத் தேற்றும் வகையில், "நாங்கள் போர் வீரர்களுக்காக எழுதி வைத்துள்ள கட்டுரையைப் படிப்பதற்கு இதுதான் சரியான நேரம் என நினைக்கிறேன்" என அறிவித்தார்.

குழந்தைகள் முறை வைத்து ஒவ்வொருவராகக் கட்டுரையைப் படிக்க ஆரம்பித்தார்கள். ஆனால் டோட்டோ-சான் தன் அருகில் இருந்த அந்தப் போர் வீரரையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவரது கண்களும், மூக்கும் சிவந்து விட்டன. ஆனாலும் அவர் சிரித்தார். டோட்டோ-சான் பதிலுக்குச் சிரித்தாள். அவள் தனக்குள்ளே., "இப்போர் வீரர் சிரித்து விட்டதால் நான் மகிழ்ச்சியாக இருக்கிறேன்", என நினைத்துக் கொண்டாள்.

அவ்வீரரின் கண்களைக் கலங்கச் செய்தது எது? அவர்தான் அறிவார். அவருக்கு டோட்டோ-சானைப் போன்ற சிறிய மகள் இருந் திருக்கலாம் அல்லது அவள் பாடிய அச்சிறந்த பாடல் அவர் மனதைத்

தொட்டு இருக்கலாம். அல்லது அவரது போர்முனை அனுபவம், இப்படிப்பட்ட சின்னஞ்சிறு குழந்தைகளைக்கூட உணவுப் பஞ்சம் விட்டு வைக்காதே என உணர்த்தி இருக்கலாம். அல்லது இப்படிப்பட்ட சூழலை அறியாது 'மெல்லு மெல்லு, நன்றாக மெல்லு' எனப் பாடுகிறதே என நினைத்திருக்கலாம். அல்லது உண்ணுவதற்கு எதுவுமே இல்லாத நிலை வரப்போகிறதே என நினைத்து வருந்தியிருக்கலாம். ஆனால் இப்படிப்பட்ட சிறுவர்களைக்கூட விழுங்கப் போகிற கொடுமையான நிகழ்ச்சி வரப் போகிறது என்பதை அவரால் உணர முடிந்தது.

தங்கள் கட்டுரைகளைப் படித்துக் கொண்டிருந்த சிறுவர்களுக்கு இதெல்லாம் தெரியாது. ஆனால் பசிபிக் பெருங்கடல் யுத்தம் ஏற்கெனவே நடந்து கொண்டிருந்தது.

## ஆரோக்கிய மரப்பட்டை

ஜியுகோகா இரயில் நிலையத்தின் வாசலில் டோட்டோ-சானுக்கு ஏற்கெனவே அறிமுகமான பயணச் சீட்டு பரிசோதகர் நின்றதால், அவள் தன் கழுத்தில் மாட்டியிருந்த டிக்கெட் உள்ள நாடாவைக் காட்டிவிட்டு வெளியே நடந்து வந்தாள்.

மக்கள் ஆர்வமாகக் கூடி நின்று பார்க்க ஏதோ நடந்து கொண்டிருந்தது. ஓர் இளைஞன் தரையில் கால்களை மடித்து அமர்ந்திருந்தான். அவனுக்குப் பின்னே மரப்பட்டைகளைப் போல் ஏதோ குவியல் இருந்தது. ஐந்து, ஆறு பேர் அவனைச் சுற்றி நின்று கீழே பார்த்துக் கொண்டிருந்தனர். டோட்டோ-சான் அவர்களோடு நின்று கவனிக்க விரும்பினாள். "இப்பொழுது என்னைக் கவனமாகப் பாருங்கள், கவனமாகப் பாருங்கள்" என கீழே அமர்ந்திருந்தவன் கூறிக் கொண்டிருந்தான். அவன் டோட்டோ-சானைக் கவனித்ததும் நிறுத்திச் சொல்ல ஆரம்பித்தான். "உனக்கு முக்கியமான விஷயம், ஆரோக்கியம்தான். காலையில் எழுந்ததும் நீ ஆரோக்கியமாக இருக்கிறாயா இல்லையா என்பதை இத்துண்டு மரப்பட்டை கூறிவிடும். நீ செய்ய வேண்டியதெல்லாம் காலையில் எழுந்ததும் இம்மரப்பட்டையைச் சிறிது கடித்து மெல்ல வேண்டும். அது கசப்பாக இருந்தால் நீ ஆரோக்கியமாக இல்லை எனப் பொருள். அது கசக்கவில்லையெனில் நீ ஆரோக்கியமாக இருக்கிறாய் எனப் பொருள். இந்த மரப்பட்டை நீங்களெல்லாம் ஆரோக்கியமாக இருக்கிறீர்களா இல்லையா என்பதைச் சொல்லும். இதன் விலை இருபது சென்தான். அந்த நல்லவர் ஒரு துண்டு வாங்கிப் பார்க்கலாமே?"

அவன் ஒரு துண்டு மரப்பட்டையை அருகில் நின்ற ஒல்லியான மனிதரிடம் கொடுத்தான். அவன் சிறிது கடித்துவிட்டு தலையை ஆட்டினான். "ஆ... கசப்பு, சிறிது கசக்கிறதே?" என்றான். தரையில் இருந்த இளைஞன் ஆச்சரியத்துடன் துள்ளினான். "ஐயோ! உங்களுக்கு ஏதோ நோய் இருக்கிறது. நீங்கள் கவனமாக இருக்க வேண்டும். ஆனால் கவலைப்படாதீர்கள். நோய் இன்னும் அவ்வளவு மோசமாகவில்லை. நீங்கள் சிறிது கசக்கிறது என்றுதான் கூறியுள்ளீர்கள்." "அங்கே நிற்கும்

பெண்ணே! நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள். இதில் சிறிது சுவைத்துப் பாருங்களேன்?" என்றான். அங்கே கடைக்குச் செல்வதற்காக கூடையுடன் நின்று கொண்டிருந்த பெண்மணி, ஒரு துண்டு மரப்பட்டையை வாங்கிக் கடித்து வேகமாக மென்றாள். "ஆ...ஆ... இது கசக்கவே இல்லையே?" என்றாள்.

அவன் "பாராட்டுக்கள் அம்மணி! நீங்கள் மிக ஆரோக்கியமாக இருக்கிறீர்கள்" என்றான். பின்னர் அவன் தன் குரலை உயர்த்தி, "இருபது சென், இருபதே சென்; தினமும் காலையில் நீங்கள் ஆரோக்கியமாக இருக்கிறீர்கள் என அறிய இருபதே சென். மிகக் குறைந்த விலை. மிக அரிய வாய்ப்பு" என தன் வியாபாரத்தைத் தொடங்கினான்.

டோட்டோ-சானும் பழுப்பு நிறத்தில் இருந்த ஒரு மரப்பட்டையைக் கடித்துப் பார்க்க விரும்பினாள். ஆனால் கேட்பதற்கு மிகவும் வெட்கப்பட்டாள். எனவே, "பள்ளி முடிந்து வரும்வரை நீங்கள் இங்கேயே இருப்பீர்களா?" எனக் கேட்டாள்.

அந்த இளம் பள்ளிச் சிறுமியைப் பார்த்து, "நிச்சயமாக" என்றான்.

டோட்டோ-சான் அவள் பள்ளிப் பை முதுகில் துள்ள ஓடினாள். அவள் பள்ளிக்குத் தாமதமாகப் போக விரும்பவில்லை. ஏனெனில் பள்ளி தொடங்கும் முன்னரே அவள் செய்ய வேண்டியது ஏதோ இருந்தது.

அவள் வகுப்பறையில் நுழைந்ததும் சக மாணவ, மாணவியரிடம் கேட்டாள். "யாரேனும் எனக்கு இருபது சென் கடன் தர முடியுமா?"

ஆனால் யாரிடமுமே இருபது சென் இருக்கவில்லை. நீண்ட கரும் வெல்லக்கட்டி பாக்கெட் விலை பத்து சென்தான். எனவே, இருபது சென் என்பது பெரிய தொகை அல்ல. ஆனால், உண்மையில் யாரிடமும் அத்தொகை இருக்கவில்லை.

"நான் என் பெற்றோர்களைக் கேட்கட்டுமா?" மியோ-சான் கேட்டாள். இப்படிப்பட்ட நேரத்தில் மியோ-சான் தலைமை ஆசிரியரின் மகளாய் இருந்தது மிகவும் வசதியாக இருந்தது. மியோ-சானின் வீடு கூட்ட அறைக்கு அருகிலேயே இருந்தது என்பதால் அவளது அம்மா பள்ளியிலேயே இருப்பதுபோல் இருந்தது.

"அப்பா உனக்குக் கடன் தருவதாகச் சொன்னார்கள். ஆனால் இத்தொகை எதற்கு எனத் தெரிந்து கொள்ள விரும்புகிறார்கள்" என மியோ-சான் உணவு இடைவேளையின் போது தெரிவித்தாள்.

எனவே, டோட்டோ-சான் அலுவலகத்திற்குச் சென்றாள்.

"உனக்கு இருபது சென் கடன் வேண்டும். இல்லையா?" என்ற தலைமையாசிரியர், "நீ எதற்காக கடன் கேட்கிறாய்?" எனக் கேட்டார்.

"நீங்கள் நலமாக இருக்கிறீர்களா அல்லது நோயுடன் இருக்கிறீர்களா என சொல்லக்கூடிய ஒரு மரப்பட்டையை நான் வாங்கப் போகிறேன்", என்றாள்.

தலைமையாசிரியரின் ஆர்வம் அதிகரித்தது.

"நீ அதை எங்கே வாங்கப் போகிறாய்?", எனக் கேட்டார்.

"இரயில் நிலையத்திற்கு எதிரே", அவள் அவசரமாகப் பதிலளித்தாள்.

"சரி, நீ விரும்பியவாறே ஒன்று வாங்கிக் கொள். ஆனால் எனக்கு

ஒரு கடி தருவாயா?" எனக் கேட்டுக் கொண்டே சட்டைப் பையிலிருந்து பணத்தை எடுத்து, அவளது கையில் இருபது சென் நாணயத்தை வைத்தார்.

"ஓ... மிக்க நன்றி," டோட்டோ-சான் நன்றி கூறி அவர் கேட்டதை ஒத்துக் கொண்டாள். "நான் என் அம்மாவிடமிருந்து பணம் பெற்றுத் தங்களுக்குத் திருப்பித் தருகிறேன். எப்பொழுதும் அம்மா எனக்குப் புத்தகம் வாங்கக் காசு தருவார்கள். நான் ஏதேனும் வாங்க வேண்டுமெனில், நான் முதலில் கேட்க வேண்டும். ஆனால் ஆரோக்கிய மரப்பட்டை என்பது வித்தியாசமானது. ஒவ்வொருவருக்கும் தேவையானது. எனவே, அம்மா நான் முன்கூட்டியே கேட்காததைப் பற்றிப் பொருட்படுத்த மாட்டார்கள்", என்றாள்.

பள்ளி முடிந்ததும், டோட்டோ-சான் தாமதப்படுத்தாமல் நேராக இரயில் நிலையம் சென்றாள். கையில் இருபது சென் நாணயத்தை இறுக்கிப் பிடித்துக் கொண்டாள். அந்த மனிதன் தனது சரக்கைச் சத்தம் போட்டு விற்றுக் கொண்டிருந்தான்.

டோட்டோ-சான் கையில் இருபது சென் நாணயத்தைக் கண்டதும் அவன் கண்கள் பளிச்சிட்டன.

"நல்ல பெண். உன் அம்மாவும், அப்பாவும் உன்னைப் பாராட்டுவார்கள்" என்றான்.

"அப்படியானால் ராக்கி", என அவள் கேட்டாள்.

"ராக்கி என்றால் யார்?" எனக் கேட்டுக் கொண்டே ஒரு மரப்பட்டையைப் பொறுக்கி எடுத்தான்.

"அது எங்கள் நாய்; ஜெர்மன் நாய்," அவள் பெருமையுடன் கூறினாள்.

அவன் ஒரு நிமிடம் யோசித்துவிட்டு "நாய்!... நல்லது... இது நாயிக்கும் வேலை செய்யும். இது கசந்தால் நாய் விரும்பாது. அதிலிருந்து நாய் நோயாய் இருக்கிறதா என்று தெரிந்து கொள்ளலாம்", என்றான்.

ஒரு அங்குல அகலமும், ஆறு அங்குல நீளமும் உள்ள ஒரு மரப்பட்டையை அவன் டோட்டோ-சானிடம் கொடுத்தான்.

"இங்கே பார்; இதை தினமும் காலையில் கடித்துப் பார் . இது கசந்தால் நீ நோயுடன் இருக்கிறாய் எனப்பொருள். கசக்கவில்லையெனில் நீ நன்கு செயலாக்கத்துடன் இருக்கிறாய் எனப் பொருள்", என்றான்.

டோட்டோ-சான் செய்தித்தாளில் சுற்றப்பட்ட அந்த அரிய மரப்பட்டையை மிகவும் கவனத்துடன் வீட்டிற்கு எடுத்துச் சென்றாள். அங்கு சென்றதும் அவள் செய்த முதல் வேலை அந்த மரப்பட்டையை எடுத்துக் கடித்துப் பார்த்ததுதான். அது உலர்ந்தும், கடினமாகவும் இருந்தது.

"ஹுர்ரே- நான் ஆரோக்கியமாக இருக்கிறேன்" என்றாள். "அப்படியா? இப்பொழுது என்ன நடந்தது", அம்மா சிரித்துக் கொண்டே கேட்டாள்.

டோட்டோ-சான் விளக்கினாள். அம்மாவும்கூட அந்த மரப் பட்டையைக் கடித்துப் பார்த்தாள். "கசக்கவில்லையே"? என்றாள்.

பின்னர் அவள் ராக்கியிடம் சென்று அந்த மரப்பட்டையை ராக்கியின் வாயருகே காட்டினாள். அது முதலில் மோந்து பார்த்தது.

பின்னர் அதை நக்கியது.

"நீ இதைக் கடித்துப் பார்க்க வேண்டும்", என்ற டோட்டோ-சான் "பின்னர்தான் தெரியும் உனக்கு நோய் இருக்கிறதா அல்லது இல்லையா என்பது" என்றாள்.

ஆனால் ராக்கி அதைக் கடிப்பதற்கான முயற்சியை எடுக்கவே இல்லை. அது தன் கால் நகத்தால் காதின் பின்புறத்தைச் சொரிந்து கொண்டது. டோட்டோ-சான் அந்த மரப்பட்டையை அதன் வாயருகே பிடித்துக் கொண்டாள். "வா, இதைக்கடி உனக்கு உடல் நலமில்லையெனில் மிகத் தீயது நடக்கப் போகிறது" என்றாள். ராக்கி விருப்பமின்றி அந்த மரப்பட்டையின் ஓர் ஓரத்தைச் சிறிது கடித்தது. பின்னர் முகர்ந்து முகர்ந்து பார்த்தது. பின்னர் கொட்டாவி விட்டது. ஆனால் அது குறிப்பாக விருப்பமில்லாதது போல் காட்டிக் கொண்டது. முடிவில் ராக்கி மிகப் பெரிய கொட்டாவி விட்டது.

"ஹுர்ரே ! ராக்கியும் ஆரோக்கியமாக உள்ளது"

அடுத்த நாள் காலையில் அன்னை இருபது சென் டோட்டோ-சானுக்குக் கொடுத்தாள். டோட்டோ-சான் நேராக, தலைமையாசிரியர் அலுவலகத்திற்குச் சென்றாள். மரப்பட்டையை வெளியே எடுத்து அவரிடம் காண்பித்தாள்.



தலைமையாசிரியர் ஒரு நிமிடம் அதைப் பார்த்துக் கொண்டிருந்தார். பின்னர் "என்ன இது?" என்றார். அடுத்த நொடியில் அவள் கையில் வைத்திருக்கும் இருபது சென் நாணயத்தைப் பார்த்ததும் புரிந்து கொண்டார். டோட்டோ-சான் இருபது சென் நாணயத்தைக் கவனமாகக் கையில் மூடி வைத்துக் கொண்டு நேற்று நடந்தவைகளை நினைவு படுத்தினாள்.

"இதைச் சிறிது கடியுங்கள். இது கசந்தால் நீங்கள் நோயுடன் இருக்கிறீர்கள் என அர்த்தம்", என டோட்டோ-சான் அவரிடம் கூறினாள்.

தலைமையாசிரியர் அந்த மரப்பட்டையைச் சிறிது கடித்துவிட்டு, அதை நன்கு ஆராய ஆரம்பித்தார்.

"உங்களுக்குக் கசக்கிறதா?" டோட்டோ-சான் மிக அக்கறையுடன் கேட்டாள்.

"இதில் எந்தச் சுவையும் இல்லை", என்ற தலைமையாசிரியர் "நான் நன்றாக இருக்கிறேன், நன்றி", என்றார்.

"ஹுரே...! தலைமையாசிரியர் ஆரோக்கியமாக இருக்கிறார். மிக்க மகிழ்ச்சி", என டோட்டோ-சான் மகிழ்ச்சி ஆரவாரமிட்டாள்.

அன்று அவள் பள்ளியில் இருந்த ஒவ்வொருவரையும் அந்த மரப் பட்டையைக் கடிக்க வைத்தாள். யாருக்குமே அந்த மரப்பட்டை கசக்க வில்லை. எனவே, எல்லோரும் ஆரோக்கியமாக இருப்பதாக நினைத்து டோட்டோ-சான் அன்று முழுவதும் மகிழ்ச்சியாக இருந்தாள்.

ஒவ்வொரு குழந்தையும் தலைமையாசிரியரிடம் சென்று அவர்கள் ஆரோக்கியமாக இருப்பதாகத் தெரிவித்தனர். அவர் ஒவ்வொருவரிடமும், "மிக நல்லது", எனக் கூறிப் பாராட்டினார்.

தலைமையாசிரியருக்கு அனைத்தும் தெரியும். அவர் அந்தப் பகுதியிலேயே பிறந்து வளர்ந்தவர். ஆற்றுக்கு அருகில் இருந்த கும்மா பிரிபெக்சர் என்ற அந்தப் பகுதியிலிருந்து 'ஹருணா' குன்றை நன்றாகப் பார்க்க முடியும். அந்த மரப்பட்டை கசக்காது என்பதும் அவருக்குத் தெரியும். யார் சுவைத்தாலும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கும் என்பதும் அவருக்குத் தெரியும்.

ஆனால் ஒவ்வொருவரும் ஆரோக்கியமாக இருக்கிறார்கள் என அறிந்து டோட்டோ-சான் மகிழ்ச்சியாக இருக்கட்டும் என அவர் நினைத்தார். டோட்டோ-சான் மற்றவர்களைப் பற்றிக் கவலைப்படும் வகையில், மரப்பட்டையைக் கடிக்க வைத்து அவர்கள் கசக்கிறது எனக் கூறுகிறார்களா என அறிந்து அக்கறை எடுத்துக் கொள்ளும் வகையில் வளர்க்கப்பட்டிருந்தது அவருக்கு மிக்க மகிழ்ச்சியளித்தது.

டோட்டோ-சான் பள்ளியருகே சுற்றித் திரிந்த நாய்களின் வாயில்கூட அந்த மரப்பட்டையைத் திணித்தாள். கிட்டத்தட்ட அவை அவளைக் கடிக்க வந்தன. அப்படியும்கூட அவள் ஊக்கமிழக்கவில்லை.

"உனக்கு நோய் இருக்கிறதா? இல்லையா? என்பதை நீ அறிந்து கொள்ள வேண்டும்", என அவள் நாய்களைப் பார்த்து கத்தினாள். "வா! வந்து கடித்துப்பார். நீ ஆரோக்கியமாக இருக்கிறாயா எனத் தெரியும். இது மிக நல்லது", எனக்கூறி நாய்களை அழைத்தாள்.

அவளுக்குத் தெரிந்திராத அந்த நாய்கூட அதைக் கடித்துப் பார்க்க

வைத்தாள். "ஹுரே... நீ கூட, ஆரோக்கியமாக இருக்கிறாய்!" அதைச் சுற்றிக் குதித்து மகிழ்ச்சிக் கூச்சலிட்டாள்.

அவளுக்கு வணக்கம் சொல்வதுபோல் அந்த நாய் தலையைக் குனிந்து விட்டு பின் வேகமாய் ஓடியது.

தலைமையாசிரியர் நினைத்ததுபோல் அந்த மரப்பட்டையை விற்றவன் அதற்குப் பின்னால் ஜியுகோகா பகுதியில் மீண்டும் காணப் படவே இல்லை.

டோட்டோ-சான் ஒவ்வொரு நாளும் பள்ளிக்குப் புறப்படுவதற்கு முன் அந்த அரிய பட்டையை எடுத்துச் சிறிது கடித்துப் பார்ப்பாள். பின்னர் தனக்குள்ளே "நான் ஆரோக்கியமாக இருக்கிறேன்", எனக் கூறிக்கொள்வாள். அது அவளின் ஆரோக்கிய பானமாகவே மாறிவிட்டது.

ஆனால் உண்மையிலேயே டோட்டோ-சான் ஆரோக்கியமாகத்தான் இருந்தாள்.

## ஆங்கிலம் பேசும் மாணவன்

டோமோயிக்குப் புதிய மாணவன் ஒருவன் வந்தான். அவன் உயரமாகவும், அகன்ற மார்புடனும் இருந்தான். டோட்டோ-சான் அவன் ஏழாம் வகுப்புப் படிப்பவன் என நினைத்தாள். அவன் உடைகள் கூட, வளர்ந்த வர்கள் அணிவதைப்போல, மிக வித்தியாசமாக இருந்தது.

அன்று காலை பள்ளி மைதானத்தில் தலைமையாசிரியர் அந்தப் புதிய மாணவனை அறிமுகப்படுத்தினார்.

"இது மியாசாகி. இவன் பிறந்ததும், வளர்ந்ததும் அமெரிக்காவில். எனவே, அவனுக்கு ஜப்பானிய மொழி சரியாகப் பேசத் தெரியாது. அதனால்தான் அவன் டோமோயிக்கு வந்திருக்கிறான். இங்கு அவனுக்கு நண்பர்கள் எளிதில் கிடைப்பார்கள் என்பதாலும், படிப்பதற்கு அதிக நேரம் செலவிடலாம் என்பதாலும் இங்கு வந்துள்ளான். இப்பொழுது இவன் நம்மில் ஒருவன். இவனை நாம் எந்த வகுப்பில் சேர்க்கலாம்?... டா-சானும் மற்றவர்களும் உள்ள ஐந்தாம் வகுப்பில் சேர்த்தால் எப்படி இருக்கும்?" என்றார் தலைமையாசிரியர்.-

"அதுதான் நல்லது", ஓவியம் வரைவதில் சிறந்த டா-சான் மூத்த வருக்குரிய தொனியுடன் கூறினான்.

தலைமையாசிரியர் புன்னகைத்து தொடர்ந்து கூறினார். "நான் இவனுக்கு ஜப்பானிய மொழி அதிகம் தெரியாது என்று கூறினேன். ஆனால் இவன் ஆங்கிலம் நன்றாகப் பேசுவான். உங்களோடு இவன் சேர்ந்து கொள்ளட்டும். இவன் ஜப்பானில் வாழ்ந்து பழக்கப்படவில்லை. எனவே, நீங்கள் இவனுக்கு உதவ வேண்டும். அதைச் செய்வீர்களா? மேலும் அவனது அமெரிக்க வாழ்க்கையைப் பற்றி நீங்கள் தெரிந்து கொள்ளலாம். அவன் அதைப் பற்றி உங்களுக்குச் சொல்வான். நல்லது. இப்பொழுது நான் இவனை உங்களிடம் விட்டுச் செல்கிறேன்."

மியாசாகி அவன் வகுப்பு மாணவர்களுக்குக் குனிந்து வணக்கம் செலுத்தினான். அவர்கள் அவனை விடச் சிறியவர்களாக இருந்தார்கள்.

டா-சானின் வகுப்பில் இருந்த மாணவர்கள் மட்டுமல்ல, அனைத்து மாணவர்களுமே குனிந்து அவனுக்குப் பதில் வணக்கம் செலுத்தினர்.

உணவு இடைவேளையின்போது மியாசாகி தலைமையாசிரியரின் வீட்டிற்குச் சென்றான். எல்லோரும் அவனைப் பின்தொடர்ந்தனர். அவன் தனது செருப்புகளைக் கழற்றாது அப்படியே வீட்டினுள் நடக்க ஆரம்பித்தான். எல்லாக் குழந்தைகளும் அவனைப் பார்த்து சத்தம் போட ஆரம்பித்தன. "வீட்டினுள் செல்லும்போது செருப்புகளைக் கழற்றிவிட வேண்டும்".

மியாசாகி திகைத்தான். "ஓ... அப்படியா? மன்னிக்க வேண்டும்" எனக் கூறிக்கொண்டே காலணிகளை அகற்றினான்.

அவன் என்ன செய்ய வேண்டும் என்பதை எல்லாக் குழந்தைகளும் ஒரே குரலில் கூறின.

"தரைவிரிப்பு உள்ள அறைகளுள் செல்லும்போதும், கூட்ட அறையினுள் செல்லும்போதும் உன் காலணிகளை அகற்ற வேண்டும். வகுப்பறையினுள்ளும், நூலகத்தினுள்ளும் காலணிகளுடன் செல்லலாம்", என்றனர்.

ஜப்பானிலும், மேலைநாடுகளிலும் உள்ள வாழ்க்கைப் பழக்க வேறுபாடுகளைத் தெரிந்து கொள்வது இருவருக்குமே மகிழ்ச்சியளிக்கக் கூடியதாய் இருந்தது.

அடுத்த நாள் மியாசாகி, பள்ளிக்கு படங்கள் நிறைந்த ஒரு பெரிய ஆங்கிலப் புத்தகத்தைக் கொண்டு வந்தான். அவர்கள் அனைவரும் உணவு இடைவேளையின்போது அப்புத்தகத்தைப் பார்ப்பதற்காக அவனைச் சுற்றிக் குழுமினர். அவர்கள் யாரும் அவ்வளவு அழகான படங்கள் உள்ள புத்தகத்தை இதற்குமுன் பார்த்திருக்கவில்லை. அனைவரும் ஆச்சரியப்பட்டனர். அவர்கள் பார்த்திருந்த படப்புத்தகங்கள் எல்லாம், சிவப்பு, பச்சை, மஞ்சளில் பெரிதாக அச்சிடப்பட்டிருக்கும். ஆனால் இந்தப் புத்தகத்தில் செம்பழுப்பு வண்ணமெல்லாம் இருந்தது. நீலக்கலரைப் பொருத்தவரை வெள்ளையும் பழுப்பும் உள்ள வண்ணங்களுடன் சேர்க்கப் பெற்று அழகாக அச்சிடப்பட்டிருந்தது. அவர்களுக்குத் தெரிந்த வண்ணப் பென்சில் பெட்டியில் உள்ள இருபத்திநான்கு வண்ணங்களைவிட கூடுதலான வண்ணங்களில் படங்கள் இருந்தன. ஏன், டா-சானின் சிறப்பு வண்ணப் பெட்டியில் உள்ள 48 வண்ணங்களில்கூட இந்தப் புத்தகத்தில் உள்ள சில வண்ணங்கள் இல்லை. படங்களைப் பொருத்தவரை முதலில் இருந்தது ஒரு நாய், ஒரு குழந்தை அணிந்திருந்த அழகிய வண்ண ஆடையின் நுனியைக் கடித்து இழுப்பதுபோல் இருந்தது. அனைவருக்கும் அது பிடித்திருந்தது. அவர்கள் அனைவரின் மனத்தைக் கவர்ந்தது என்னவென்றால் அக்குழந்தையின் படம், அதன் நிறம். மஞ்சள் கலந்த இளஞ் சிவப்பு நிறத்தில் உண்மையான குழந்தையின் வண்ணத்தைப்போல அழகாக அச்சிடப்பட்டிருந்தது. அவ்வளவு பெரிய, அவ்வளவு அழகாக அச்சிடப்பெற்ற, அழகான பளபளப்பான பருமனான தாளுடன் கூடிய வண்ணப் படப்புத்தகத்தை அவர்கள் இதற்கு முன் கண்டிருக்கவே இல்லை. அந்தப் படப்புத்தகத்தைப் பார்க்க டோட்டோ-சான் அவளுக்கே உரிய முறையில் அவனுடன் மிகவும் நெருங்கிவிட்டாள்.

மியாசாகி அதில் உள்ள ஆங்கில வாசகங்களை அவர்களுக்குப்

படித்துக் காட்டினான். ஆங்கிலச் சொற்களின் உச்சரிப்பு அவர்களின் கவனத்தைக் கவரும் வகையில் மெல்லியதாக இருந்தது. பின்னர் மியாசாகி தனக்குத் தெரிந்த ஜப்பான் மொழியில் ஆங்கிலத்தை விளக்க ஆரம்பித்தான்.

மியாசாகி முற்றிலும் புதிதான வித்தியாசமான ஒன்றைப் பள்ளிக்குக் கொண்டு வந்திருந்தான்.

"அகாசான் ஒரு குழந்தை", அவன் ஆரம்பித்தான்.

எல்லோரும் அதைத் திருப்பிச் சொன்னார்கள் "அகாசான் ஒரு குழந்தை".

"உட்சுகுஷி அழகானது", மியாசாகி அடுத்துக் கூறினான். அவனது உச்சரிப்பில் 'கு'விற்கு அழுத்தம் இருந்தது.

"உட்சுகுஷி அழகானது", மற்றவர்கள் 'ஷி'க்கு அழுத்தம் கொடுத்து திரும்பக் கூறினர். மியாசாகி தனது ஜப்பானிய உச்சரிப்பைப் புரிந்து கொண்டான். மியாசாகியும் மற்றவர்களும் நல்ல நண்பர்களானார்கள். ஒவ்வொருநாளும் அவன் விதவிதமான ஆங்கில நூல்களைக் கொண்டு வந்து உணவு இடைவேளையின்போது வாசித்துக் காட்டினான்.

மியாசாகி அவர்களின் ஆங்கில ஆசிரியனாக மாறிவிட்டான். அதே நேரத்தில் அவனது ஜப்பானிய மொழி உச்சரிப்பும் திருந்தியிருந்தது. ஜன்னல் விளிம்புகளிலும், குட்டிச் சுவர்கள் மீதும் அமர்ந்து கொண்டு வீண் பேச்சுப் பேசுவது நின்றுவிட்டது.

டோட்டோ-சானும் அவளது நண்பர்களும் அமெரிக்காவைப் பற்றி நிறையத் தெரிந்து கொண்டனர். ஜப்பானும், அமெரிக்காவும் டோமோயில் நண்பர்களாகி இருந்தன. ஆனால் டோமோயிக்கு வெளியே அமெரிக்காவும் ஜப்பானும் எதிரிகளாயிருந்தன. ஆங்கிலம் எதிரிகளின் மொழி என அறிவிக்கப்பட்டு, அனைத்துப் பள்ளிகளின் பாடத் திட்டங்களிலிருந்தும் நீக்கப்பட்டிருந்தது.

"அமெரிக்கர்கள் பிசாசுகள்", அரசு அறிவித்தது. ஆனால் டோமோயில் குழந்தைகள் "உட்சுகுஷி அழகானது" என பாடிக் கொண்டிருந்தனர். டோமோயியைக் கடந்து செல்லும் தென்றல்கூட இனிமையாகவும், மென்மையாகவும் வெதுவெதுப்பாகவும் இருந்தது. குழந்தைகள் அவர்களுக்குள்ளே அழகானவர்களாக இருந்தனர்.

## பொழுதுபோக்கு நாடகம்

"நாம் ஒரு நாடகம் போடப் போகிறோம்".

டோமோயின் வரலாற்றில் அதுதான் முதல் நாடகம். உணவு வேளையின்போது நடுவில் ஒருவர் நின்று பேசும் வழக்கம் இன்னும் தொடர்ந்தது. கூட்ட அறையில் தலைமையாசிரியர் அமர்ந்து உடலிசைவுப் பயிற்சிக்காகப் பியானோ வாசிக்கும் சிறுமேடையில் ஒரு நாடகம் நடிப்பதைப் பற்றி அவர்கள் இதுவரை யோசித்ததில்லை. அங்கிருந்த குழந்தைகளில் யாரும், டோட்டோ-சான் கூட, இதுவரை நாடகத்தைப் பார்த்ததில்லை. அன்னப்பறவை ஏரி நடனம் பார்க்கச் சென்றதைத் தவிர

டோட்டோ-சான் கலை அரங்குகளுக்குச் சென்றதில்லை. அந்த ஆண்டு நிறைவு நாளில் எப்படிப்பட்ட நிகழ்ச்சியை வழங்கலாம் என அவர்கள் விவாதித்துக் கொண்டிருந்தனர்.

டோட்டோ-சான் வகுப்பு 'காஞ்சின்சோ' (நிதி திரட்டும் திட்டம்) நடத்துவதென முடிவு செய்திருந்தது. திரு. மருயாமா கற்றுத் தரும் புத்த கத்திலுள்ள புகழ்வாய்ந்த பழைய காபுகி நாடகத்தை டோமோயில் நாம் பார்க்க விரும்புவது போல் மாற்றியமைத்திருந்தார்கள். மாவீரன் பென்கையாக எய்கோசைஷோ நடிப்பதென்றும், உரத்த குரல் வளமுள்ள அமதேரா, தளபதி தோகாஷியாக நடிப்பதென்றும் முடிவு செய்திருந்தனர். அவர்கள் அனைவரும் விவாதித்தபின், அதிர்ஷ்டமில்லாத தியாகியாக வரும் வீரன் யோசிட்சுனேவாக டோட்டோ-சான் நடிப்பதெனவும் முடிவு செய்தனர். மற்ற அனைவரும் துறவிகளாகச் சுற்றி வரவேண்டும்.

ஒத்திகை ஆரம்பமாகும் முன் குழந்தைகள் அவரவர்களின் வசனங்களைப் படித்துக் கொண்டிருந்தனர். டோட்டோ-சானும், துறவி களும் வசனம் எதுவும் பேசத் தேவையில்லை என்பது வசதியாக இருந்தது. துறவிகளாக வருவோரெல்லாம் செய்ய வேண்டியதென்ன வென்றால் கடைசி வரை அமைதியாக நின்று கொண்டிருக்க வேண்டு மென்பதுதான். யோசிட்சுனேவாக வரக்கூடிய டோட்டோ-சான் தன் தலையை வைக்கோற் தொப்பியால் மறைத்துக் கொண்டு மண்டியிட்டு நிற்கவேண்டும். பென்கை உண்மையில் யோசிட்சுனேயின் வேலைக் காரனாக வர வேண்டும். அப்படி வந்து தன் எஜமானனை அடித்துத் திட்டி நடிக்க வேண்டும். கோயிலைப் புதுப்பிக்க நிதி திரட்டும் துறவிகளாக மற்றவர்கள் இருக்க வேண்டும்.

பென்கையாக நடிக்கக் கூடிய எய்கோசைஷோவிற்குத்தான் மிக முக்கியமான பங்கு உண்டு. சோதனைச் சாவடியின் தளபதி தோகாஷியின் வரிவிதிக்கும் உத்தரவை பென்கைதான் வாசிக்க வேண்டும். அடுக்கு மொழியில் அர்த்தம் நிறைந்த வார்த்தைகளை அவன் கவனமாக வாசிக்க வேண்டியதிருந்தது. "முதலில், தோடைஜி எனப்படும் கோவிலைப் புதுப்பிக்கும் புனிதப் பணிக்காக..." என்பதுபோல வசனங்கள் இருந்தன.

எய்கோசைஷோ ஒவ்வொரு நாளும் அவளது "முதலில்..." என்ற வசனத்தையே மீண்டும் மீண்டும் சொல்லிப் பழக்கப்படுத்திக் கொண்டிருந்தாள்.

தோகாஷியின் பாத்திரத்திற்கும் ஏராளமான வசனங்கள் இருந்தன. பென்கையின் விவாதங்களுக்குப் பதில் அளிக்க வேண்டியிருந்தது. அமதேரா அதை மனப்பாடம் செய்யப் போராடிக் கொண்டிருந்தான்.

இறுதியாக ஒத்திகை நாளும் வந்தது. தோகாஷியும் பென்கையும் எதிரெதிராக நின்றார்கள். துறவு வேடத்திலிருந்தவர்கள் பென்கைக்குப் பின்புறம் வரிசையாக நின்றார்கள். டோட்டோ-சான் யோசிட்சுனேவாக மண்டியிட்டு நின்றாள். ஒரே குழப்பமான குவியலாக அந்தக் காட்சி இருந்தது. ஆனால் டோட்டோ-சானுக்கு எல்லாவற்றைப் பற்றியும் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆகையால் பென்கை யோசிட்சுனேவைக் கீழே

தள்ளி அடிக்க முயன்றபோது டோட்டோ-சான் மிகக் கடுமையாக திருப்பித் தாக்க ஆரம்பித்துவிட்டாள். அவள் எய்கோசைஷோவின் காலில் உதைத்துக் கீழே தள்ளி அவளைப் பிறாண்டினாள். எய்கோ . அழ ஆரம்பித்துவிட்டாள். துறவிகள் திகைத்து நின்றனர்.

பென்கை எவ்வளவு அடித்து உதைத்தாலும் யோசிட்சுனே. அச்சத்துடன் கூனிக் குறுகி நிற்கவேண்டும். அதனுடைய பொருள் என்ன வென்றால் தோகாஷி உண்மையைச் சந்தேகிக்கும் பொழுது பென்கை தனது எஜமானனிடம் சோதனைச் சாவடியைக் கடந்து செல்லும்போது கொடூரமாக நடந்து கொள்ள வேண்டும்.

யோசிட்சுனே திருப்பித் தாக்கியதும் நாடகத்தின் கருப்பொருளே சிதைந்துவிட்டது. திரு. மருயாமா இதை டோட்டோ-சானுக்கு விளக்க முயன்றார். ஆனால் டோட்டோ-சான் அதை ஏற்றுக் கொள்ளவில்லை. அவள் சொன்னதெல்லாம் "எய்கோசைஷோ என்னைத் தாக்கினால் நான் அவளைத் திருப்பித் தாக்குவேன்" என்பதுதான். ஆகையால் ஒத்திகை பார்ப்பதில் எந்த முன்னேற்றமும் நடக்கவில்லை. அந்தக் காட்சியை எத்தனை முறை மீண்டும் மீண்டும் நடித்தாலும் டோட்டோ-சான் சண்டையிட்டுக் கொண்டே தான் இருந்தாள்.

"நான் மிகவும் வருந்துகிறேன்" எனச் சொன்ன திரு. மருயாமா இறுதியில், "நான் டாய்-சானை யோசிட்சுனேவாக நடிக்க வைக்கப் போகிறேன்" என்றார்.

டோட்டோ-சான் விடுவிக்கப்பட்டாள். அவள் உதை வாங்குபவளாக இருக்க விரும்பவில்லை.

"டோட்டோ-சான், உன்னால் துறவியாக நடிக்க முடியுமா?" திரு. மருயாமா கேட்டார். ஆகையால் டோட்டோ-சான் துறவியாக மற்றவர் களுடன் பின்புறம் போய் நின்று கொண்டாள்.

திரு. மருயாமாவும் மற்ற குழந்தைகளும் தற்போது எல்லாம் சரியாக இருப்பதாக நினைத்தனர். ஆனால் அவர்கள் நினைத்தது தவறு. டோட்டோ-சான் துறவிகளுக்கான நீண்ட உடையை அணிந்திருக்க வில்லை. டோட்டோ-சானுக்கும் நீண்டநேரம் ஒன்றும் செய்யாமல் நின்று கொண்டிருக்கப் பிடிக்கவில்லை. எனவே, தனது கால்பாதத்தால் தாளமிட ஆரம்பித்தாள். முன்னால் நின்ற துறவியின் காலில் கைத்தடியால் குத்தினாள். அருகிலிருந்த துறவியின் அக்குளில் சீண்டினாள். அவள் இதைச் செய்தது பக்கத்தில் இருந்த துறவிகளுக்கு மட்டும் இடைஞ்சலாக இல்லாது, பென்கை, தோகாஷி நடிப்பையும் பாதித்தது. எனவே, அவள் துறவியாக நடிப்பதிலிருந்தும் நீக்கப்பட்டாள்.

யோசிட்சுனேவாக டாய்-சான் பற்களைக் கடித்துக்கொண்டு அடி உதையை வாங்கிக் கொண்டான். நாடகம் பார்ப்பவர்கள் நிச்சயம் அவனுக்காக இரக்கப்படுவார்கள். இவ்வாறாக டோட்டோ-சான் இல்லாமல் நாடக ஒத்திகை சிறப்பாக முன்னேறிக் கொண்டிருந்தது.

அவள் தனியாக விடப்பட்டதால் பள்ளி மைதானத்திற்குச் சென்று தன் காலணிகளை அகற்றிவிட்டு நடனமாட ஆரம்பித்தாள். அவளுடைய விருப்பதற்கு ஆடியதால் அது அவளுக்கு மிகவும் மகிழ்ச்சியளித்தது. சில

நேரத்தில் அவள் அன்னப்பறவையாகவும், சில நேரத்தில் காற்றாகவும், சில நேரத்தில் கோமாளியாகவும், சில நேரத்தில் மரமாகவும் பாத்திரமேற்று நடனமாடினாள். இருந்தபோதிலும் அவளது ஆழ்மனதில் தான் யோகிட்சுனேவாகப் பாத்திரமேற்று நடித்திருக்க வேண்டும் என்ற உணர்வு இருந்தது. ஆனால் அவளை அனுமதித்திருந்தால் இப்பவும் அவள் எய்கோசைவேஷாவை நிச்சயம் தாக்கியிருப்பாள்.

இவ்வாறாக டோட்டோ-சானால் டோமோயில் நடைபெற்ற முதல் மற்றும் இறுதியான நாடகத்தில் பங்கேற்க இயலாமல் போய்விட்டது.

## சாக்-பீஸ்

டோமோயில் உள்ள குழந்தைகள் மற்றவர்களின் சுவர்களிலோ, சாலையிலோ எழுதுவது கிடையாது. ஏனெனில் அவர்களுக்குப் பள்ளியிலேயே தரையில் கிறுக்குவதற்கான வாய்ப்பு போதிய அளவில் உண்டு.

இசை வகுப்பின்போது கூட்ட அறையில் தலைமையாசிரியர், சாக்-பீஸ்களை எல்லாக் குழந்தைகளுக்கும் விநியோகிப்பார். அவர்கள் தரையில் எங்கு வேண்டுமானாலும், அவர்கள் விருப்பப்படி உட்கார்ந்து கொள்ளலாம், அல்லது படுத்துக் கொள்ளலாம். அவர்கள் அமர்ந்து கொண்டு அல்லது படுத்துக் கொண்டு கையில் சாக்-பீஸுடன் காத்திருப்பார்கள். எல்லோரும் தயாரானதும் தலைமையாசிரியர் பியானோ வாசிக்க ஆரம்பிப்பார். அவர் வாசிக்கும்போது அந்த இசைக் குறிப்புகளை மாணவர்கள் தரையில் எழுத வேண்டும். பளபளப்பான பழுப்பு நிற மரத்தால் ஆன தரையில் எழுதுவது மகிழ்ச்சியளிப்பதாய் இருக்கும். டோட்டோ-சானின் வகுப்பில் பத்து, குழந்தைகளே இருந்தனர். எனவே, அவர்கள் கூட்ட அறையில் இங்கொன்றும், அங்கொன்றுமாக அமர்ந்து கொள்வர். அவர்கள் விருப்பப்படி ஒருவர் இடத்தை ஒருவர் ஆக்கிரமிக்காமல் எவ்வளவு பெரிதாக வேண்டுமானாலும் எழுதக்கூடிய வகையில் தேவையான அளவு இடமிருந்தது. அவர்கள் எழுதும் இசைக் குறிப்புகளுக்கு கோடுகள் தேவையில்லை. ஏனெனில் அவர்கள் இசையின் ஒழுங்கமைப்பை மட்டும் எழுதுவர். டோமோயில் குழந்தைகளே அவர்களுக்கென வகுத்துக் கொண்ட இசைக் குறிப்புகளுக்கு சிறப்புப் பெயர்கள் இருந்தன. அவை:


இதற்குக் குதித்தல் எனப்பெயர். ஏனெனில் குதிப்பதற்கும் தாண்டுவதற்கும் இந்த இசை வசதியாக இருக்கும்.


இதற்குக் கொடி எனப் பெயர். ஏனெனில் இது கொடியைப்போல் உள்ளது.


இதற்குக் கொடி-கொடி எனப்பெயர்

இது இரட்டைக் கொடி

இது கறுப்பு

இது வெள்ளை

இது வெள்ளையும் புள்ளியும்

o இதற்கு வட்டம் எனப் பெயர்

இதுபோல் அவர்கள் இசைக் குறிப்பைக் கற்றிருந்தார்கள். அது விளையாட்டாகவும் இருந்தது. இந்த வகுப்பை அவர்கள் மிகவும் விரும்பினர்.

தரையில் சாக்பீஸால் எழுதுவது தலைமையாசிரியர் அளித்த யோசனையாகும். தாள் இவ்வளவு பெரிதாக இருக்காது; கரும்பலகைகளும் போதுமானதாக இருக்காது; எனவே கூட்ட அறையின் தரையே சிறந்தது என அவர் முடிவு செய்தார். அதுவே அவர்களின் மிகப் பெரிய கரும் பலகை. அதில் எவ்வளவு பெரியதாகவும், எவ்வளவு வேகமாகவும் வேண்டுமானாலும் எழுதலாம். எல்லாவற்றிற்கும் மேலாக அவர்கள் ஆகாய விமானங்களையும், பொம்மைகளையும் வரைந்தனர். அவர்கள் விரும்பும் எதையும் வரைந்து கொள்வர். சில வேளைகளில் அவர்கள் ஒருவர் படத்துடன் மற்றவர் படங்களை இணைத்து விடுவதுமுண்டு. அப்படிப்பட்ட நேரங்களில் கூட்ட அறையின் முழுத் தரையிலும் மிகப் பெரிய படம் இருக்கும். இசை வகுப்பின் இடைவேளையின்போது தலைமையாசிரியர் ஒவ்வொருவரும் வரைந்துள்ள படங்களைப் பார்வையிட வருவதுண்டு. அவர் படங்களைப் பார்வையிட்டு 'இது நன்றாக உள்ளது' அல்லது 'இது கொடி-கொடி அல்ல', அல்லது 'இது தாண்டுதல்' என ஒவ்வொன்றையும் மதிப்பீடு செய்வார்.

அவர் திருத்தங்கள் வழங்கி இசைக் குறிப்புகளை ஏற்றுக் கொண்டபின் மீண்டும் அதே இசையை வாசிப்பார். மாணவர்கள் தங்கள் இசைக் குறைப்பை அந்த இசையுடன் ஒப்பிட்டு மனதில் ஏற்றிக் கொள்வார்கள்.

தலைமையாசிரியருக்கு வேலை நெருக்கடி எவ்வளவு இருந்தாலும் இந்த இசை வகுப்பை அவருக்குப் பதிலாக எடுக்க வேறு யாரையும் அனுமதிப்பதில்லை. குழந்தைகளைப் பொருத்தவரையில் அவர்களுக்கு கோபயாஷியை விட்டால் வேறு மகிழ்ச்சி இல்லை.

இசை வகுப்பு முடிந்தபின் தரையைச் சுத்தம் செய்வது மிகப் பெரிய வேலை. முதலில் கரும்பலகை அழிப்பானால் அழித்துக் கொள்ள வேண்டும். பின்னர் தரையை மீண்டும் பளபளப்பாக்க விளக்குமாறால் பெருக்க வேண்டும். கந்தல் துணிகளாலும் நன்கு துடைக்க வேண்டும். உண்மையிலேயே அது அனைவரும் சேர்ந்து செய்ய வேண்டிய மிகப் பெரிய வேலை.

இதன் மூலம் டோமோயி குழந்தைகள் சுவர்ச் சித்திரங்களை அழிப்பது எவ்வளவு சிரமம் என்பதைக் கற்றுக் கொண்டார்கள். எனவே, அவர்கள் ஒருபோதும் கூட்ட அறையின் தரையைத் தவிர வேறு எங்கும் கிறுக்குவதில்லை. மேலும் இந்த வகுப்பு வாரத்திற்கு இருமுறை உண்டு. எனவே, அவர்கள் கிறுக்குவதற்குத் தேவையான அளவு வாய்ப்புகள் இருந்தன.

டோமோயின் குழந்தைகள் சாக்-பீஸைக் கையாள்வதில் திறமை பெற்றவர்களாக மாறினர். சாக்-பீஸ்களில் எது சிறந்தது, அதை எவ்வாறு பிடிப்பது, எவ்வாறு கையாள்வது, நல்ல முடிவுகள் வர எப்படிப் பயன்படுத்துவது, எவ்வாறு உடையாமல் வைத்துக் கொள்வது என்பதில் அனுபவம் பெற்றனர். ஒவ்வொருவரும் சாக்-பீஸைப் பயன்படுத்துவதில் திறமை பெற்ற சிறந்த வல்லுநர்களாக இருந்தனர்.

## யசுயாகி சானின் மறைவு

இலையுதிர்கால விடுமுறைக்குப்பின் பள்ளி திறந்த முதல் நாள் காலை நேரம் அது. திரு. கோபயாஷி பள்ளி மைதானத்தில் கூடியிருந்த குழந்தைகளின் முன் நின்றார். அவரது கை வழக்கம் போல் சட்டைப் பையினுள் இருந்தது. சிறிது நேரம் அவர் எதுவும் சொல்லவில்லை. பின்னர் அவர் கைகளைச் சட்டைப் பையில் இருந்து எடுத்துவிட்டு குழந்தைகளைப் பார்த்தார். அவர் அழுது கொண்டிருப்பதைப் போல இருந்தது.

"யசுயாகி-சான் இறந்துவிட்டான்" அவர் மெதுவாகச் சொன்னார். "இன்று நாமெல்லாம் அவனது இறுதி ஊர்வலத்திற்குச் செல்வோம்" எனச் சொல்லிவிட்டுத் தொடர்ந்தார். "நீங்கள் எல்லோரும் யசுயாகி-சானை அன்புடன் நடத்தினீர்கள். எனக்குத் தெரியும்; இது இழப்புத்தான். நான் மிகவும் வருந்துகிறேன்" என்றார். இதைச் சொல்லும்போது அவர் முகம் சிவந்துவிட்டது. கண்ணீர் விழிகளைத் திரையிட்டது. குழந்தைகள் அனைவரும் அப்படியே திகைத்து நின்றனர். ஒரு வார்த்தைகூட அவர்களால் பேச முடியவில்லை அவர்கள் அனைவரும் யசுயாகி-சானைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்தனர். டோமோயின் மைதானம் இவ்வளவு ஆழ்ந்த அமைதியை இதுவரை பார்த்ததில்லை.

'இவ்வளவு சீக்கிரத்தில் சாவதைக் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியவில்லையே', டோட்டோ-சான் நினைத்துக் கொண்டாள். 'விடுமுறைக்கு முன் அவன் அளித்த 'டாம் மாமாவின் சிறுகுடில்' என்ற புத்தகத்தை நான் இன்னும் படித்துக்கூட முடிக்கவில்லையே!'

யசுயாகி-சான் சென்று வருகிறேன் எனக்கூறிக் கையசைத்த போது அவன் விரல்கள் எப்படி வளைந்திருந்தன என்பதை நினைவுபடுத்திப் பார்த்தாள். அவன் 'டாம் மாமாவின் சிறுகுடில்' புத்தகம் தந்ததையும் நினைத்துப் பார்த்தாள். முதன்முதலில் அவர்கள் சந்தித்தபோது, "நீ ஏன் இப்படி நடக்கிறாய்?' என அவள் கேட்டதும் "எனக்கு இளம்பிள்ளை வாதம்" என பதிலளித்ததும் நினைவுக்கு வந்தன. அவனது குரலையும்,

குறுஞ்சிரிப்பையும் நினைத்துப் பார்த்தாள். கோடையில் அவனை மரம் ஏற வைத்து சாதனை புரிந்ததை அவளால் மறக்க முடியவில்லை. அவன் அவளைவிட வயதிலும், உயரத்திலும் பெரியவனாக இருந்தாலும் கூட எப்படி அவள்மீது நம்பிக்கை வைத்து கனமான உடலை மரத்தின்மேல் இழுக்க அனுமதித்தான் என்பதும் நினைவுக்கு வந்தது. அமெரிக்காவில் உள்ள தொலைக்காட்சிப் பெட்டியைப் பற்றிக் கூறியவனும் அவனே. டோட்டோ-சான் யசுயாகி-சானை நேசித்தாள். அவர்கள் இருவரும் ஒன்றாக உண்ணுவார்கள்; ஒன்றாக இடைவேளைகளைக் கழிப்பார்கள்; பள்ளி விட்டதும் ஒன்றாக இரயில் நிலையத்திற்குச் செல்வார்கள். அவனது இழப்பு அவளுக்குப் பெரிதாகத் தோன்றியது. சாவு என்றால், யசுயாகி-சான் இனி பள்ளிக்கு வரமாட்டான் என்பது அவளுக்குத் தெரிந்திருந்தது. அவளது கோழிக்குஞ்சுகளை அவள் இழந்தது போல இந்த மறைவு அவளுக்கு இருந்தது.

யசுயாகி-சானின் இறுதிச் சடங்குகள் அவன் வாழ்ந்த டெனென் சோபுவிற்கு எதிரில் இருந்த சர்ச்சில் நடைபெற்றது.

குழந்தைகள், ஜியுகோகாவில் இருந்து ஒருவர் பின் ஒருவராக அமைதியாக, வரிசையாக அங்கு சென்றனர். டோட்டோ-சான் வழக்கம் போல் சுற்றும் முற்றும் பார்க்காமல், தரையைப் பார்த்துக் கொண்டே அமைதியாக நடந்தாள். தலைமையாசிரியர் அந்தத் துயரச் செய்தியைச் சொல்லும்போது வேதனைப்பட்டதைப் போல அவளும் வேதனைப் பட்டாள். யசுயாகி-சான் மீண்டும் உயிரோடு வரமாட்டானா என அவள் மனம் எதிர்பார்த்தது. அவள் அவனோடு பேச விரும்பினாள். அதற்காக எதையும் கொடுக்கத் தயாராக இருந்தாள்.

அந்தச் சர்ச் வெள்ளை லில்லி மலர்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. யசுயாகி-சானின் அழகிய அம்மாவும், சகோதரியும், உறவினர்களும் கறுப்பு உடை அணிந்திருந்தனர். அவர்கள் சர்ச்சின் வெளிப்பக்கம் நின்று கொண்டிருந்தார்கள். அவர்கள் டோட்டோ-சானைப் பார்த்ததும் கையில் வைத்திருந்த வெள்ளைக் கைக்குட்டைகளால் வாயை மூடிக் கொண்டு பெரிதாக அழ ஆரம்பித்துவிட்டார்கள். ஒருவரின் இறுதிச் சடங்குகளுக்குச் செல்வது, டோட்டோ-சானுக்கு அதுதான் முதல்முறை. எனவே, மறைவின் துயரம் எவ்வளவு கொடியது என்பதை உணர்ந்தாள். யாரும் பேசிக் கொள்ளவில்லை. மெல்லிய சோககீதம் ஒலித்துக் கொண்டிருந்தது. வெயில் காய்ந்தது. சர்ச் முழுவதும் விளக்குகள் எரிந்தன. ஆனால் எங்குமே மகிழ்ச்சி இல்லை.

கையில் கரும்பட்டை அணிந்திருந்த ஒருவன் டோமோயிலிருந்து வந்திருந்த குழந்தைகள் ஒவ்வொருவர் கையிலும் ஒரு வெள்ளைப் பூவை அளித்து, ஒவ்வொருவராக வரிசையாகச் சென்று யசுயாகி-சானின் பெட்டி மேல் அம்மலர்களை வைத்து அஞ்சலி செலுத்துமாறு கூறினான். யசுயாகி-சானின் உடல் அப்பெட்டியில் கண்கள் மூடிய நிலையில் மலர்கள் சூழ்ந்து காணப்பட்டது. அவன் இறந்துவிட்டாலும் எப்பொழுதும் போல் அவன் கனிவுடனும், புத்திசாலித்தனத்துடனும் இருப்பதுபோல் தோன்றியது. டோட்டோ-சான் அப்பெட்டியின் முன் மண்டியிட்டு

மலர்களை வைத்தபின் அவள் அடிக்கடி அன்போடு பிடித்திருந்த அந்தக் கைகளைத் தொட்டுப் பார்த்தாள். ஒழுங்கற்ற அந்தக்கை வெளுத்தும் விரல்கள் பெரியவர்களைப்போல் நீண்டும் இருந்தன.

"நான் போய் வருகிறேன்", யசுயாகி-சானிடம் கிசுகிசுத்தாள். "வயதாகியபின் எங்காவது நாம் சந்திப்போம். அப்போது உன் இளம் பிள்ளைவாதம் சுகமாகியிருக்கட்டும்". பின்னர் டோட்டோ-சான் எழுந்தாள். அவன் முகத்தை மீண்டும் ஒருமுறை பார்த்தாள். "ஆம், நான் மறந்துவிட்டேனே ?" அவள் சொன்னாள், "டாம் மாமாவின் சிறுகுடில், இப்பொழுது நான் உனக்குத் திருப்பித்தர இயலாதே? நாம் மீண்டும் சந்திக்கும்வரை அதை நானே வைத்திருப்பேன்" என்றாள்.

இதைச் சொன்னதும் அவள் நடக்க ஆரம்பித்தாள். "டோட்டோ-சான் நாம் இருவரும் நிறையப் பேசி மகிழ்ந்திருக்கிறோம். நான் உன்னை மறக்க மாட்டேன். ஒருபோதும் மறக்க மாட்டேன்" என யசுயாகி-சானின் குரல் பின்னாலிருந்து ஒலிப்பதுபோல் அவளுக்குத் தோன்றியது.

டோட்டோ-சான் வாசலுக்கு வந்ததும் திரும்பிப் பார்த்து "நானும் உன்னை ஒரு போதும் மறக்க மாட்டேன்", என்றாள்.

இலையுதிர்காலக் கதிரவன், அவள் முதன்முதலில் யசுயாகி-சானை இரயில் பெட்டி வகுப்பில் சந்தித்தபோது இருந்தது போல் பொற் கதிர்களைப் பரப்பிக் கொண்டிருந்தது. ஆனால் அன்றிருந்தது போல் இல்லாமல் இன்று அவளது கன்னங்களில் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது.

## உளவாளி

யசுயாகி-சானை நினைத்து டோமோயின் குழந்தைகள் நீண்ட நாள் சோகத்திலிருந்தன. குறிப்பாகக் காலையில் வகுப்பு ஆரம்பிக்கும் நேரத்தில் அவனை நினைத்துக் கொள்வர். ஒவ்வொரு நாளும் அவன் தாமதமாக வருவான் என்பது போல் தோன்றும். பின்னர் அவன் எப்பொழுதுமே வரமாட்டான் என்பதை உணர்வார்கள். குறைந்த அளவு மாணவர்கள் உள்ள வகுப்புகள் நன்றாகத்தான் இருக்கும். ஆனால் இதுபோன்ற நிகழ்ச்சிகள் சிறு வகுப்புகளில் சிரமத்தை ஏற்படுத்தி விடும். யசுயாகி-சான் இல்லாதது தெளிவாகத் தெரிந்தது. ஒவ்வொருவருக்கும் தனி இடம் ஒதுக்காதது ஒரு நல்ல அம்சமாய்த் தோன்றியது. அவனுக்கென ஒரு இடம் இருந்தால் அது இப்போது காலியாக, துன்பத்தை அதிகரிப்பதாக இருந்திருக்கும்.

சமீப காலமாக டோட்டோ-சான் தான் வளர்ந்தபின் என்ன வேலை பார்க்கலாம் என்பது பற்றிச் சிந்திக்க ஆரம்பித்திருந்தாள். அவள் மிகவும் சிறுமியாக இருந்தபோது வீதி-இசைஞராக வருவது பற்றியும், நடனமாதுவாக மாறுவது பற்றியும் சிந்தித்திருந்தாள். டோமோயில் சேருவதற்காக வந்த அன்று தான் இரயில் பயணச்சீட்டு பரிசோதகராக வரவேண்டுமென்பதே சிறந்த யோசனையென நினைத்திருந்தாள். ஆனால் தற்போது அவள் தனது பணி வழக்கத்திற்கு மாறாகப் புதியதாக

இருக்கவேண்டுமென்றும் பெண்களுக்குப் பொருத்தமானதாக இருக்க வேண்டுமென்றும் நினைத்தாள். மருத்துவமனையில் செவிலியராகப் பணியாற்றுவது பொருத்தமானதாக இருக்குமா எனச் சிந்தித்தாள். அவள் காயம்பட்ட போர் வீரர்களைக் காணச் சென்றபோது செவிலியர்கள் நோயாளிகளுக்கு ஊசிபோட்டது திடீரென நினைவுக்கு வந்தது. அது மிகச் சிரமமானதாயிற்றே என நினைத்தாள். எனவே, என்ன வேலை தனக்குப் பொருத்தமானது என்ற முடிவுக்கு அவளால் வர முடியவில்லை. திடீரென மகிழ்ச்சியில் அவள் மனம் துள்ளியது.

"ஏன் முடியாது? நான் என்னவாக வேண்டும் என்பதை ஏற்கெனவே முடிவு செய்துள்ளேனே!"

அவள் டாய்-சானிடம் ஓடினாள். அவன் அப்பொழுதுதான் தன் சாராய விளக்கைப் பொருத்திக்கொண்டிருந்தான்.

"நான் உளவாளியாகப் போகப் போகிறேன்", அவள் பெருமையுடன் அவனிடம் கூறினாள்.

டாய்-சான் எரிந்து கொண்டிருந்த விளக்கிலிருந்து தன் பார்வையைத் திருப்பி டோட்டோ-சான் முகத்தைச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்தான். பின்னர் அவன் ஆழ்ந்து சிந்திக்கும்போது பார்ப்பதுபோல்



ஜன்னல் வழியாக உற்றுப் பார்த்தான். பொதுவாக அவன் மெல்லிய குரலில் புத்திசாலித்தனத்துடன் சுருக்கமாகத் தன் கருத்தைக் கூறுவதுண்டு. எனவே, அவன் யோசித்தபின், "உளவாளி புத்திசாலித்தனத்துடன் நடந்து கொள்ள வேண்டும். அத்துடன் நீ நிறைய மொழிகளைத் தெரிந்து கொள்ள வேண்டும்", என்று கூறுவான் என எதிர்பார்த்தாள்.

டாய்-சான் ஆழ்ந்த மூச்சுவிட்டு, சிறிது நேரம் எடுத்துக் கொண்டான். பின்னர் அவளை நேரிடையாகப் பார்த்து, "முதலில் பெண் உளவாளி அழகாக இருக்க வேண்டும்", என அழுத்தமாகச் சொன்னான்.

டோட்டோ-சான் தனது பார்வையை, உற்றுப்பார்க்கும் டாய்-சானின் கண்களிலிருந்து மெதுவாகத் தாழ்த்தி தலையைத் தொங்கப் போட்டாள். சிறிது இடைவெளிக்குப்பின் டாய்-சான் தனது மெல்லிய குரலில், டோட்டோ-சானைப் பார்க்காமலேயே "மேலும் வாயாடிகளெல்லாம் உளவாளியாக முடியும் என நான் நினைக்கவில்லை" என்றான்.

டோட்டோ-சான் வாயடைத்துப் போய்விட்டாள். அவளின் விருப்பத்திற்கு எதிராக அவன் பேசுகிறானே என்பதற்காக அல்ல. அவன் கூறுவது உண்மையாக உள்ளதே என்பதற்காக.

அவன் சந்தோஷப்படுவான் என அவள் எதிர்பார்த்தாள், ஆனால் அவள் ஒரு உளவாளிக்குத் தேவையான அடிப்படைத் திறமைகள் தன்னிடம் இல்லை என்பதை உணர ஆரம்பித்தாள்.

டாய்-சான் பகை உணர்வுடன் இதைக் கூறவில்லையென்பதையும் அவள் அறிவாள். 'இதில் நாம் செய்வதற்கு ஏதுமில்லை; உளவாளியாகும் யோசனையைக் கைவிடுவதைத் தவிர', என்ற முடிவுக்கு வந்தாள். இது குறித்து டாய்-சானிடம் பின்னர் பேசிக்கொள்ளலாம் என்றும் முடிவு செய்தாள்.

"என்ன ஆச்சரியம்? டாய்-சானுக்கும், என்னைப் போன்ற வயதுதான் ஆகிறது. ஆனால் அவன் எவ்வளவு தெரிந்து வைத்திருக்கிறான்", அவள் வியந்தாள்.

"ஒருவேளை டாய்-சான் தான் இயற்பியல் விஞ்ஞானியாகப் போவதாய்த் தெரிவித்திருந்தால் என்னால் என்ன பதில் கூறியிருக்க முடியும்?"

"நல்லது. உன்னால் எரிசாராய விளக்கை நன்றாகப் பொருத்த முடிகிறது எனச்சொல்லி இருக்கலாமா? இது மிகக்குழந்தைத்தனமான பதிலாக உள்ளதே?" என நினைத்தாள்.

"நல்லது. உனக்குத் தெரியும் கிட்சுனே என்றால் நரி. ஆங்கிலத்தில் "கட்சூ" என்றால் காலணி. எனவே, நீ இயற்பியல் விஞ்ஞானியாய் ஆவது நல்லது", இதுவும் போதுமான பதில் அல்ல என்ற முடிவுக்கு வந்தாள்.

எப்படி இருந்தாலும் டாய்-சான் புத்திசாலித்தனமாகத்தான் செய்வான் என்பதில் உறுதியாக இருந்தாள். எனவே, சோதனைக் குடுவையில் வரும் குமிழிகளை உற்று நோக்கிக்கொண்டிருந்த டாய்-சானிடம் "நன்றி, நான் உளவாளியாக வரப்போவதில்லை. ஆனால் நீ முக்கியமானவனாய் வருவாய் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை", என இனிமையான குரலில் கூறினாள்.

டாய்-சான் தன் தலையைச் சொறிந்து கொண்டே ஏதோ முணு முணுத்தான். பின்னர் அவன் முன்னால் விரித்து வைக்கப்பட்டிருந்த புத்தகத்தில் மூழ்கி விட்டான்.

அவள் உளவாளியாகப் போவதில்லையெனில் என்னவாகப் போகிறாள். அவள் மனதில் எண்ணி வியந்தாள். டாய்-சானுக்குப் பின்னாலிருந்து எரிசாராய விளக்கின் சுடர் மின்னுவதைக் கவனித்தாள்.

## அப்பாவின் வயலின்

அவர்கள் அறியும் முன்பே, யுத்தம் கடுமையான விளைவுகளை டோட்டோ-சான் வாழ்க்கையிலும் அவள் குடும்பத்திலும் ஏற்படுத்த ஆரம்பித்திருந்தது. ஒவ்வொரு நாளும் அருகில் உள்ள குடியிருப்புப் பகுதிகளிலிருந்து ஆண்களும், பையன்களும் கொடியசைத்து அனுப்பப் பட்டார்கள். அவர்களின் 'பான்சாய்' (வீர முழக்கம்) எங்கும் ஒலித்தது. கடைகளிலிருந்து உணவுப் பொருட்கள் ஒன்றன்பின் ஒன்றாக விரைவில் மறைந்தன.

டோமோயின் உணவு விதியான 'கடலிருந்து கொஞ்சம் மலைகளி லிருநது கொஞ்சம்' கடைப்பிடிப்பதே சிரமமாகி இருந்தது. அம்மா கடற் பாசியிலும், பிளம் ஊறுகாயிலும் ஏதோ உணவு செய்தாள். விரைவில் அதைப் பெறுவது கூட சிரமமாகி விட்டது. உணவுப்பொருட்கள் எல்லாமே பங்கிடப்பட்டன. எவ்வளவு தேடினாலும் இனிப்புகளைக் காண்பது அரிதாகிவிட்டது.

டோட்டோ-சான் இறங்கும் ரயில் நிலையத்திற்கு அருகில் இருந்த ஓகாயாமா நிலையத்தில் ஒரு இயந்திரம் இருந்தது. அதில் காசைப்போட்டால் ஒரு பாக்கெட் கருவெல்லக் கட்டியை அது வழங்கும். அந்த இயந்திரத்தின் மேல் தாகத்தோடு இருப்பது போல் ஒரு படம் இருக்கும். அதில் 5 சென் போட்டால் சிறிய பாக்கெட்டும், 10 சென் போட்டால் பெரிய பாக்கெட்டும் வரும். ஆனால் தற்போது அந்த இயந்திரத்தில் கூட நீண்ட நாட்களாக எதுவும் இல்லை. காலியாக இருந்தது. நீங்கள் எவ்வளவு காசு போட்டாலும், எவ்வளவு அழுத்திப் பார்த்தாலும் அதிலிருந்து எதுவும் வருவதில்லை. டோட்டோ-சான் விடாப்பிடியாக தொடர்ந்து முயற்சி செய்து பார்த்தாள். "ஏதேனும் ஒரு பாக்கெட் உள்ளே இருக்காதா? எங்காவது ஒரு பாக்கெட் சிக்கியிருந்து தற்போது வராதா?" என அவள் நினைத்தாள்.

எனவே, ஒவ்வொரு நாளும் இரயில் நிற்கும்பொழுது அந்த இயந் திரத்தில் 5சென் நாணயத்தையும், 10 சென் நாணயத்தையும் போட்டுப் பார்ப்பாள். ஆனால் அவள் பெற்றதெல்லாம் தான் போட்ட காசைத்தான். ஒலியுடன் ஒலியுடன் வெளியே வந்துவிழும்.

அந்த நேரத்தில், பெரும்பாலோர் வரவேற்கும் செய்தியை, அப்பாவிடம் யாரோ சொன்னார்கள். அவருடைய வயலினில் போர்க்கால இசையை அருகில் உள்ள ஆயுதம் தயாரிக்கும் ஆலையில் வழங்கினால் அவர்கள் சீனியும், அரிசியும் பிற பொருட்களும் தருவார்கள் எனச் சொன்னார்கள். அப்பாவுக்கு அப்பொழுதுதான் இசையில் கௌரவப் பட்டம் அளிக்கப்பட்டிருந்தது. மிகச்சிறந்த முறையில் வயலின் வாசிப்பவர்

என்பதற்காக அப்பட்டம் வழங்கப்பட்டிருந்தது. எனவே, அவர் ஆயுதங்கள் தயாரிக்கும் இடத்திற்குச் சென்று இசை நிகழ்ச்சி நடத்தினால் கூடுதலாக பரிசுகளைப் பெறலாம் என அந்த நண்பர் தெரிவித்தார்.

"நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? இதைச் செய்யப் போகிறீர்களா?" அம்மா அப்பாவிடம் கேட்டாள்.

இசை நிகழ்ச்சிகள் மிகவும் அரிதாகத்தான் இருந்தன. முதலில் மேலும் மேலும் பாடகர்கள் யுத்தத்திற்கு அழைக்கப்பட்டார்கள். ஆர்கெஸ்ட்ரா வாசிப்பவர்கள் அரிதாகிவிட்டார்கள். வானொலியில் போர் பற்றிய செய்திகளுக்கே முக்கியத்துவம் அளித்தனர். எனவே, அப்பாவுக்கும், அவர் கூட்டாளிகளுக்கும் அங்கே வேலையெதுவும் இல்லை. அவர் பாடும் வாய்ப்பு எதையும் வரவேற்கக் கூடிய நிலையில்தான் இருந்தார்.

அப்பா பதில் அளிக்கும் முன் சிறிது யோசித்துவிட்டு, "நான் இது போன்ற இசைகளை என் வயலினில் வாசிக்கத் தயாராக இல்லை", என்றார்.

"நீங்கள் சொல்வதுதான் சரி", என்ற அம்மா, "நானும் மறுக்கப் போகிறேன். நாம் எப்படியும் வேறு வழியில் உணவு தேடிக்கொள்ளலாம்" என்றாள்.

டோட்டோ-சானுக்கு மேலும் உணவு தேவையென்பதும், அவள் கருவெல்லக்கட்டி தரும் இயந்திரத்தில் தினமும் காசைப்போட்டு ஏமாற்ற மடைகிறாள் என்பதும் அப்பாவுக்குத் தெரிந்திருந்தது. போர்க்கால இசை அளித்தால் அதற்குக் கிடைக்கும் உணவுகூடப் போதுமானது அல்ல என்பதும் அவருக்குத் தெரியும். ஆனால் அப்பா அவரின் இசையை இதை விடக் கூடுதலாக மதித்தார். அம்மாவுக்கும் அது தெரியும். எனவே, அம்மா போர்க்கால இசை வழங்கச் செல்லுமாறு அப்பாவிடம் கூறவில்லை. "என்னை மன்னித்துவிடு டாட்ஸ்கி" என அப்பா வருத்தத்துடன் கூறினார்.

கலையைப் பற்றியும், கொள்கையைப் பற்றியும் தெரிந்து பணியாற்றப் போதுமான வயது அவளுக்கு இல்லை. ஆனால் டோட்டோ-சானுக்குத் தெரியும், அவள் அப்பா வயலினை மிகவும் நேசிக்கிறார் என்பது. அவரே நிகழ்ச்சிகளை ஏற்க மறுத்துவிட்டார் என்பதால் அவர் குடும்பத்தில் உள்ள உறவினர்கள் யாரும் அவருடன் பேசுவது இல்லை. அவருக்கு அது மிகவும் சிரமமான காலம். ஆனால் அவர் வயலினைக் கைவிடவும் மறுத்துவிட்டார். ஆகையால், டோட்டோ-சான், அவர் விரும்பாத போர்க் கால இசையை அவர் இசைக்காமல் இருப்பதே சிறந்தது என நினைத்தாள். டோட்டோ-சான் அப்பாவைச் சுற்றிவந்து குதித்து அவரைக் கட்டிக் கொண்டு அன்போடு கூறினாள். "நான் இதைப்பற்றிக் கவலைப்பட வில்லை. ஏனெனில் நான் உங்களையும், உங்கள் வயலினையும் நேசிக்கிறேன்."

ஆனால் அடுத்த நாளும் டோட்டோ-சான் ஓகயாமா இரயில் நிலையத்தில் கருவெல்லக் கட்டி விற்கும் இயந்திரத்தில் காசைப்போட்டுப் பார்த்தாள். அன்றும் அதிலிருந்து எதுவும் வரவில்லை. இருப்பினும் அவள் நம்பிக்கை வைத்திருந்தாள்.

## வாக்குறுதி

மதிய உணவிற்குப் பிறகு வட்டமாகப் போடப்பட்டிருந்த பெஞ்சு, மேஜைகளை அகற்றியதும் அசெம்பிளி ஹால் விசாலமாகத் தோன்றியது.

"இன்று, தலைமையாசிரியர் முதுகில் நான்தான் முதலில் ஏறப்போகிறேன்" டோட்டோ-சான் முடிவு செய்து கொண்டாள்.

அதுதான் அவள் எப்பொழுதும் விரும்புவது. ஆனால் அசெம்பிளி ஹாலின் நடுவே அவர் காலை மடித்து உட்காரும்போது இவள் ஒரு வினாடி தயங்குவாள். அதற்குள் அவர் மடியில் யாரேனும் உட்கார்ந்து விடுவார்கள். அதே நேரத்தில் அவர் முதுகில் இருவர் ஏறிக்கொண்டு இடம் பிடிக்க போட்டிபோடுவார்கள். அவர் கவனத்தை திருப்ப முயற்சித்துக் கொண்டு இருப்பார்கள். "ஹேய்... நிறுத்து, நிறுத்து", முகம் கனிந்து சிவக்கச் சிரித்துக் கொண்டே அவர் மறுதலிப்பார். ஆனால் அவர் முதுகில் ஒருமுறை இடம் பிடித்துவிட்டால் எந்தக் குழந்தையும் அவர் முதுகை விட்டகலுவதில்லை. நன்றாக ஒட்டிக் கொள்வார்கள். ஆகவே, குழந்தைகள் ஒரு வினாடி தாமதித்தாலும் அவர் முதுகில் இடம் கிடைப்பது அரிது. எனவே, அவர் வருகையை எதிர்பார்த்து டோட்டோ-சான் அசெம்பிளி ஹாலின் நடுவில் நின்று கொண்டிருந்தாள். தலைமையாசிரியர் கண்ணில் பட்டதும் "ஐயா, நான் உங்களிடம் ஒன்று சொல்லப் போகிறேன்", என உரக்கக் கூறிக் கொண்டே அவரை நெருங்கி ஓடினாள்.

"என்ன அது? சொல்லு", எனக்கேட்டுக் கொண்டே தலைமை யாசிரியர் கால்களை மடித்து அறையின் நடுவே அமர்ந்தார்.

டோட்டோ-சான் பலநாள் யோசனைக்குப் பின் எடுத்திருந்த முடிவை அவரிடம் கூற விரும்பினாள். அவர் அமர்ந்து கால்களைக் குறுக்காக மடித்து வைத்ததும், டோட்டோ-சான் அவர் முதுகில் முதலில் ஏறுவது என்பதற்கு மாறான முடிவைத் திடீரென எடுத்தாள். அவள் சொல்ல விரும்புவதை நேருக்குநேர் அமர்ந்து முகத்தைப் பார்த்துக் கொண்டு சொல்வதுதான் சிறப்பாக இருக்கும் என நினைத்தாள். எனவே, அவரைப் பார்த்து அவருக்கு மிக அருகில் அமர்ந்தாள். அவள் தலையை ஆட்டி மெல்லியதாகப் புன்னகை புரிந்தாள். இவ்வாறு செய்தால் 'அழகான முகம்' என அம்மா கொஞ்சுவதுண்டு. அவளுக்கு விவரந்தெரிந்த நாளில் இருந்து ஒவ்வொரு ஞாயிறன்றும் இவ்வாறு அம்மாவின் அன்பைப் பெறுவதுண்டு. அவள் இவ்வாறு வாயைச் சிறிது திறந்து குறுநகை புரியும் போது தான் உண்மையிலேயே நல்ல பெண்தான் என நினைத்துக் கொள்வாள்.

தலைமையாசிரியர் எதிர்பார்ப்புடன் அவளைப் பார்த்தார் "என்ன அது?" முன்புறம் குனிந்து மீண்டும் கேட்டார்.

அம்மாவைப் போன்ற பெரியவர்கள் கூறும் முறையில் மெதுவாகவும், இனிமையாகவும் டோட்டோ-சான் கூறினாள். "நான் பெரியவள் ஆனதும் இந்தப் பள்ளியில் ஆசிரியை ஆகப் போகிறேன். உண்மையில் அது என்னால் முடியும்", என்றாள்.

தலைமையாசிரியர் இதைக் கேட்டுச் சிரிப்பார் என அவள்

எதிர்பார்த்தாள். ஆனால் அவர் அவளைப் பார்த்து "உறுதியாகவா?" எனக் கையை நீட்டிக் கேட்டார்.

அவள் உண்மையிலேயே அப்படிச் செய்ய வேண்டுமென அவர் விரும்பினார்.

டோட்டோ-சான் வேகமாகத் தலையை ஆட்டி, "நான் உறுதியாகக் கூறுகிறேன்", அந்தப் பள்ளியில் தான் ஆசிரியையாக வரவேண்டும் என்பதை அறுதியிட்டுக் கூறினாள்.

அந்த நேரத்தில் தான் முதல் வகுப்பு மாணவியாகச் சேர அந்தப் பள்ளிக்கு வந்து தலைமையாசிரியரைச் சந்தித்ததை நினைத்துப் பார்த்தாள். அது நீண்ட நாளுக்கு முன் நடந்த நிகழ்ச்சியாகத் தோன்றியது. அவர், அவள் கூறியதை நான்கு மணிநேரம் பொறுமையாகக் கேட்டார். அவள் பேசி முடித்ததும், "நீ இப்பொழுது முதல் இந்தப் பள்ளியின் மாணவி" என்று அவர் கூறியதிலிருந்த அன்பை நினைத்துப் பார்த்தாள். அவள் அப்போது விரும்பியதைவிட, திரு. கோபயாஷியை இப்போது அதிகம் விரும்பினாள். அவள் அவருக்காக எந்த உதவியும் செய்யத் தயாராக இருந்தாள். அதற்காகவே அப்பள்ளியில் பணியாற்றுவதென முடிவு செய்தாள்.

அவள் உறுதியளித்தபோது தலைமையாசிரியர் மகிழ்ச்சியுடன் சிரித்தார். அவரது சிரிப்பு வழக்கம்போல் பல்விழுந்த இடைவெளி தெரியும்படி இருந்தது.

டோட்டோ-சான் அவளது சுண்டு விரலை நீட்டினாள். அவரும் அதையே செய்தார். அவரது சுண்டுவிரல் வலுவாக இருந்தது. அவரது நம்பிக்கையே அச்சுண்டு விரலில் இருப்பது போல் இருந்தது. இருவரும், ஜப்பானில் காலங்காலமாக உறுதிமொழி கூறும்போது செய்வதுபோல் தங்களின் சுண்டு விரல்களைப் பிணைத்துக் கொண்டு உறுதி எடுத்துக் கொண்டனர். தலைமையாசிரியர் சிரித்தார். டோட்டோ-சானும் சிரித்தாள். மீண்டும் உறுதி கூறினாள். அவள் டோமோயில் ஆசிரியை ஆகப் போகிறாள். என்ன அற்புதமான எண்ணம்!"

"நான் ஆசிரியை ஆனபின்..." அவள் தன்னை மறந்து கற்பனையில் ஆழ்ந்தாள். படிப்பு அதிகம் இருக்கக் கூடாது. விளையாட்டு விழாக்கள் நிறைய இருக்க வேண்டும். திறந்த வெளிச் சமையல், முகாமிடுதல், உலாவுதல் நிறைய இருக்கவேண்டும் என அவள் எதிர்கால பாடத் திட்டத்தைக் கற்பனை செய்து பார்த்தாள்.

தலைமையாசிரியர் மகிழ்ந்தார். டோட்டோ-சான் வளர்ந்த பின் ஆசிரியையாக வருவாளா என்பது கூறமுடியாததொன்று. ஆனால் அவர் அவளால் டோமோயில் ஆசிரியையாகப் பணியாற்ற முடியும் என்பதை உறுதியாக நம்பினார். டோமோயியின் மாணவர்கள் நிச்சயம் நல்ல ஆசிரியர்களாக வர முடியும். ஏனெனில் அவர்கள் குழந்தைகளாக இருந்தபொழுது நடந்தவற்றை அவர்கள் நிச்சயம் நினைத்துப் பார்ப்பார்கள் என அவர் நினைத்தார்.

அமெரிக்காவின் விமானங்கள் குண்டுகளை ஏற்றிக் கொண்டு ஜப்பானின் வானத்தில் எப்பொழுது வருமோ என ஒவ்வொருவரும்

அஞ்சிக் கொண்டிருந்த நேரத்தில், ஒரு தலைமையாசிரியரும், அவரது மாணவியும் பத்தாண்டுகளுக்குப்பின் நடக்கக் கூடியதைப் பற்றி உறுதி எடுத்துக் கொள்வது டோமோயில்தான் நடக்க முடியும்.

## ராக்கியைக் காணவில்லை

ஏராளமான போர்வீரர்கள் மடிந்தனர். உணவு கிடைப்பது அரிதாகிவிட்டது. ஒவ்வொருவரும் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு வாழ்ந்தனர். ஆனால் கோடை வழக்கம்போல் வந்தது. வெயில் அந்த நாட்டையே வென்றது போல் காய்ந்து கொண்டிருந்தது.

டோட்டோ-சான் அப்பொழுதுதான் தன் பெரியப்பாவின் வீடிருந்த காமகுராவிலிருந்து டோக்கியோவிற்குத் திரும்பியிருந்தாள்.

டோமோயில் முகாமிடுதலும் இல்லை. வெந்நீர் ஊற்றுப் பயணமும் இல்லை. அந்தக் கோடை விடுமுறையை மாணவர்களால் வழக்கம்போல் அனுபவிக்க முடியவில்லை.

டோட்டோ-சான் எப்பொழுதும் கோடையை காமகுராவிலிருக்கும் தன் பெரியப்பா குழந்தைகளுடன் மகிழ்ச்சியாகக் கழிப்பாள். ஆனால் இந்த ஆண்டு அதுவும் வித்தியாசமாக இருந்தது. ஒரு பெரிய பையன், அவளுக்குப் பயங்காட்டும் பேய்க்கதைகளைச்சொல்பவன், யுத்தத்திற்கு அழைக்கப்பட்டு, சென்று விட்டான். எனவே, அங்கு பேய்க் கதைகளே இல்லை. அவளது பெரியப்பா எப்பொழுதும் அவர் அமெரிக்காவில் இருந்தது பற்றிய கதைகளைக் கூறுபவர்—அவை உண்மையா, பொய்யா என்பது அவர்களுக்குத் தெரியாது— போர் முனையில் இருந்தார். அவர் பெயர் சூஜிதாகுசி. அவர் ஒரு சிறந்த புகைப்படக் கலைஞர்.

நியூயார்க்கில் நிகான் செய்தியின் குழுத்தலைவராகவும், அமெரிக்க மெட்ரோ செய்தியின் தூரக்கிழக்கு நாடுகளின் பிரதிநிதியாகவும் பணியாற்றிய அவர் சூதாகுசி என்றும் அழைக்கப்பட்டார். அவர் அப்பாவின் மூத்த சகோதரர். அப்பா அவரது அம்மா குடும்பத்தின் பெயரை எடுத்துக் கொண்டார். அவ்வாறு செய்யவில்லையெனில் அவரது பெயரும் தாகுசி என முடியும். பெரியப்பா போர்முனையில் இருந்து அனுப்பிய 'ராபூல் சண்டை' என்ற படம் அனைத்துத் திரையரங்குகளிலும் காட்டப்பட்டது. அவர் படம் அனைத்தும் யுத்தம் நடக்கும் இடங்களில் எடுத்தது. எனவே, அவளது பெரியம்மாவும், அவர் குழந்தைகளும் அவரைப் பற்றி மிகவும் கவலைப்பட்டனர். யுத்தப் புகைப்படங்களில் பெரும்பாலானவை வீரர்கள் அபாயத்திலிருப்பதையே காட்டின. அப்படங் களைக் காட்டி படைகளை முன்னேறச் செய்வர் என அவ்வீட்டிலிருந்த வளர்ந்தவர்கள் அனைவரும் கூறினர்.

காமகுராவின் கடற்கரைகூட துயர் சூழ்ந்த நிலையில் இருந்தது. நிலைமைகள் இப்படி இருந்தாலும், யத்-சான் விளையாட்டுக் காட்டி மகிழ்ச்சியளித்தான். அவன் பெரியப்பா சூசியின் மூத்தமகன்; டோட்டோ-சானை விட ஒரு வயது இளையவன். குழந்தைகள் அனைவரும் ஒரே கொசுவலையில் தூங்குவார்கள். அவன் தூங்கப் போகும்முன் "பேரரசர்

நீடு வாழ்க!" எனக் கூறிவிட்டு சுடப்பட்ட போர் வீரன் விழுவது போல் விழுவான். செத்தது போல் அப்படியே கிடந்து தூங்கிவிடுவான். சில நாட்களில் இதை மீண்டும் மீண்டும் செய்வான். இதில் சிரிப்புக்குரியது என்னவென்றால், எப்பொழுதெல்லாம் இவன் இப்படிச் செய்கிறானோ, அந்த நாட்களின் இரவில் தூக்கத்தில் எழுந்து நடப்பான். வெளி முற்றத்தில் ஏதேனும் தடுக்கி, கீழே விழுந்து பெரும் அமளியை ஏற்படுத்தி விடுவான்.

டோட்டோ-சானின் அம்மா, டோக்கியோவில் அப்பாவுடன் தங்கிவிட்டாள். அப்பா அங்கே பணியாற்ற வேண்டியிருந்தது. இப்பொழுது கோடை விடுமுறை முடிந்து விட்டதால், அவளுக்குப் பேய்க்கதைகள் கூறுபவனின் சகோதரி அவளைக் காமகுராவிலிருந்து டோக்கியோவிற்கு அழைத்து வந்தாள்.

வழக்கம் போல் அவள் வீட்டிற்கு வந்ததும் முதலில் ராக்கியைத்தேட ஆரம்பித்தாள். ஆனால் அதை எங்கும் கண்டுபிடிக்க முடியவில்லை. ராக்கியை வீட்டிலும் காணவில்லை. தோட்டத்திலும் காணவில்லை. அப்பா வளர்த்த பழத்தோட்டத்திலுள்ள பச்சை வீட்டிலும் இல்லை. பொதுவாக நீண்ட இடைவெளிக்குப் பின் அவள் இதுபோல் திரும்பி வந்ததும் ராக்கியே அவளைச் சந்திக்க வந்திருக்கும். எனவே, அவள் கவலைப்பட ஆரம்பித்தாள். அவள் வீட்டைவிட்டு வெளியே வந்து சாலையில் நின்று கொண்டு அதன் பெயரைக் கூறி உரக்க அழைத்தாள். ஆனால், அதன் அன்பான கண்ணோ, நீண்ட காதுகளோ, அந்த அழகான வாலோ கண்ணில் படவில்லை. அவள் சாலையில் தேடிக் கொண்டிருக்கும்போது, அது வீட்டிற்குத் திரும்பியிருக்கலாம் என நினைத்து மீண்டும் வீட்டிற்கு வேகமாக ஓடினாள். ஆனால் ராக்கி அங்கும் இல்லை.

"என் ராக்கி எங்கே?" அவள் அம்மாவிடம் கேட்டாள். அம்மாவின் உடையை இழுத்து மீண்டும் வினவினாள்.

அம்மாவிற்குப் பதில் கூற மிகவும் சிரமமாக இருந்தது. "அதைக் காணவில்லை", எனப் பதிலளித்தாள்.

டோட்டோ-சானால் அதை நம்ப முடியவில்லை. எப்படிக் காணாமல் போகும்? அம்மாவின் முகத்திற்கு நேராகப் பார்த்து "எப்பொழுது முதல்?" எனக்கேட்டாள்.

அம்மாவுக்கு பதில் கூற வார்த்தைகள் கிடைக்கவில்லை. "நீ காமகுராவிற்குச் சென்ற உடனே", அம்மா வருத்தத்துடன் தொடங்கினாள். பின்னர் வேகமாகக் கூற ஆரம்பித்தாள். "நாங்கள் அதைத் தேடினோம். எல்லாப் பக்கமும் சென்று பார்த்தோம். எல்லோரிடமும் விசாரித்தோம். ஆனால் எங்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. இதை எப்படி உன்னிடம் கூறுவது எனத் திகைத்துக் கொண்டிருந்தேன். நான் மிகவும் வருந்துகிறேன்".

டோட்டோ-சானால் உண்மையைப் புரிந்து கொள்ள முடிந்தது. ராக்கி இறந்திருக்க வேண்டும். அம்மா அந்தத் துயரச் செய்தியைத் தன்னிடம் கூற விரும்பவில்லை என நினைத்தாள்.

அது டோட்டோ-சானுக்கு மிகத் தெளிவாகத் தெரிந்தது. அவள் இருந்தவரை அவள் எவ்வளவு தூரம் சென்றாலும், ராக்கி வீட்டைவிட்டு

மிகத் தொலைவுக்குச் செல்வதில்லை. அதுவும் அவளிடம் சொல்லாமல் அது எங்கும் சென்றதில்லை. அவள் தனக்குள்ளே சொல்லிக்கொண்டாள். "ராக்கி இறந்திருக்க வேண்டும்".

ஆனால் அவள் அன்னையுடன் அது குறித்து விவாதிக்கவில்லை. அம்மா எவ்வளவு வருத்தப்படுவாள் என்பது குறித்து அவளுக்குத் தெரியும். அவள் அம்மாவிடம் சொன்னதெல்லாம், "எனக்கு ஆச்சரியமாக இருக்கிறதே? அது எங்கே சென்றிருக்கும்?" என்பது மட்டும்தான். இதைச் சொல்லும்போதுகூட அவள் தன் கண்களைத் தாழ்த்திக் கொண்டாள்.

இதைச் சொல்லிவிட்டு அவள் மாடிக்கு ஓடிவிட்டாள். ராக்கி இல்லாமல் அது அவர்களின் வீடாகவே தோன்றவில்லை. அவள் தன் அறையில் நுழைந்ததும் அழாமல் இருக்க எவ்வளவோ முயற்சி செய்து பார்த்தாள். நடந்தவைகளை மீண்டும் ஒருமுறை நினைத்துப் பார்த்தாள். ராக்கி தன்னை விட்டு நீங்குமளவிற்கு தான் ஏதேனும் செய்துவிட்டோமா? என்ன நடந்துவிட்டது? அவள் வியப்புடன் எண்ணிப் பார்த்தாள்.

"விலங்குகளைத் துன்புறுத்தாதீர்கள்", டோமோயின் குழந்தைகளுக்கு திரு. கோபயாஷி அடிக்கடி கூறுவதுண்டு. "உங்களையே நம்பியிருக்கும் உயிர்களைத் துன்புறுத்துவது துரோகச் செயல். நாய்கள் எதையும் கேட்டு கெஞ்சச் செய்து பின் அளிக்காதீர்கள். அப்படிச் செய்தால் அவை உங்களை நம்பாது. தவறான குணங்களை வளர்த்துக் கொள்ளும்."

டோட்டோ-சான் எப்பொழுதும் இந்த விதிகளைக் கடைப்



பிடிப்பாள். அவள் ஒரு போதும் ராக்கியை ஏமாற்றியதில்லை. அவள் நினைத்துப் பார்த்தவரை அவள் ராக்கியை ஏமாற்றியதாகத் தெரியவில்லை.

தரையில் இருந்த அவளது கரடிப் பொம்மையின் காலில் ஏதோ தொங்குவதை அப்பொழுதுதான் கவனித்தாள். அதுவரை அவள் அழவில்லை. ஆனால் அதைப் பார்த்ததும் அவளால் தன் அழுகையை அடக்க முடியவில்லை. அழுகை வெடித்தது. கண்களில் கண்ணீர் வழிய அழுதாள்.

ராக்கியின் பழுப்புநிற முடி ஒரு சிறு கொத்தாக கரடிப் பொம்மையின் காலில் தொங்கிக் கொண்டிருந்தது. ராக்கி அக்கரடியுடன் அவள் காமகுராவிற்குப் புறப்பட்ட அன்று, தரையில் புரண்டு விளையாடியபோது அம்முடி அதன் காலில் வந்திருக்க வேண்டும். அந்த ஜெர்மன் நாயின் முடிகளைத் தன் கையில் எடுத்து வைத்துக் கொண்டு அவள் அழுதாள். அழுது கொண்டே இருந்தாள். அவளது கண்ணீரையும், விம்மலையும் யாரும் நிறுத்த முடியவில்லை.

முதலில் யசுயாகி-சான்; இப்பொழுது ராக்கி. டோட்டோ-சான் மற்றுமொரு நண்பனை இழந்தாள்.

## தேநீர் விருந்து

ரியோ-சான், டோமோயின் காவலர், குழந்தைகளால் மிகவும் நேசிக்கப் படக்கூடியவர், பிரிந்து செல்ல வேண்டிய நாள் வந்துவிட்டது. யாரேனும் சிக்கலில் மாட்டிக் கொண்டால், ரியோ-சான்தான் தேவதை போல் வந்து காப்பாற்றுவார். ரியோ-சானால் எதுவும் செய்ய முடியும். அவர் அதிகம் பேசமாட்டார். மற்றவர்களைப் பார்த்தால் ஒரு புன்னகை புரிவார். அவர் பெரியவராய் இருந்தாலும் குழந்தைகள் அவரை அவரது குழந்தைத்தனமான பட்டப் பெயரைக் கூறித்தான் அழைப்பர். மற்றவர் களுக்கு இடையூறு எனில் என்ன செய்ய வேண்டுமென்பது அவருக்குத் தெரியும். டோட்டோ-சான் சாக்கடைக் குழியில் விழுந்தபோது அவர் தான் நேரடியாக வந்து காப்பாற்றினார். எவ்வித அருவருப்புமின்றி டோட்டோ-சானைக் கழுவிச் சுத்தம் செய்தார்.

"ரியோ-சானுக்குப் பிரியாவிடை கொடுக்க எழுச்சியான தேநீர் விருந்தொன்று அளிப்போமா?" எனத் தலைமையாசிரியர் குழந்தைகளைக் கலந்தாலோசித்தார்.

"தேநீர் விருந்தா?" ஒரே மகிழ்ச்சி ஆரவாரம்.

ஜப்பானில் பச்சை நிறத் தேநீரை நாள் முழுவதும் பலமுறை பருகுவதுண்டு. ஆனால் பொடி செய்யப்பட்ட தேயிலையால் வித்தியாசமான மணம் பரப்பும் தேநீரைப் பொழுதுபோக்கு நேரங்களிலும், விருந்துகளிலும்தான் பயன்படுத்துவதுண்டு. ஆனால் டோமோயில் தேநீர் விருந்தென்பது புதுமையானது. குழந்தைகள் அந்த யோசனையை வரவேற்றார்கள். இதற்கு முன் செய்திராதவற்றைச் செய்வதை அவர்கள் எப்பொழுதுமே விரும்பினார்கள். குழந்தைகளுக்கு அது தெரியாது. ஆனால் தலைமையாசிரியர்தான் அங்கு எப்பொழுதுமே பொதுவாகப்

பயன்படுத்தப்படும் "சோபட்சுகை" (வழியனுப்பு விழா) என்ற சொல்லுக்குப் பதில் "சவாகை" (தேநீர் விருந்து) என்ற சொல்லைக் காரணத்துடன் பயன்படுத்தினார். ரியோ-சான் இறந்துபோய், மீண்டும் வரமாட்டார் என்ற நிலையில்தான் இறுதி வழியனுப்பு விழா நடத்த வேண்டும்; தற்போது அப்படி அல்ல என்பதை பெரிய மாணவர்கள் புரிந்து கொண்டார்கள். மேலும் வழியனுப்பு விழா என்பது சோகத்தை வெளிப்படுத்துவதாய் இருந்தது. மேலும் அவர்கள் இதுவரை தேநீர் விருந்தைக் கொண்டாடியதில்லை. எனவே, அவர்கள் தேநீர் விருந்தை ஆவலுடன் எதிர்பார்த்தார்கள்.

பள்ளி நேரத்திற்குப்பின், தலைமையாசிரியர் திரு. கோபயாஷி, குழந்தைகளின் உதவியுடன் அசெம்பிளி ஹாலின் மேஜைகளை உணவு வேளையின் போது போடுவதுபோல் வட்டமாக இருக்குமாறு ஏற்பாடு செய்தார். எல்லோரும் வட்டமாக அமர்ந்ததும், அவர் அனைவருக்கும் ஒவ்வொரு பொரித்த சிப்பி மீன் கருவாட்டுத்துண்டு, பச்சைத் தேநீருடன் அளித்தார். அந்த யுத்த நாட்களில் அதுவே மிகப் பெரிய ஆடம்பரமாகக் கருதப்பட்டது. பின்னர் அவர் ரியோ-சானின் அருகில் அமர்ந்து கொண்டார். ரியோ-சானின் முன் சிறிது பழக்கலவையுடன் ஒரு கண்ணாடித் தட்டை வைத்தார். அது போர்முனைக்குச் செல்பவர்களுக்காகப் பெறக்கூடிய உணவுப் பங்கீடு ஆகும்.

"இதுதான் டோமோயில் முதல் தேநீர் விருந்து", தலைமையாசிரியர் கூறினார். "நாம் இந்த நேரத்தை மகிழ்ச்சியாகச் செலவிடுவோம். நீங்கள் ரியோ-சானிடம் ஏதேனும் கூற விரும்பினால் கூறுங்கள். ரியோ-சானிடம் மட்டுமல்ல, நீங்கள் உங்களுக்குள் ஏதேனும் கூற வேண்டுமென்றாலும் கூறுங்கள். ஒவ்வொருவராக நடுவில் நின்று கூறுங்கள்", என்றார்.

டோமோயில், பொரித்த சிப்பிமீன் கருவாட்டுத் துண்டை அவர்கள் சாப்பிடுவது மட்டும் முதல் முறையல்ல. அவர்கள் மத்தியில் ரியோ-சான் உட்காருவதும் அதுதான் முதல் தடவை. மேலும் ரியோ-சான் பழக்கலவையைச் சப்பிச் சாப்பிடுவதும் அதுதான் முதல் முறை.

ஒவ்வொருவராக ரியோ-சானுக்கு எதிரில் வந்து பேசினார்கள். முதல் மாணவன் ரியோ-சானிடம் உடம்பை நன்றாகக் கவனித்துக் கொள்ளுமாறும், நோய் வராமல் பார்த்துக் கொள்ளுமாறும் கூறினான். அடுத்துப் பேசிய மிகிதா, டோட்டோ-சானின் வகுப்பு மாணவன், தான் கிராமத்திற்குச் சென்று திரும்பும்போது இழவு நாள் கொழுக்கட்டை கொண்டு வந்து தருவதாகக் குறிப்பிட்டான்.

அதைக்கேட்டு எல்லோரும் சிரித்தனர். ஒரு வருட காலமாக அவன் இதுபோல் சொல்லி வருகிறான். ஒருமுறை அவன் கிராமத்திற்கு ஒரு இழவுக்குச் சென்றபோது அங்கு வழங்கிய கொழுக்கட்டை குறித்தும் அதன் ருசி குறித்தும் அனைவரிடமும் ஏற்கெனவே சொல்லியிருந்தான். தான் மீண்டும் ஊருக்குச் செல்லும்போது அக்கொழுக்கட்டை போல் கொண்டு வருவதாகக் கூறினான். ஆனால் அவன் ஒருபோதும் கொண்டு வந்ததில்லை.

மிகிதா, இழவுக் கொழுக்கட்டை குறித்துப் பேசியதும் தலைமை

யாசிரியர் அதிர்ச்சியடைந்தார். பொதுவாக இதுபோன்ற சந்தர்ப்பங்களில் இழவுக் கொழுக்கட்டை குறித்துப் பேசுவதை மோசமானதாகத்தான் நினைப்பார்கள். ஆனால் மிகிதா அறியாமையினால் அப்படிப் பேசினான். மேலும் தான் உண்ட, சிறந்த சுவையுடைய கொழுக்கட்டையை மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ள விரும்பினான். அதனால் தலைமையாசிரியர் மற்றவர்களுடன் மனம் விட்டுச் சிரித்தார். ரியோ-சான் கூட மனம் விட்டுச் சிரித்தார். மிகிதா பல நாட்களாக மற்றவர்களிடம் கூறி வந்ததை அங்கு கூறினான்.

அடுத்து 'ஓஇ' எழுந்து தான் ஜப்பானில் மிகச்சிறந்த தோட்டக்கலை வல்லுநராக வரப்போவதாய் அறிவித்தான். 'ஓஇ' தோடோரோகியில் நாற்றங்கால் வைத்திருந்த செடித் தோட்ட உரிமையாளரின் மகன். அடுத்து கெய்கோ ஆவோகி எழுந்தாள். அவள் ஒன்றும் சொல்லவில்லை. அவள் வழக்கம்போல் வெட்கப்பட்டு இளித்தாள். பின்னர் வணக்கம் செலுத்திவிட்டு தன் இடத்திற்குத் திரும்பச் சென்றாள். உடனே டோட்டோ-சான் அவளுக்காகப் பேச விரைந்து எழுந்தாள். "கெய்கோ-சானின் கோழிக் குஞ்சுகள் பறக்கும். நான் முன்பொரு நாள் அதைப் பார்த்திருக்கிறேன்" என்றாள்.

அதன்பின் அமதேரா பேசினான். "நீ காயப்பட்ட பூனை அல்லது நாயைக் கண்டால் என்னிடம் எடுத்துவா. நான் அதைச் சரி செய்து விடுகிறேன்" என்றான்.

தாகாஹாஷி சிறியவனாக இருந்ததால் மேஜைக்கு அடியில் தவழ்ந்து கண் இமைக்கும் நேரத்தில் நடுவே வந்தான்.

அவன் அன்பொழுக "நன்றி ரியோ-சான். நீ செய்த அனைத்திற்கும் நன்றி", என்றான்.

அடுத்து எய்கோ சைஷோ எழுந்தாள். "ரியோ-சான்! நான் கீழே விழுந்தபோது காயத்தைக் கட்டிவிட்டமைக்கு மிக்க நன்றி. நான் அதை ஒருபோதும் மறக்கமாட்டேன்" என்றாள். அவளது பெரிய மாமா அட்மிரல் தோகோ ரஷ்ய-ஜப்பான் சண்டையின்போது படைத் தளபதியாய் இருந்தார். அவளது மற்றொரு உறவினர் அட்சுகோ சைஷோ, பேரரசர் மெய்ஜியின் அவையில் பெரும்புலவராய் இருந்தார். ஆனால் எய்கோ அவர்களையெல்லாம் ஒருபோதும் குறிப்பிடுவதே இல்லை.

தலைமையாசிரியரின் மகள் மியோ-சான், ரியோ-சானை நன்கறிந்தவள். அவளது கண்கள் கண்ணீரால் நிரம்பியிருந்தது. "நீங்கள் உங்களைக் கவனித்துக் கொள்வீர்கள் இல்லையா? ரியோ-சான், நாம் ஒருவருக்கொருவர் கடிதம் எழுதிக் கொள்வோம்" என்றாள்.

டோட்டோ-சான் சொல்வதற்கு ஏராளமான செய்திகள் இருந்தன. ஆனால் எங்கிருந்து தொடங்குவது எனத் தெரியவில்லை. ஆகையால் "ரியோ-சான், நீங்கள் சென்றாலும் நாங்கள் தினமும் தேநீர் விருந்து அருந்துவோம்" எனக் கூறி முடித்தாள்.

தலைமையாசிரியர் சிரித்தார். ரியோ-சானும் சிரித்தார். எல்லாக் குழந்தைகளும் அதைப் பார்த்து சிரித்தன. டோட்டோ-சானும் கூடச் சிரித்தாள்.

ஆனால் டோட்டோ-சானின் வார்த்தைகள் மறுநாள் உண்மையாயின. எப்பொழுதெல்லாம் நேரம் கிடைத்ததோ அப்பொழுதெல்லாம் அவர்கள் கூட்டமாக அமர்ந்து 'தேநீர் விருந்து' விளையாட ஆரம்பித்தனர். பொரித்த சிப்பி மீன் துண்டிற்குப் பதிலாக மரப்பட்டைகளை வைத்துக் கொண்டனர். தேநீருக்குப் பதிலாக டம்ளர்களில் தண்ணீரை நிரப்பிக் கொண்டனர். சில வேளைகளில் பழக்கலவை இருப்பதுபோல் பாவித்துக் கொண்டனர். யாரேனும் ஒருவர் "நான் உங்களுக்கு இழவுக் கொழுக்கட்டை கொண்டு வருகிறேன்" எனக் கூறுவதும் உண்டு. அதைக் கேட்டு அனைவரும் சிரிப்பர்.

பின்னர் அவர்கள் பேசுவார்கள். அவரவர்கள் நினைப்பதைக் கூறுவார்கள். அவர்கள் தின்பதற்கு எதுவும் இல்லையென்றாலும் 'தேநீர் விருந்து' மகிழ்ச்சியாக நடைபெறும்.

'தேநீர் விருந்து', ரியோ-சான் குழந்தைகளுக்கு அளித்த மிகப் பெரும் வியத்தகு கொடையாகும். மேலும் குழந்தைகள் அவரவர் வழியில் பிரிந்து செல்வதற்கு முன் விளையாடிய கடைசி விளையாட்டும் அதுதான்.

ரியோ-சான், டோக்கியோ இரயிலில் ஏறிச் சென்றார். ரியோ-சான் அங்கிருந்து சென்றதும் அமெரிக்க விமானங்கள் அங்கு வந்ததும் ஒரே நேரத்தில் நிகழ்ந்தது. கடைசியில் அமெரிக்க விமானங்கள் டோக்கியோ வானத்தில் தோன்றி தினமும் குண்டுகளை வீசத் தொடங்கின.

## அய்யோ! அய்யோ!

டோமோயி எரிந்தது. அது இரவில் நடந்தது. மியோ-சானும், அவளது சகோதரி மிசா-சானும் அவர்கள் அம்மாவும்-அவர்கள் அனைவரும் பள்ளிக்கு அருகில் இருந்த வீட்டில் இருந்தனர். டோமோயி பண்ணை வழியாக ஓடி குகோன்புட்சு கோயிலில் பாதுகாப்பிற்காகத் தஞ்சம் அடைந்தனர்.

பள்ளி அறைகளாகப் பயன்பட்ட ரயில் பெட்டி வகுப்புகளின் மீது 'பி29' குண்டு வீச்சு விமானங்கள் ஏராளமான குண்டுகளை வீசின.

தலைமையாசிரியரின் கற்பனையால் உருவான அந்தப் பள்ளியை நெருப்பு சூழ்ந்தது. தலைமையாசிரியர் விரும்பிய, குழந்தைகளின் சிரிப்பு, குழந்தைகளின் பாடல் சத்தத்திற்குப் பதிலாக அச்சந்தரும் சத்தத்துடன் அப்பள்ளி வீழ்ந்தது. அணைக்க முடியாத அந்தத் தீ எரிந்து தணிந்தது. அதன் ஜுவாலை ஜியுகோகா வரை தெரிந்தது.

இவ்வளவும் நடந்து கொண்டிருக்கும்போது, தலைமையாசிரியர் ரோட்டில் நின்று டோமோயி எரிவதை அமைதியுடன் பார்த்துக் கொண்டிருந்தார். அவர் வழக்கம்போல் அழுக்கான கறுப்பு உடை அணிந்து நின்று கொண்டிருந்தார். அவர் கைகள் சட்டைப் பையினுள் இருந்தன.

பல்கலைக்கழகத்தில் படித்துக் கொண்டிருந்த, அருகில் நின்ற அவரது மகன் டோமோயிடம், "அடுத்து நாம் எந்த வகையான பள்ளியைக் கட்டலாம்" எனக் கேட்டுக் கொண்டிருந்தார். டோமோயி

வாயடைத்துப்போய் அதைக் கேட்டுக் கொண்டிருந்தான்.

இப்பொழுது பள்ளியைச் சூழ்ந்திருந்த தீயைவிட, திரு. கோபயாஷி குழந்தைகளிடம் கொண்டிருந்த பாசமும், அவரது கற்பிக்கும் ஆர்வமும் சக்திமிக்கது. தலைமையாசிரியருக்கு வருத்தம் ஏதுமில்லை..

மக்களை வெளியேற்றும் நெருக்கடி மிகுந்த ரயிலில் கூட்ட நெரிசலில் டோட்டோ-சான் பெரியவர்கள் நடுவே நசுங்கிக் கொண்டு இருந்தாள். அந்த ரயில் வடகிழக்குத் திசை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. ஜன்னல் வழியே அவள் இருட்டை ஊடுருவிப் பார்த்த போது, "நாம் மீண்டும் சந்திப்போம்", என தலைமையாசிரியர் வழியனுப்பும் போது கூறிய வார்த்தைகளையும், அவர் மீண்டும் மீண்டும் அடிக்கடி கூறும் "உனக்குத் தெரியுமா? நீ உண்மையிலேயே நல்ல பெண்" என்ற வார்த்தைகளையும் நினைத்துப் பார்த்தாள். அவள் அவ்வார்த்தைகளை மறக்க விரும்பவில்லை. திரு. கோபயாஷியை மீண்டும் பார்ப்போம் என்ற நம்பிக்கையில் அவள் உறக்கத்தில் ஆழ்ந்தாள்.

அந்த இரயில் ஏக்கம் நிறைந்த பயணிகளைச் சுமந்து கொண்டு, உறுமலுடன் காரிருளின் நடுவே சென்று கொண்டிருந்தது.

# முடிவுரை

அந்த வகுப்பறை ரயிலில் என்னோடு பயணம் செய்த என் நண்பர்கள் இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் தெரியுமா?

## அகிரா தாகாஹாஷி

தாகாஹாஷி, விளையாட்டு விழாவில் அனைத்துப் பரிசுகளையும் வென்றவன், ஒரு போதும் உயரமாக வளரவில்லை. ஆனால், ரக்பி காற்பந் தாட்டக் குழுவிற்காக ஜப்பானில் புகழ்பெற்ற ஒரு உயர்நிலைப்பள்ளிக்குத் தன் வண்ணக் கனவுகளுடன் சென்று சேர்ந்தான். பின்னர் மெய்ஜி பல்கலைக்கழகத்தில் சேர்ந்து மின்னணுப் பொறியியல் பட்டம் பெற்றான்.

தற்போது மத்திய ஜப்பானில், ஹமானா ஏரிக்கு அருகில் உள்ள ஒரு பெரிய மின்னணு நிறுவனத்தில் பணியாளர்களுக்கான மேலாளராகப் பணியாற்றுகிறார். அங்கு வேலை பார்க்கும் ஊழியர்களின் நல்லிணக்கத் திற்கு அவர்தான் பொறுப்பாளர். அவர் ஊழியர்களின் குறைகளையும், புகார்களையும் கேட்டு, தகராறுகளுக்குத் தீர்வு காணவேண்டும். அவரே பல சிரமங்களுக்கு உள்ளாகி உள்ளதால் மற்றவர்களின் பிரச்சினைகளை எளிதில் புரிந்து கொள்கிறார். அவரது மகிழ்வான மனநிலையும், மற்றவர்களைக் கவரும் தனித்தன்மையும்கூட அவர்களுக்கு மிகவும் உதவு கிறது. தொழில் நுட்ப வல்லுநர் என்ற முறையில் ஒருங்கிணைந்த மின் சுற்றுக்கள் உள்ள பெரும் இயந்திரங்களின் பயன்பாடு குறித்து இளைஞர்களுக்குப் பயிற்சி அளிக்கிறார்.

நான் ஹாமாமட்சுவில் உள்ள தாகாஹாஷியையும் அவரது மனைவியையும் பார்க்கச் சென்றிருந்தேன். அவரது மனைவி அன்பாகவும், அவரைப் பற்றி புரிந்தவராகவும் இருந்தார். டோமோயி பற்றி தாகாஹாஷி கூறுவதைக் கேட்டுக் கேட்டு அவரது மனைவிக்கு தானே டோமோயில் படித்தது போன்ற உணர்வு இருப்பதாகத் தெரிவித்தார். தனது வளராத் தன்மை பற்றி தாகாஹாஷிக்கு மனச்சிக்கல் ஏதும் இல்லையென்பதை அவர் மனைவி உறுதிப்படுத்தினார். அவள் சொன்னது மிகச் சரியானது என்றே நான் கருதுகிறேன். மனச்சிக்கல் ஏற்பட்டிருந்தால் அவர் படித்த பெருமை மிக்க உயர்நிலைப் பள்ளியிலும் பல்கலைக்கழகத்திலும், வாழ்வே மிகச் சிரமமாக மாறியிருக்கும். தற்போதுள்ள பணியாளர்கள் துறையில் பணியாற்றுவதும் மிகச் சிரமமாக ஆகியிருக்கும்.

தாகாஹாஷி, டோமோயில் தனது முதல் நாளைக் குறித்து விளக்கும்போது, "நான் அங்கு வந்தவுடனேயே உடல் ஊனமுற்ற வேறு

சிலரைப் பார்த்ததும் நானும் அவர்களில் ஒருவன் என்ற உணர்வை ஊட்டி மனதை லேசாக்கியது. அந்த நிமிடம் முதல் எனக்கு மனத்தளர்வே ஏற்படவில்லை. ஒருநாள் கூட வீட்டில் தங்க விருப்பமின்றி பள்ளி வந்துள்ளேன். அங்கு ஒவ்வொரு நாளையும் முழுமையாக நான் அனுபவித்துள்ளேன் எனக் கூறினார். அங்கு முதலில் உடைகளின்றி நீச்சல் குளத்திற்குச் செல்லலாம் எனக் கூறியபோது அது மனதை நெருடுவதாய் இருந்தது. ஆனால் ஒவ்வொரு உடையாகக் களையும்போது வெட்க உணர்வும் சிறிது சிறிதாக மறைந்தது. அதேபோல் உணவு வேளையில் மற்றவர்களுக்கு நடுவே நின்று பேசும்போதும் குறை தோன்றவில்லை" என்று விவரித்துக் கூறினார்.

தன்னைவிட உயரமான மரக் குதிரையைத் தாண்ட திரு. கோபயாஷி எப்படி ஊக்கப்படுத்தினார் என்பதைக் கூறினார். அவர் எப்பொழுதுமே "உன்னால் தாண்ட முடியும், நம்பு" எனக் கூறுவார். ஒருவேளை கடைசி நேரத்தில் தாண்டுவதற்கு அவர் உதவி இருக்கலாம். ஆனால் கடைசி நிமிடம் வரை அதைத் தாண்ட என்னால் முடியும் என்ற உணர்வை அவர் எனது மனதில் தோற்றுவித்திருக்கிறார். தாண்டிய பின்னும் நானே அதைச் செய்தேன் என நம்பும்படியும் நடந்து கொள்வார். திரு. கோபயாஷி நம்பிக்கை பெறக் கற்றுத் தந்ததோடு ஒரு சாதனை நிகழ்த்தும் போது ஏற்படும் விவரிக்க முடியாத மனமகிழ்ச்சியை அனுபவிக்கவும் வாய்ப்பளித்திருந்தார். வாழ்க்கையில் ஏற்படும் ஏற்ற இறக்கங்களையும், சிக்கல்களையும் சந்திக்க நேர்முக அணுகுமுறைத் தன்மைகளை வளர்த்துக் கொள்வதற்கும், வாழ்வில் முன்னேறும் வகையிலும், தலைமையாசிரியர் திரு. கோபயாஷி மாணவர்களை வளர்த்ததாகக் கூறினார். தயக்கத்தின் காரணமாக பின்னால் ஒளிந்து கொள்ள முயலும் போதெல்லாம் அவர் முன்னுக்குக் கொண்டு வந்து திறமைகளை வளர்க்க உதவியிருக்கிறார் என்றார். விளையாட்டு விழாவின் போது போட்டிகளில் வெற்றி பெற்றதும் ஏற்பட்ட வெற்றிப் பெருமிதத்தை நினைவு கூர்ந்தார். டோமோயில் படித்தபோது ஏற்பட்ட பழங்கால நிகழ்ச்சிகளை கண்கள் விரிய மகிழ்வோடு நினைவு கூர்ந்தார்.

தாகாஹாஷி அந்த அளவிற்கு நல்ல மனிதனாக வளர்ச்சி பெறுவதற்கு அவருக்கு அமைந்த நல்ல குடும்பச் சூழலும் முக்கியக் காரணம். அந்த அளவிற்கு திரு.கோபயாஷியும் நெடு நோக்கோடு நாங்கள் வளர உதவி இருந்தார். அவர் என்னிடம் "உண்மையிலேயே நீ நல்ல பெண் தெரியுமா?" எனத் தொடர்ந்து அடிக்கடி கூறி வந்ததைப் போலவே அவர் தாகாஹாஷியிடம் "உன்னால் முடியும்" என்பதை அடிக்கடி கூறியுள்ளார். இச்சொல்லே அவரது வாழ்க்கையைச் சிறப்பாக அமைத்துக் கொடுத்துள்ளது.

ஹாமாமட்சுவில் இருந்து நான் திரும்பவிருந்த நேரத்தில், நான் முற்றிலும் மறந்துவிட்ட ஒன்றை தாகாஹாஷி கூறினார். அவர் சிறுவனாய் இருந்தபோது டோமோயி பள்ளிக்கு வரும் வழியில் வேறு பள்ளிகளில் படிக்கும் சிறுவர்களால் கேலியும் கிண்டலும் செய்யப்பட்டு மனம் சோர்ந்து தலை கவிழ்ந்து பள்ளியில் நுழைந்தபோது, டோட்டோ-சான்

மின்னல் வேகத்தில் அவர்களைத் துரத்திச் சென்றதையும், சிறிது நேரத்தில் திரும்பி வந்து, "தற்போது சரி செய்துவிட்டேன். மீண்டும் இதுபோல் நிகழாது" என உறுதியளித்ததையும் நினைவு கூர்ந்தார். "அப்போது என்னை மிகவும் மகிழ்ச்சியடையச் செய்தது நீதான்" என்றார். நான் இதை முற்றிலும் மறந்துவிட்டேன். பிரியும்பொழுது இந்நிகழ்ச்சியை நினைவூட்டியதற்காக நான் தாகாஹாஷிக்கு நன்றி கூறினேன்.

## மியோ-சான் (மியோகானேகோ)

திரு. கோபயாஷியின் மூன்றாவது மகள் மியோ-சான், கல்வித்துறையின் கீழ் உள்ள குனிடாச்சி இசைக் கல்லூரியில் பட்டம் பெற்று தற்போது அக்கல்லூரியுடன் இணைக்கப்பட்டுள்ள ஆரம்பப் பள்ளியில் இசை ஆசிரியையாகப் பணியாற்றி வருகிறாள். அவளது தந்தையைப் போலவே அவளும் சிறுகுழந்தைகளுக்குக் கற்பிப்பதில் மகிழ்ச்சி அடைகிறாள். அவளுக்கு மூன்று வயதாக இருக்கும்போது, மியோ-சானின் நடையையும் இசைக்குத் தகுந்தவாறு உடல் அசைவதையும், அவள் பேசத் தொடங்கியதையும், திரு கோபயாஷி உற்றுக் கவனித்துக் கற்றார். அதுவே அவர் குழந்தைகளுக்குக் கற்றுக் கொடுப்பதில் மிகவும் உதவியது.

## சாக்கோ மட்சுயாமா

(தற்போது திருமதி.சைட்டோ)

சாக்கோ-சான், பெரிய கண்களையுடைய அப்பெண்தான் நான் டோமோயிக்கு முதல்நாள் சென்றபோது முயல் படம் போட்ட மேற்சட்டை அணிந்திருந்தாள். அவள் டோமோயில் முடித்ததும், அந்தக் காலத்தில் பெண்கள் சேருவதற்கு மிகவும் சிரமமாய் இருந்த மிதா உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்தாள். பின்னர் டோக்கியோ பெண்கள் கிறித்துவப் பல்கலைக்கழகத்தில் ஆங்கிலத் துறைக்குச் சென்றாள். அதன்பின் இளம் கிறித்துவ ஒன்றியத்தில் ஆங்கிலப் பயிற்றுனராகி இன்னும் அங்கேயே உள்ளாள். தற்போது அவள் தனது கோடைக்கால முகாம்களில், டோமோயில் பெற்ற அனுபவங்களைப் பயன்படுத்திக் கொள்வதுண்டு.

ஜப்பானின் ஹொடாகா மலைகளில் மலையேற்றம் சென்றபோது சந்தித்த ஒருவனை அவள் மணந்து கொண்டாள். அவர்கள் சந்தித்த மலை முகட்டின் நினைவாக யாசுதாகா என அவர்களின் மகனுக்குப் பெயரிட்டுள்ளனர்.

## தாயிச்சி யமநோச்சி

என்னை மணந்து கொள்ள மாட்டேன் என்று கூறிய டாய்-சான், ஜப்பானின் புகழ்பெற்ற இயற்பியல் அறிஞர்களுள் ஒருவராய் மாறினார். "அறிவு வெளியேற்றத்திற்கு" எடுத்துக்காட்டாக அவர் அமெரிக்காவில் வாழ்ந்து கொண்டிருக்கிறார். அவர், டோக்கியோ கல்விப் பல்கலைக்கழகத்தின் அறிவியல் துறையில் இயற்பியல் பட்டம் பெற்றார். அவரது எம்.எஸ்ஸி படிப்பிற்குப்பின் பரிமாற்றத் திட்டத்தின் கீழ் 'புல் பிரைட்' தகைமையுடன் அமெரிக்கா சென்றார். ஐந்து ஆண்டுகளுக்குப்

பின் அங்கு ரோசெஸ்டர் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டம் பெற்றார். பின்னர் அங்கேயே இருந்து உயர் சக்தி இயற்பியலில் சோதனை ஆய்வுகள் மேற்கொண்டார். தற்போது அவர் இல்லினாய்சில் உள்ள உலகின் மிகப்பெரிய பெர்மி தேசிய விசை ஆய்வுக் கூடத்தில் உதவி இயக்குநராக உள்ளார். அது அமெரிக்காவில் உள்ள 53 பல்கலைக் கழகங்களிலுள்ள அறிஞர்களைக் கொண்ட ஆய்வுக்கூடமாகும். அது 145 இயற்பியல் வல்லுநர்களையும், 1400 தொழில் நுட்பப் பணியாளர்களையும் கொண்ட மிகப் பெரிய நிறுவனமாகும். இங்கு பணியாற்றுவதிலிருந்தே டாய்-சான் எவ்வளவு பெரிய அறிவாளி என்பதைத் தெரிந்து கொள்ளலாம். அந்த ஆய்வுக் கூடம், ஐந்தாண்டுகளுக்கு முன், 500 பில்லியன் எலக்ட்ரான் வோல்ட்ஸ் சக்தியுடைய உயர் விசைக் கதிர்க்கற்றையை உற்பத்தி செய்வதில் வெற்றி கண்டபோது உலகின் கவனத்தை ஈர்த்தது.

சமீபத்தில் டாய்-சான், கொலம்பியா பல்கலைக்கழகப் பேராசிரியர் ஒருவருடன் இணைந்து, "உப்சிலான்" என அழைக்கப்படும் ஒன்றைக் கண்டுபிடித்துள்ளார். ஒருநாள், டாய்-சான் நிச்சயம் நோபல் பரிசு பெறுவார் என்ற நம்பிக்கை எனக்குண்டு.

ரோசெஸ்டர் பல்கலைக்கழகத்தில் கணிதத்தில் பட்டம் பெற்ற ஒரு புத்திசாலிப் பெண்ணை டாய்-சான் மணந்துள்ளார். இவ்வளவு திறமைக்கும் டாய்-சான் படித்த ஆரம்பப்பள்ளிதான் காரணம் என்பதில் ஐயமில்லை. குழந்தைகள் அவர்கள் விரும்பும் பாடத்தை எந்த முறையிலும் கற்றுக் கொள்ளலாம் என்ற டோமோயின் முறைதான் அவரது திறமை வளர்ச்சிக்குக் காரணம் என நான் நினைக்கின்றேன். அவர் சாராய விளக்கு, குடுவை, சோதனைக் குழாய் இவற்றுடன் பணியாற்றியதையும், வித்தியாசமாக உள்ள அறிவியல் இயற்பியல் நூல்களைக் கடுமையாகப் படித்ததையும் தவிர, அவர் மாணவராக இருந்தபோது வகுப்பில் செய்த வேறு செயல் எதையும் என்னால் நினைவுகூர இயலவில்லை.

## குனியோ ஓஇ

எனது சடையைப்பிடித்து இழுத்த 'ஓஇ' தற்போது ஜப்பானின் தொலைக் கிழக்கு வண்ண மலர்ச்செடிகளின் வல்லுநராய் உள்ளார். அவரது வண்ண மலர்ச்செடிகளின் அடித்தண்டுகள், பதியன்கள் பத்தாயிரக் கணக்கான டாலர்கள் மதிப்புள்ளவை. அவரது துறை தனித்திறமை வாய்ந்த துறையாகும்.

அவரது திறமை ஜப்பான் முழுவதும் தேவைப்படும் திறமைகளில் ஒன்றாகும். எனவே அவர் எப்பொழுதும் பயணம் செய்து கொண்டே இருப்பார். எனவே மிகச் சிரமப்பட்டு அவரை நான் தொலைபேசியில் பிடித்தேன். இவரது இரு பயணங்களுக்கு இடைப்பட்ட நேரத்தில் அவருடன் தொலைபேசியில் கீழ்கண்டவாறு விரிவாகப் பேசினேன்.

"டோமோயிலிருந்து நீங்கள் எந்தப் பள்ளிக்குச் சென்றீர்கள்?"

"நான் வேறு எங்கும் படிக்கவில்லை"

"வேறு எங்கும் படிக்கவில்லையா? டோமோயிதான் நீங்கள் படித்த ஒரே பள்ளியா?"

"ஆம்... அப்படித்தான்"

"என்ன ஆச்சரியம். நீங்கள் உயர்நிலைப்பள்ளிக்குக் கூட செல்லவில்லையா?"

"ஆமாம். நான் சில மாதங்கள் ஓய்டா உயர்நிலைப்பள்ளிக்குச் சென்று கொண்டிருந்தபோது, கியூசுவிற்கு வெளியேற்றப்பட்டேன்"

"ஆனால் உயர்நிலைப்பள்ளிப் படிப்பை முடிக்க வேண்டுமென்பது கட்டாயம் அல்லவா?"

"அது சரிதான். ஆனால் நான் முடிக்கவில்லை"

'ஓ... இவ்வளவு மகிழ்ச்சியாய் இருக்க இவர் எவ்வளவு கொடுத்து வைத்தவராக இருக்கவேண்டும்?' என நினைத்துக் கொண்டேன்.

யுத்தம் ஏற்படுவதற்கு முன் ஓஇயின் தந்தைக்கு மிகப் பெரிய நர்சரிப் பண்ணை சொந்தமாக இருந்தது. டோக்கியோவிற்கு தென்மேற்கில் தோடோரோகி என்ற இடத்தில் அப்பண்ணை இருந்தது. ஆனால் யுத்தத்தின்போது குண்டு வீச்சில் அது முற்றிலும் அழிந்து விட்டது. ஓஇ தொடர்ந்து பேசியதில் அவரது மென்மையும், அமைதியான சுபாவமும் வெளிப்பட்டது.

"மிகவும் நறுமணமுள்ள பூ எதுவென உனக்குத் தெரியுமா?"

"எனக்குத் தெரிந்தவரை சீனத்து இளவேனிற்கால மலர்ச்செடி தான்(சிம்பிடியம் வைரஸ்சென்ஸ்). அதற்கிணையான நறுமணம் வேறு எதுவும் கிடையாது"

"அது விலை உயர்ந்ததா?"

"சில விலை உயர்ந்தவை. சில அப்படி அல்ல"

"அது எதைப்போல் இருக்கும்"

"நல்லது. அவை சிறிது பகட்டாகவும் இருக்காது; அடங்கியும் இருக்காது. அதுதான் அதன் சிறப்பு"

அவர் டோமோயில் இருந்தபோது வைத்திருந்த அன்பில் சிறிதும் மாறவில்லை. ஓஇயின் கவலையற்ற குரலைக் கேட்டபோது நான் நினைத்தேன். அவர் பள்ளிப்படிப்பை முடிக்காதது குறித்து சிறிதும் கவலைப்படவில்லையே? அவர் தனது சொந்தப்பணியை தன்னம்பிக்கை யோடு செய்துள்ளார். அது மனதில் பதிந்தது.

## காசுவோ அமதேரா

மிருகங்களை நேசிக்கும் அமதேரா வளர்ந்ததும் கால்நடை மருத்துவராய் ஆக விருப்பம் தெரிவித்திருந்தவர். தற்போது ஒரு பண்ணை வைத்திருந்தார். எதிர்பாராவிதமாக அவரது தந்தை திடீரென மரணமடைந்து விட்டதால், தன் வாழ்வில் பெரும் மாற்றங்களைச் செய்ய வேண்டியதாயிற்று. நிகான் பல்கலைக்கழகத்தில் கால்நடை மருத்துவம் மற்றும் பராமரிப்புப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்த தனது படிப்பை விட்டுவிட்டு கெய்யோ மருத்துவமனையில் ஒரு வேலையில் சேர்ந்தார். தற்போது அவர் பாதுகாப்புப் படையில் மத்திய மருத்துவமனையில், நோய் சோதனைப் பகுதியில் முக்கியப் பொறுப்பில் உள்ளார்.

## எய்கோ சைஷோ
(தற்போது திருமதி தானகா)

எய்கோ சைஷோ, அவளது பெரியப்பா அட்மிரல் தாகோ, டோமோயிலிருந்து ஆவோயமா ஹாகுன் உடன் இணைக்கப்பட்டிருந்த தொடக்கப் பள்ளிக்குச் சென்று சேர்ந்தாள். அந்தக் காலத்தில் இவள் அமைதியான அடக்கமுள்ள பெண்ணாக வருவாள் என நான் எண்ணியதுண்டு. அவளது தோற்றம் அப்படித்தான் இருக்கும். ஏனெனில் அவள் தன் தந்தையை இழந்திருந்தாள். அவர் மூன்றாவது பாதுகாப்புப் படைப்பிரிவில் மேஜராக இருந்தார். மஞ்சூரியன் தாக்குதலின் போது கொல்லப்பட்டார்.

காமகுரா பெண்கள் உயர்நிலைப்பள்ளியில் தனது படிப்பை முடித்தபின் எய்கோ, ஒரு கட்டிடக் கலை வல்லுநரைத் திருமணம் செய்து கொண்டாள். தற்போது அவளது வளர்ந்த இரு மகன்களும் சுயதொழிலில் ஈடுபட்டுள்ளனர். அவள் தனது ஓய்வு நேரத்தைக் கவிதைகள் எழுதுவதில் செலவிட்டு வருகிறாள்.

"அப்படியானால் பேரரசர் மெய்ஜியின் அவையில் புலவராய் இருந்த, புகழ்பெற்ற தங்கள் அத்தையின் பாரம்பரியத்தைத் தொடர்கிறீர்கள் அல்லவா?" என நான் கேட்டேன்.

"அப்படியொன்றுமில்லை", சங்கடப்பட்டு சிரித்துக் கொண்டே பதிலளித்தாள்.

"நீங்கள் டோமோயில் எப்படி இருந்தீர்களோ அது போன்றே இப்பொழுது உள்ளீர்களா?" என்றேன்.

மறுமொழியாக "உங்களுக்குத் தெரியும், நான் பென்கையுடன் விளையாடும்போது எவ்வளவு மகிழ்வாக இருந்தேனோ அவ்வளவு மகிழ்வாக இப்பொழுதும் உள்ளேன்" என்றாள்.

அவளது குரல், அவளது குடும்ப வாழ்க்கை எவ்வளவு மகிழ்ச்சியாக உள்ளது என்று என்னை உணர வைத்தது.

## கெய்கோ ஆவோகி
(தற்போது திருமதி குவாபரா)

கெய்கோ-சான், பறக்கும் கோழிக்குஞ்சை வைத்திருந்தவள், கெய்யோ பல்கலைக்கழகத்திலுள்ள தொடக்கப்பள்ளியில் பணியாற்றும் ஒரு ஆசிரியரை மணந்திருந்தாள். அவருக்குத் தற்போது ஒரு திருமணமான மகள் இருக்கிறாள்.

## யோய்சி மிகிதா

மிகிதா—அனைவருக்கும் இழவு கொழுக்கட்டை தருவதாகக்கூறிய சிறுவன்—தோட்டக்கலையில் பட்டம் பெற்ற பின்னும், ஓவியம் வரைவதில் விருப்பம் இருந்ததால், மீண்டும் கல்லூரிக்குச் சென்று, முசாசினோ நுண்கலைக் கல்லூரியில் பட்டம் பெற்றுள்ளார். தற்போது அவர் தனது சொந்தத் தொழில் முறை ஓவிய நிறுவனத்தை நடத்தி வருகிறார்.

### ரியோ-சான்

ரியோ-சான், காவலராய் இருந்து யுத்தத்தின் போது போர்ப்படையில் சேர்ந்தவர். ஆரோக்கியமாக வீடு வந்து சேர்ந்தார். ஒவ்வொரு ஆண்டும் நவம்பர் மூன்றாம் நாள் நடைபெறும் மறு சந்திப்புக் கூட்டத்திற்கு அவர் வரத் தவறுவதே இல்லை.

Lasertypeset at Capital Creations, New Delhi and printed at
The Central Electric Press, New Delhi